# சென்னைக்கு வந்தது கார்கில்!



"கிட்டத்தட்ட இரண்டு கி.மீ. தூரத்திலுள்ள எதிரியையும் இந்தத் துப்பாக்கியால் குறிபார்த்துச் சுட முடியும். இதன் எடை 24 கிலோ. இதைத் தவிர, தண்ணீர், உணவு, துப்பாக்கி குண்டுகள் போதாததற்கு புல்லட் புரூப் ஜாக்கெட்டுகள் (இதன் எடை மட்டும் 25 கிலோ) என்று மொத்தம் 80 கிலோ எடையைத் தூக்கிக் கொண்டு மலைச் சிகரங்களில் பயணம் செய்து எதிரிகளைச் சுட வேண்டும். கார்கில் யுத்தத்தின்போது டைகர் சிகரத்தை மீட்ட நமது வீரர்கள் பெரும்பாலும் பயன்படுத்திய துப்பாக்கி இதுதான்!" என்று சென்னை ரெஜிமெண்டைச் சேர்ந்த ராணுவ வீரர் ராவ் விவரித்தபோது கூட்டம் ஆர்வமுடன் கேட்டது.

"அங்கிள்... ஒரு தடவை சுட்டுக் காண்பிக்கிறீங்களா?" என்று ஐந்து வயது சுட்டிப் பையன் கணேஷ் கேட்டபோது, "நீ பெரிய ஆளானதும் நீயே எனிமியைச் சுடலாம்!" என்று சொல்லிச் சிரித்த ராவ், கார்கில் யுத்தத்தின் போது பட்டாலிக் பகுதியில் நான்கு மாதங்கள் பணியாற்றியவர். அதைப் பற்றிக் கேட்டபோது "ஒரு த்ரில் நாவலே எழுதலாம்" என்றார்.



சென்னை ராணுவ பயிற்சிக் கல்லூரியின் 50வது பிறந்த நாளின் போது ஒரு கண்காட்சிக்கு ஏற்பாடு செய்திருந்தது ராணுவம். இந்திய ராணுவம் பயன்படுத்தும் பல்வேறு ஆயுதங்கள், ராணுவ வாகனங்கள் ஆகியன காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. கார்கில் யுத்தத்தின்போது நமது விமானப் படையினர் வகைவகையான விமானங்கள், ஹெலிகாப்டர்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தினர். அவற்றின் சிறு மாடல்களையும் வைத்திருந்தார்கள். சூதாட்ட பாணியில் ஏராளமான பொழுதுபோக்கு அம்சங்களும் கண்காட்சியில் இடம் பெற்றன. இருந்தாலும் ராணுவத்திற்கு ஆள் எடுப்பது சம்பந்தமாக ஒரு ஸ்டால் வைத்திருந்தார்கள். 'என்னென்ன தகுதிகள் வேண்டும்' என்பதையெல்லாம் அச்சடித்துக் கொடுத்தது மட்டுமல்லாமல் சந்தேகங்களுக்கும் பதில் சொன்னார்கள். பொழுதுபோக்கு அம்சங்களுக்கு உள்ள அதே அளவு கூட்டம், ராணுவ ரெக்ரூட்மெண்ட் ஸ்டாலிலும் இருந்தது!

— ஆர்.எஸ்.

படங்கள்: பி.கே.எம்.

# பீகாரின் முடிவில் பி.ஜே.பியின் தலையெழுத்து!



• பிரியங்கா



• வாஜ்பாய்

நடக்கவிருக்கும் நான்கு மாநிலத் தேர்தல் களத்தில் குஸ்தியிடுவதற்காக எல்லாக் கட்சிகளும் தோமுமைகளைத் தயார் செய்து கொண்டிருக்கின்றன. பீகார், ஒரிசா, ஹரியானா, மணிப்பூர் ஆகிய நான்கு மாநிலங்களில் தேர்தல் என்றாலும் பீகாரின் முடிவுகள்தான் மத்திய அரசின் தலைவிதியை நிர்ணயிக்கும் என்று பேசப்படுகிறது.

ஒரு நீண்ட இடைவெளிக்குப் பிறகு இந்தத் தேர்தலுக்காக மூன்றாவது அணி ஒன்றை உருவாக்கியிருக்கிறார், மார்க்ஸிஸ்ட் கட்சியின் வித்தகரான ஹர்கிஷன் சிங் சுர்ஜித். லாலு என்கிற அரசியல் அச்சைச் சுற்றி இந்த அணியை உருவாக்கியிருக்கிறார் சுர்ஜித். தேர்தலுக்குப் பிறகு இந்த அணி, தேசிய அளவிலும் ஒரு வடிவம் பெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

ஆனால், இப்போது பீகாரில் வரிந்து கட்டிக் கொண்டு களத்தில் இறங்கியிருப்பவை நான்கு அணிகள். பி.ஜே.பி. – சமதா – ஐக்கிய ஜனதா தளக் கூட்டணி, லாலுவின் ராஷ்ட்ரிய ஜனதா தளம் – மார்க்சிஸ்ட் கட்சிக் கூட்டணி, சி.பி.ஐ – முலாயம் சிங்கின் சமாஜ்வாதி கட்சிக் கூட்டணி, சோனியா கட்சி தனியாக என்று நான்கு அணிகள்.

இந்நிலையில் காங்கிரஸும், ஓரளவுக்கு பீகாரில் லாலுவின் அணியும் கணக்குப் போட்டுக் கொண்டிருக்கின்றன.

எத்தனைதான் ஊழல் குற்றச்சாட்டுகள் இருந்தாலும் அத்தனையையும் மீறிக் கொண்டு இன்னமும் பீகாரில் ஜொலித்துக் கொண்டிருப்பவர் லாலுதான். அதனால், ஒருவேளை முழுப் பெரும்பான்மை பெறாவிட்டாலும் கூட்டணியின் தனிப் பெரும்பான்மையுள்ள கட்சியாக வந்தாலே கூடப் போதும். சோனியா கட்சியோ அல்லது முலாயம்சிங் – சி.பி.ஐ. கூட்டணியோ, மதவாதம்தான் எங்களின் முதல் எதிரி என்கிற கோஷத்தோடு லாலுவை ஆதரிக்க முன்வரா

செல்வாக்குள்ள சி.பி.ஐயும் தனித்தனியாக வோட்டுகளைப் பிரிப்பதால் வெற்றி தங்களுக்கே என்று பி.ஜே.பியும், இதே காரணத்தால் தங்களுக்கே வெற்றி என்று

லாம். அப்போது மத்திய பி.ஜே.பி. ஆட்சிக்குப் பெரும் தலைவலிதான் என்கிற நிலை.

ஒருவேளை, பி.ஜே.பி. கூட்டணி வென்று ஆட்சிக்கு வந்தாலும் அந்த ஆட்சி நிலைப்பதற்கான சாத்தியக்கூறுகளே இல்லை என்கிறார்கள். காரணம், யார் முதல்வர் என்பதில் பி.ஜே.பி. கூட்டணியில் ஏகப்பட்ட பேருக்குப் போட்டி. இதனால் பி.ஜே.பி. கூட்டணிக்குள் தொகுதிப் பங்கீடே பெரும் பிரச்னையில்தான் ஆரம்பமானது.

ஒரிசாவிலும் பி.ஜே.பி. கூட்டணியில் உரசல்கள்தான். பிஜு ஜனதா தளத் தலைவர் நவீன் பட்நாயக்தான் முதல்வர் என்று தில்லியிலுள்ள பி.ஜே.பி. மேலிடம் அறிவித்தாலும் ஒரிசாவிலுள்ள மாநில பி.ஜே.பியினர் ஒப்புக் கொள்வதாயில்லை. பி.ஜே.பி. மாநிலத் தலைவர்களில் ஒருவரான திலீப் ரே தம்மைத்தான் முதல்வராக அறிவிக்க வேண்டுமென்று கட்சிக்குள் கோஷ்டி சேர்த்து வருகிறார்.



• முலாயம் சிங்



• லாலு



• ஹர்கிஷன் சிங் சுர்ஜித்

ஹரியானா, மணிப்பூரில் பி.ஜே.பிக்கு அவ்வளவாக வாய்ப்பில்லை என்பதால் மற்ற இரு மாநிலங்களில்தான் அதிக கவனம் செலுத்துகிறது பி.ஜே.பி.

இந்த இடியாப்பச் சிக்கல் அரசியலில் சோனியா கட்சியின் நிலைதான் பரிதாபம். வோட்டு வாங்குவதற்காக யாரை முன்னிறுத்துவது என்று யோசித்து யோசித்து, இறுதியில் பிரியங்காவிடம் சரணடைந்திருக்கிறது கட்சி.

பீகாரைப் பொறுத்தவரை ஜாதி, மத, நிலவுடைமை அரசியல்தான் முன்னிலை வகிக்கிறது என்பதால், அங்கே பிரியங்காவின் செல்வாக்கு ஒன்றும் பலிக்காது என்கிறார்கள். ஒரிசாவில் வீசிய புயல் பல்வேறு பாதிப்புகளை ஏற்படுத்தியதோடு நிற்காமல், ஆளுங்கட்சியான காங்கிரஸின் செல்வாக்கையும் பெருமளவுக்குச் சேதப்படுத்தி விட்டது. அந்தச் சேதத்தைப் பிரியங்காவால் ஓரளவுக்கு ஈடுகட்ட முடியும் என்று நம்புகிறார்கள். மணிப்பூரில் எந்த ஆட்சி அமைந்தாலும் அது இந்திய அரசியலில் எந்தவிதமான பாதிப்பையும் ஏற்படுத்திவிடப் போவதில்லையென்றாலும் இந்தியாவில் காங்கிரஸ் ஆளும் மாநிலங்கள் என்கிற எண்ணிக்கைக்கு அது உதவும் என்பதால் அங்கும் பிரியங்காவின் பிரசாரம் தீவிரமாக இருக்குமென்கிறார்கள். அதனால் பயனும் இருக்குமென்று நம்புகிறார்கள். ஹரியானாவிலும் பிரியங்காவின் செல்வாக்கு பலனளிக்கலாம் என்றும் கணக்கிடப்படுகிறது.

ஆக, சுதந்தர இந்தியாவின் மிகப் பழைமையான ஒரு கட்சி, இன்றைக்கு நம்பிக் கொண்டிருப்பது, நேரு குலக் கொழுந்தின் மிகச் சிறியதொரு தளிரைத்தான்! என்ன பரிதாபம்!

— வெங்கட்



• சோனியா

## கோர்ட் தீர்ப்பு

டான்ஸி மற்றும் நிலக்கரி வழக்கு களிலிருந்து விடுதலை என்பது ஜெய லலிதாவுக்கு இந்த ஆண்டு கிடைத்த மாபெரும் பொங்கல் பரிசு. முதல் நாள் நெடுஞ்செழியன் மறைவால் சோகத்தில் இருந்த அ.தி.மு.க. வட்டாரம் அன்று மாலை மல்லி காவுக்குக் கிடைத்த தண்டனையைக் கேட்டு அதிர்ச் சிக்குள்ளானது. அதிர்ச்சி + சோகம் என்று இரு முனைத் தாக்குதல்களுக்கு நேர்மாறாக, மறுநாள் மதியம் உயர்நீதிமன்றத்தி லிருந்து, வழக்கறிஞர் ஜோதி மூலமாக, இந்த சந்தோஷச் செய்தி போயஸ் கார்டனை வந்தடைந்தது.

தனி நீதிமன்றத்தில் ஜெ. மீது மொத் தம் ஐந்து வழக்குகள் பதிவுசெய்யப் பட்டு விசாரணை நடந்து வந்தது. டான்ஸி சம்பந்தப்பட்ட இரண்டு வழக்குகளில் தற்போது ஜெ. விடுவிக் கப்பட்டிருக்கிறார். கொடைக்கானல், பிளசண்ட ஸ்டே ஹோட்டல் வழக்கு, அளவுக்கு அதிகமாக சொத்து சேர்த்தது, கலர் தொலைக்காட்சி வாங்கியதில் ஊழல் என்று மூன்று வழக்குகளில் விசாரணை நடந்து வருகிறது. இவற்றில் கொடைக்கானல் ஹோட்டல் வழக்கில், ஜனவரி 24 அன்று வெளியாக இருந்த ஸ்பெஷல் கோர்ட் தீர்ப்பு ஒத்தி வைக் கப்பட்டிருப்பதாகவும் மீண்டும் விவா தம் தொடரும் என்றும் திடீரென்று அறி விக்கப்பட்டுள்ளது. இந்த வழக்குகள் தவிர மீனா விளம்பர நிறுவனத்துக்குக் கொடுத்த சலுகை பற்றிய வழக்கில் இன்னமும் குற்றச்சாட்டு பதிவுசெய்யப் படவில்லை. சி.பி.ஐயால் போடப்பட் டுள்ள மூன்று லட்சம் அமெரிக்க டாலர் தொடர்பான வழக்கும் எழும்பூர் பொருளாதார குற்றவியல் நீதிமன்றத்தில் நடந்து வருகிறது.

"நாங்கள் முதலிலிருந்தே சொல்லி வருகிறோம்; இவையெல்லாம் பொய் வழக்குகள்; வேண்டுமென்றே- பழி வாங்குவதற்காகவே போடப்பட்டவை. எல்லா வழக்குகளில் இருந்தும் அம்மா விடுவிக்கப்படப் போகிறார்" என்று மகிழ்ச்சியோடு சொன்னார் அ.தி. மு.கவின் முன்னாள் அமைச்சர் ஒருவர்.

டான்ஸி மற்றும் நிலக்கரி வழக்குகளிலிருந்து விடுதலை என்பது ஜெயலலிதாவுக்கு இந்த ஆண்டு கிடைத்த மாபெரும் பொங்கல் பரிசு.



இப்போதே ஆட்சியைப் பிடித்த சந்தோஷத்தில் இருக்கிறார்கள் அ.தி.மு.க. பிரமுகர்கள்.

"இந்த இடைவெளி போதும்; தூள் கிளப்பிடுவோம். வரும் இடைத் தேர்தல்களில் வெற்றி எங்களுக்குத்தான். நல்ல வேளையாக இந்தத் தீர்ப்புகள் இப்போது வந்தன. சென்ற பா.ஜ.க. ஆட்சி

# அதிர்ச்சியும் ஆனந்தமும்!

யின் போது வந்திருந்தால் அம்மா மிரட்டி வாங்கியதாகப் பழிபோட்டு இருப்பார்கள். உங்களுக்குத் தெரியுமா? கோட்டையில் இப்போதே அதிகாரிகள் ஆளும்கட்சியினரின் துஷ்பிரயோகங்களுக்கு பிரேக் போடத் துவங்கி விட்டார்கள்" என்று சொன்னார் அவர். காற்று மாறி வீசத் துவங்கி விட்டதாகக் கோட்டை அதிகாரிகள் நினைக்கிறார்களாம். பல ஸீனியர் அதிகாரிகள், தங்களுக்குத் தெரிந்த அ.தி.மு.க. பிரமுகர்களுடன் மீண்டும் நெருங்கத் துவங்கியிருக்கிறார்களாம்.

"கொடைக்கானல் ஹோட்டல் வழக்கில் எங்கள் பொதுச் செயலாளரை விடுவிக்க செஷன்ஸ் கோர்ட்டில் நான் ஆஜரானேன். அப்போதே அரசு வழக்கறிஞரான நடராஜனிடம், "நீங்கள் போட்டுள்ள எந்த வழக்கும் கோர்ட்டில் நிற்கப் போவதில்லை" என்று சொன்னேன் என்கிறார் அ.தி.மு.க. பாராளுமன்றக் குழுத் தலைவரும், ஸீனியர் வழக்கறிஞருமான பி.ஹெச். பாண்டியன். 'வழிகாட்டு நெறிகள் விதிகளல்ல' என்று நீதிபதி சொன்னது சரிதான். நமது நாட்டில் வழிகாட்டு நெறிகளை

'நமக்கு நாமே' 'வருமுன் காப்போம்' 'உழவர் சந்தை' 'கால்நடை மருத்துவ முகாம்' என்று பல்வேறு நலத் திட்டங்களை அறிமுகப்படுத்தி, வரும் சட்டமன்றத் தேர்தலில் பாஸிடிவ் வோட்டு வாங்கும் முயற்சியில் இருக்கும் கலைஞருக்கு அரசியல் ரீதியாக ஒரு சவால்.



யாரேனும் கடைப்பிடிக்கிறார்களா? 1973ல் வந்த சட்டப்படி மாநகராட்சியில் உள்ள மேயரும், துணைமேயரும் சொத்துக் கணக்குக் காண்பிக்க வேண்டும்; இல்லையேல் பதவியிழக்க வேண்டியிருக்கும். இங்கு என்ன நடக்கிறது? 1969ல், எல்லா சட்டமன்ற உறுப்பினர்களும் (அமைச்சர்கள் உட்பட) சொத்துக் கணக்கு காண்பிக்க வேண்டும் என்று சட்டமன்றத்தில் தீர்மானமே போடப்பட்டது. அதை யாராவது கடைப்பிடிக்கிறார்களா? சட்டங்களுக்கும் தீர்மானத்திற்கும் இந்த மதிப்புத்தான்.

"அவ்வளவு ஏன்? தேர்தலின் போது பல வழிகாட்டுநெறிகள் சொல்லப்படுகின்றன. அவையெல்லாம் அப்படியே கடைப்பிடிக்கப்படுகின்றனவா? பொது ஊழியர், அரசு சொத்தை வாங்கக்கூடாது என்றால், எந்த அமைச்சரும், சட்டமன்ற உறுப்பினரும் ஹவுசிங் போர்டு, நிலம், வீடு கூட வாங்கக் கூடாது. எங்கள் பொதுச் செயலாளர் மீது போடப்பட்ட வழக்குகளில் முதலிலிருந்தே பத்திரிகைகளும் அரசாங்கமும் சேர்ந்து, 'குற்றம் செய்து விட்டாற்போல ஒரு தோற்றத்தை உருவாக்கி வந்தன. இப்போது நீதி வென்றிருக்கிறது!" என்றார் பாண்டியன்.



"பெண்ணைப் புடிச்சிருக்குன்னு ஏன் சொன்னீங்கப்பா?"
"ஏன்டா?"
"உங்களுக்குப் புடிச்சிருக்கிற ஒரே காரணத்துக்காக அம்மா இந்தப் பெண்ணையும் வேண்டாம்னு சொல்லிட்டாங்க!"
— ஞா. ஞானமுத்து

"பெரிய பொறுப்பிலுள்ளவர்கள் சந்தேகத்துக்கு அப்பாற்பட்டவர்களாக இருக்க வேண்டுமென்பதற்காகத்தான் இதுபோன்ற வழிகாட்டு நெறிகள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. சட்டத்தை ஊடுருவிப் பார்த்துப் பகுக்கும் போது, அந்தச் சட்டம் என்ன காரணத்திற்காகக் கொண்டு வரப்பட்டதோ அதற்கேற்றாற்போல பகுக்க (interpret) வேண்டுமே தவிர, அதற்கு எதிராக, மோசமான விதத்தில் பகுக்கக் கூடாது' என்று நீதிமன்றங்கள் பலமுறை சொல்லியிருக்கின்றன. எந்தவிதமான விசாரணையும் இல்லாமலேயே ஜெயலலிதாவுக்கு உயர்நீதிமன்றத்தில் தீர்ப்பு கிடைத்திருக்கிறது. அடிப்படையாக இது சரியில்லை என்பதே என் கருத்து" என்று சொல்கிறார் ஸீனியர் வழக்கு ரைஞரான கே.எம். விஜயன். ஜெ. மீது நேரிடையாக வழக்குப் பதிவு செய்யாமல் 1952 சட்டப்படி விசாரணை கமிஷன் அமைத்து, அதன் முடிவுகளுக்கேற்ப கோர்ட்டில் வழக்குப் போடப்பட்டிருந்தால் அவை உறுதியாக இருந்திருக்கும் என்று நீதிமன்ற வட்டாரத்தில் ஒரு பேச்சு இருக்கிறது. "நோ... நோ... அதுபோன்று ஆரம்பித்தால் கால விரயம் ஏற்படுவது மட்டுமின்றி ஊழல் ஆசாமிகள் தப்பிக்கவும் வாய்ப்பு உண்டு. தமிழக அரசு செய்தது சரிதான்!" என்கிறார் விஜயன்.

மிகவும் அதிர்ச்சிக்குள்ளாகி இருப்பது தி.மு.க. வட்டாரம்தான். பொங்கலையொட்டி நிருபர்களைச் சந்தித்து மல்லிகா வழக்கிலான தீர்ப்பு கொடுத்த சந்தோஷத்தைப் பகிர்ந்து கொள்ள கோட்டையில் காத்திருந்த முதல்வருக்கு இடியாக 'ஜெ. விடுதலை' பற்றிய செய்தி வந்து சேர்ந்தது. பிரஸ்மீட் கேன்சல் செய்யப்பட்டது. கோட்டை உயரதிகாரிகளும் மற்றும் சி.பி. சி.ஐ.டி. போலீஸ் அதிகாரிகளும் முதல்வரைச் சந்திக்கவே தயங்கினர். 'நமக்கு நாமே' 'வருமுன் காப்போம்' 'உழவர் சந்தை' 'கால்நடை மருத்துவ முகாம்' என்று பல்வேறு நலத் திட்டங்களை அறிமுகப்படுத்தி, வரும் சட்டமன்றத் தேர்தலில் பாஸிடிவ் வோட்டு வாங்கும் முயற்சியில் இருக்கும் கலைஞருக்கு அரசியல்ரீதியாக ஒரு சவால். இதனால் தலைவரே ஒன்றும் பேச முடியாத நிலையில் இருக்கும்போது தி.மு.க. பிரமுகர்கள் வாய் மூடி இருப்பதில் ஆச்சர்யமில்லை.

"சுப்ரீம் கோர்ட் அப்பீலில் வேறுவிதமான தீர்ப்பு கிடைக்கும். இந்த இடைப்பட்ட சந்தோஷத்தைத்தான் கொஞ்சம் அவர்கள் அனுபவிக்கட்டுமே!" என்றார் அமைச்சர் ஒருவர். "1996ல் சட்டமன்றத் தேர்தலில், ஊழல் புரிந்தவர்களுக்கு தண்டனை பெற்றுத் தருவோம் என்று சொல்லித்தான் நாங்கள் தேர்தலில் வென்றோம் மக்களுக்குக் கொடுத்த அந்த உறுதிமொழிப்

# ரூ.510/- விலை மதிப்புள்ள இங்கிலீஷ் கோர்ஸ் ரூ.150/- மட்டுமே!

**3 டிவிஷன்களின் பேக்கேஜ்**

| டிவிஷன்-1 | டிவிஷன்-2 | டிவிஷன்-3 | ரூ. |
|---|---|---|---|
| ரூ. 130/- | ரூ. 170/- | ரூ. 210/- | 510/- |

**டிவிஷன் -1** ABCD முதற்கொண்டு ஆங்கிலத்தில் படிக்கவும் எழுதவும் கற்றிந்து நல்லொருவருக்கும் தேவையான நிலையில் ஸ்டாண்டர்ட் இங்கிலீஷ் கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின் :. பீஸ் ரூ. 130/-

**டிவிஷன் -2** பிழைகள் இன்றி ஆங்கிலம் எழுத தேவையான இங்கிலீஷ் இலக்கணம் முறையாக, கலை ஆத்திரங்களாக, எளியாக கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின்:. பீஸ் ரூ. 170/-

**டிவிஷன் -3** வெகு சுலபமாக எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் தடுமாறாமல், பிழைகளின்றி, மிகவும் சுலபமாக பேச கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின் :. பீஸ் ரூ. 210/-

## புத்தாண்டுப்பரிசு ஒரு டைரி இலவசம்! + 24 மினி கோர்ஸ்கள்




## 12 மொழிகளின் கோர்ஸ்கள் (12 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. ஹிந்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 2. தெலுங்கு ஸ்பீக்கிங் கோர்ஸ் 3. கன்னடம் ஸ்பீக்கிங் கோர்ஸ் 4. மலையாளம் ஸ்பீக்கிங் கோர்ஸ் 5. பெங்காலி ஸ்பீக்கிங் கோர்ஸ் 6. மராத்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 7. பஞ்சாபி ஸ்பீக்கிங் கோர்ஸ் 8. குஜராத்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 9. அரபிக் ஸ்பீக்கிங் கோர்ஸ் 10. உருது ஸ்பீக்கிங் கோர்ஸ் 11. ஓரியா ஸ்பீக்கிங் கோர்ஸ் 12. சான்ஸ்கிரிட் ஸ்பீக்கிங் கோர்ஸ்

## 8 ஃபென்டாஸ்டிக் கிஃப்ட் கோர்ஸ்கள் (8 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. ஈஸி மணி ஏர்னிங் கோர்ஸ் *(சுலபமாக பணம் சம்பாதித்தல்)*
2. சீக்ரெட் மேஜிக் கோர்ஸ் *(நீங்களும் மேஜிக் செய்யலாம்)*
3. ஜென்டில்மேன்ட்னெஸ் கோர்ஸ் *(ஆண்களின் ...)*
4. பியூட்டி ட்ரீட்மெண்ட் கோர்ஸ் *(அழகாய் தோற்றமளிப்பது எப்படி)*
5. சக்ஸஸ்புல் எக்ஸாமினேஷன் கோர்ஸ் *(தேர்வுகளுக்கு தயார் செய்யும் கோர்ஸ்)*
6. யோகா கோர்ஸ் *(வெவ்வேறு யோகாசனங்களின் விளக்கங்கள்)*
7. "பாமிஸ்ட்ரி" கோர்ஸ் *(உங்களது கைரேகை கூறும் எதிர்காலம்)*
8. கிச்சன் ட்ரீட்மெண்ட் கோர்ஸ் *(சமையலறையில் பெண்களின் ...)*

## 4 கோர்ஸ் கிஃப்ட் புத்தகங்கள் (4 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. **வர்டு பவர்** *(ஆங்கில சொற்களின் அற்புத சக்தி)*
2. **லெட்டர் ரைட்டிங் பிராக்டீஸ்** *(இங்கிலீஷில் கடிதம் எழுதும் முறை)*
3. **அப்ரிவேஷன்ஸ் டிக்ஷனரி** *(டெக்னிகல் சொற்களின் டிக்ஷனரி)*
4. **வெர்ப்ஸ் டிக்ஷனரி** *(வினை சொற்கள்- அதன் ரூபங்கள்)*

**இக்கூப்பனை பூர்த்தி செய்து உடனே அனுப்பவும்**

**STUDENTS' ENGLISH INSTITUTE**

15/1, Parthasarathipuram' Extn. T. Nagar, Chennai - 600 017.

எனக்கு *டிவிஷன் 1, டிவிஷன் 2, டிவிஷன் 3, (மொத்தம் 3 டிவிஷன்கள்)* தற்பொழுது ரூ. 510/- விலை மதிப்புள்ள இங்கிலீஷ் கோர்ஸ் இலவச பாக்கெட்சைஸ் புத்தகங்கள் அனைத்தும் (8+12+4) மற்றும், புது வருட டைரியையும், அனைத்து புத்தகங்களையும் சேர்த்துரூ. 150/-க்கான வி.பி.பி அனுப்பவும். போஸ்ட்மேன்டம் பணம் தந்து எனது பேக்கேஜை பெற்றுக்கொள்கிறேன்.

731

Name ..............................

Address ..............................

.............................. Pin Code

படிதான் நாங்கள் நடவடிக்கை எடுத்தோம். ஒன்றிரண்டு வழக்குகளில் போதிய வலுவான சாட்சியங்கள் இல்லாமல் ஜெ. விடுதலை பெற்றாலும் ஏதேனும் ஒரு வழக்கில் அவர் தண்டனை பெற்றே தீருவார்!" என்று உறுதியாகச் சொன்னார் அவர்.

அ.தி.மு.க. முன்னாள் மாண்புமிகுகள் மீது நேரடியாகவே எஃப்.ஐ.ஆர். பதிவு செய்து வழக்கு தாக்கல் செய்யப்பட்ட முன்னுதாரணம் இருப்பதால் 'ஜெ.வுக்கு ஆதரவான அரசியல் சூழல்' இன்றைய அமைச்சர்களுக்கு கிலியை ஏற்படுத்தி இருக்கிறது. நீதிபதி தங்கராஜுக்கு எதிராக போஸ்டர் போட்ட தென்சென்னை தி.மு.க. பிரமுகர், தலைமையால் கண்டிக்கப்பட்டிருக்கிறார். ஏனெனில் இதுபோன்ற செயல்கள் கட்சி யைப் பாதிக்கும் என்பதைத் தலைமை உணர்ந்திருக்கிறது.



''நகரத்துப் பெண்களையும் கவரணும்யா!''
''அதுக்காக நீங்க யோசித்து வைத்திருக்கிற இலவச ஜீன்ஸ், சுரீதார் திட்டம் சரிப்பட்டு வருமா தலைவரே?''
– ஞா. ஞானமுத்து

அ.தி.மு.க.வுக்கு ஆனந்தம் கொடுத்த தீர்ப்பினை வழங்கிய நீதிபதி தங்கராஜ் ஓய்வு பெற இன்னும் மூன்று மாதங்கள்தான் இருக்கின்றன. கீழ்நிலை மாஜிஸ்திரேட் பதவியில் இருந்து படிப்படியாய் உயர்ந்தவர் இவர். 1974-ல் மு.க.முத்து நடித்த பூக்காரி படத்தின் போஸ்டரை கிழித்ததாக மதுசூதனன் மீது அப்போதைய கலைஞர் அரசு வழக்குத் தொடர்ந்தது. ஜார்ஜ் டவுன் மாஜிஸ்திரேட்டாக இருந்த தங்கராஜ் ஆதாரம் இல்லையென்று மதுவை விடுதலை செய்தார். இப்போது தமது தீர்ப்பால் ஆத்திரமடைந்துள்ள தி.மு.க.வினர் தம்மைத் தாக்கி போஸ்டர் ஒட்டியுள்ளதைக் கூட நீதிபதி எதிர்க்கவில்லை.

நீதிமன்றத்தின் இந்தத் தீர்ப்பால் மிகவும் கதிகலங்கிப் போயிருப்பது குற்றப் புலனாய்வுத் துறை போலீஸ்தான். குறிப்பாக விசாரணை அதிகாரி ஜம்புகுமார் மிகவும் தளர்ந்து போய் விட்டார். ஓய்வுபெற்ற பின்பும் இந்த வழக்குகளுக்காகவே பணி நீட்டிப்புப் பெற்று செயல்பட்டு வந்தார் அவர். பணிநீட்டிப்பு முறைப்படி அரசால் அங்கீகரிக்கப்படாததால் அவருக்குச் சம்பளமும் நிலுவையில் உள்ளது. அவரைப் போலவே கண்காணிப்பாளர் துர்க்கையாண்டியும் நல்லம்மா நாயுடுவும் அதிர்ச்சிக்குள்ளாகி விட்டார்கள். அரசு வழக்கறிஞர் நடராஜன்தான் தில்லிக்கும் சென்னைக்குமாக அலைந்து அப்பீல் வேலையில் ஈடுபட்டிருக்கிறார். பிரபல வழக்கறிஞர்கள் இந்த வழக்கில் தமிழக அரசுக்காக சுப்ரீம் கோர்ட்டில் ஆஜராக இருக்கிறார்கள்.

இந்த வழக்கில் வந்த தீர்ப்பின் காரணமாக, அ.தி.மு.க.வுடன் நெருங்குவதற்கு, த.மா.காவுக்கு இருந்த தயக்கம் சுத்தமாக நீங்கி விட்டதாகச் சொல்கிறார்கள். இடைத்தேர்தலில் நெல்லிக்குப்பம் தொகுதியை த.மா.காவுக்கு விட்டுக் கொடுக்கத் தயார் என்று அ.தி.மு.க, கூட்டணி எதுவும் அமையும் முன்னரே தாராளம் காட்டியிருக்கிறது!

தங்களது சந்தோஷத்தை வெளிப்படையாகக் காட்ட த.மா.காவினர் தயங்குகிறார்கள். "இந்தத் தீர்ப்பின் காரணமாகவே, அ.தி.மு.க. ஆட்சியில் ஊழலே நடக்கவில்லை; ஜெயலலிதா கை சுத்தம் என்றெல்லாம் நாங்கள் சொல்லவில்லை. இப்போதிருக்கும் அரசியல் சூழ்நிலையில் எங்களுக்கு வேறு வழியில்லை. பா.ஜ.க.வுடன் தி.மு.க. தன் உறவை அறுத்துக் கொண்டால்தான் நாங்கள் இந்த நிலையைத் தவிர்ப்பதற்கான வாய்ப்பு வரும்" என்று சொன்னார் ஒரு த.மா.கா. பிரமுகர். "தி.மு.க.வுக்கும் பா.ஜ.க.வுக்கும் விரைவில் பிணக்கு வரலாம்" என்றும் சொன்னார் அவர்!

எனவே இப்போது, சாணக்கியத்தனமான செயல் திட்டங்களைக் களத்தில் இறக்க வேண்டிய கட்டாயத்தில் தி.மு.க. இருக்கிறது; இல்லையேல் புதிய தெம்புடன் புறப்பட்டிருக்கும் அ.தி.மு.க.வை சமாளிப்பது மிகவும் கடினமாகிவிடும்!

— ப்ரியன்

அட்டை வண்ணப்படம்: **சௌந்தர்ராஜன்**

## இந்தியக் குடியரசுக்குப் பொன் விழா :

# பத்து சதவிகிதத்தினருக்கு மட்டுமே பயன்தரும் ஜனநாயகம்!

சில ஆண்டுகளுக்கு முன்பு, இந்திய விடுதலைப் பொன் விழாவினை வெகு கோலாகலமாகக் கொண்டாடினோம். இவ் வருடம், நம் இந்தியக் குடியரசுக்குப் பொன் விழா என்பது பலருக்கும் நினைவிருக்காது. இந்திய அரசியல் சாசனத்தின் வரைவு, அரசியல் நிர்ணய சபையில் விவாதிக்கப்பட்டு, 1949-ம் வருடம் நவம்பர் 26-ம் தேதி ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதன் பின்னர் 1950 ஜனவரி இருபத்தி ஆறாம் தேதி நடைமுறைக்கு வந்தது.

கடந்த ஐம்பது ஆண்டுகளில், இந்தியா தனது குடியரசின் மூலமாக சாதித்தவை என்ன? சந்தித்த சோதனைகள் என்ன? சாதிக்கத் தவறியது என்ன? என்று விஷயம் தெரிந்தவர்கள் அலசுகிறார்கள்...

**பண்ருட்டி ராமச்சந்திரன் :** தேச ஒற்றுமை காப்பாற்றப்பட்டுள்ளது என்பதே நம் குடியரசின் பெரிய சாதனை. நம்மோடு சுதந்தரம் அடைந்த பாகிஸ்தான், அடுத்து வங்க தேசப் பிரிவினையைக் கண்டு விட்டது. ஆனால், இந்தியாவில் பல மொழிகள், பல மதங்கள், இனங்கள், பல்வேறுபட்ட கலாசாரங்கள், பழக்க வழக்கங்கள். ஆனாலும் வேற்றுமையில் ஒற்றுமை இந்தியாவின் பெரிய பலம். இதற்கு அடிப்படைக் காரணம், இந்திய ஜனநாயகம். முறையாக தேர்தலைச் சந்தித்து, மக்களின் கருத்துக்கு மதிப்பளிக்கும் வகையில் ஆட்சி முறையைக் கொண்டிருப்பதுதான். இந்த பலமான அஸ்திவாரத்தின் மீது இந்தியக் குடியரசு என்ற மாளிகை எழுப்பப்பட்டிருப்பதால் தான், விஞ்ஞானம், விண்வெளி ஆராய்வு, பாதுகாப்பு, விவசாயம் மற்றும் தொழில் துறைகளில் நம்மால் பெருமளவில் சாதனைகள் படைக்க முடிந்துள்ளது.

அதே சமயம், சில மைனஸ் பாயிண்ட்களும் இருக்கின்றன. மக்களாட்சி முறைதான் இந்திய அரசியல் சட்டத்தின் இலக்கணம். ஆனால், அது இயங்கும் முறை காலப்போக்கில் சில சீரழிவுகளைச் சந்தித்து வந்திருக்கிறது. குறிப்பாக கிரிமினல்கள், அரசியல்வாதிகள், அதிகாரிகள் ஆகியவர்களிடையே ஒரு பலமான உறவு நிலவுவதும், இது சட்டத்துக்குப் புறம்பான பல செயல்களுக்குக் காரணமாகி விடுவதையும் குறிப்பிட வேண்டும். இதனால், ஜனநாயகத்தின் பலன், மொத்தத்தில் பத்து சதவீதம் மக்களுக்குக் கூடப் போய்ச் சேரு



• பண்ருட்டி ராமச்சந்திரன்

வதில்லை. மீதமுள்ள தொண்ணூறு சதவீதம் பேர் வெறுமனே வோட்டுப் போடுவதோடு சரி! இந்நிலை மாறிட அரசியல் கட்சிகளின் நடைமுறைகளிலும், தேர்தல் முறைகளிலும் சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட வேண்டும். தேர்தலில் நிற்கும் வேட்பாளர்களுக்குத் தகுதிகள் நிர்ணயிக்கப்பட வேண்டும். அப்போதுதான் உண்மையான ஜனநாயகம் மலரும்.

பல்வேறு மொழி பேசும் மக்களைக் கொண்ட இந்த நாட்டில், அரசியல் கட்சிகள் தம் கொள்கைகளின் அடிப்படையில் மக்களின் செல்வாக்கைப் பெற முடியவில்லை. மாறாக ஜாதி, மத, பிராந்திய அடிப்படையில் உணர்வுகளைத் தூண்டி விட்டு, வாக்குகளைப் பெற முயற்சி செய்கிறார்கள். தவிர, இந்திய அரசியல் கட்சிகள் இன்று நடத்தி வரும் கூட்டணி ஆட்சிக்குப் (Cooperative Federalism) பதிலாக, மாநிலங்களுக்கு இன்னும் அதிக அளவில் அதிகாரங்கள் கிடைக்கும்படியாக effective federalism அமைய வழிவகை செய்யப்பட வேண்டும். இந்த முறையில், மாநிலங்களில் நிலவும் பிரச்னைகளுக்குச் சுலபமாகத் தீர்வு கிடைக்கும்.



• நீதிபதி எஸ். கிருஷ்ணசாமி ரெட்டியார்

**ஓய்வு பெற்ற நீதிபதி எஸ். கிருஷ்ணசாமி ரெட்டியார் :** பல்வேறு சமயங்களிலும், பல்வேறுவிதமான திருத்தங்கள் (இதுவரை 78 முறை) நமது அரசியல் சட்டத்தில் கொண்டு வரப்பட்டுள்ளன என்றாலும், சில திருத்தங்கள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. முதலாவது, சில குறிப்பிட்ட பிரிவினருக்கு இடஒதுக்கீட்டைக் கொண்டு வந்ததுதான். பத்தாண்டுகளுக்கு ஒரு தடவை அது நீட்டிக்கப்படுகிறது. பின் தங்கிய மக்கள் முன்னேற்றம் என்பது இன்னமும் முழுமையாக நிறைவேறாத சூழ்நிலையில், இடஒதுக்கீட்டைத் தொடருவது தவிர வேறு வழியில்லை.

1976-ல், இந்திராகாந்தி கொண்டு வந்த 42வது திருத்தம் குறிப்பிடப்பட வேண்டியது. அதன் மூலமாக நீதித்துறையின் அதிகாரம் கட்டுப்படுத்தப்பட்டு, பாராளுமன்றத்தின் அதிகார வரம்பு விரிவாக்கப்பட்டது. அப்போதுதான், குடிமக்களுக்குரிய அடிப்படைக் கடமைகள் அரசியல் சட்டத்தில் புகுத்தப்பட்டன. அரசியல் சாசனத்தை உருவாக்கிய வல்லுனர்கள் சிந்திக்காத ஒன்று இந்தக் கடமைகள். சொல்லப்போனால், இது அவசியமில்லாதது எனலாம். காரணம், ஒவ்வொருவருக்கும், கடமை என்ன என்பது நமது சனாதன தர்மத்திலேயே இருக்கிறது. அதைச் சட்டம் மூலமாக வற்புறுத்த வேண்டியது இல்லை. கடமை என்பது நாமே ஆற்ற வேண்டியது. உரிமைகளைத்தான் மற்றவர்கள் தரவேண்டும்.

இதே திருத்தத்தின் அங்கமாக, இலவச சட்ட உதவி உட்பட சில நன்மைகளும் ஏற்பட்டதை மறந்து விட முடியாது.

1975-ல் ஜனாதிபதி, உபஜனாதிபதி, பிரதமர், சபாநாயகர் ஆகியோரது தேர்வினை, நீதிமன்ற அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டதாக்கினார் இந்திராகாந்தி. இதற்கு அலகாபாத் நீதிமன்றம் அவருக்கு எதிராக அளித்த தீர்ப்புதான் பின்னணி என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

1971ல் முன்னாள் சமஸ்தானத்தைச் சேர்ந்த மகாராஜாக்களுக்கு அளிக்கப்பட்டு வந்த மானியத்தை ஒழித்து, ஏகோபித்த பாராட்டைப் பெற்றார் இந்திரா காந்தி.

அடுத்த முக்கியமான சட்டத்திருத்தம் ராஜீவ் காந்தி காலத்தில் (1985) கொண்டு வரப்பட்ட கட்சித் தாவல் தடுப்பு நடவடிக்கை. கட்சித் தாவல் மூலமாக ஜனநாயகத்தையே கேலிக்கூத்தாக்கிக் கொண்டிருந்த அரசியல்வாதிகளுக்குத் தரப்பட்ட

நமது அரசியல் சாசனம் இந்தியக் குடிமக்களுக்குள்ள அடிப்படை உரிமைகளைப் பட்டியலிடுகிறது. 1976ல், நாற்பத்து இரண்டாவது திருத்தத்தின்படி, இந்தியக் குடிமக்களுக்கு சில அடிப்படையான கடமைகளும் வரையறுக்கப்பட்டன. அவை என்ன?




**உரிமைகள் :**

சட்டத்தின் முன் அனைவரும் சமம். மதம், இனம், மொழி, ஜாதி, பிறப்பிடம், ஆண், பெண் ஆகிய வேறுபாடுகளின் அடிப்படையிலான வேற்றுமைகள் களையப்பட்டு, சமநிலை காக்கப்பட வேண்டும். இந்தியக் குடிமக்கள் எவரும், நாட்டின் எப்பகுதிக்கும் பயணம் செய்யவும், தொழில் புரியவும், வசிக்கவும் உரிமை உண்டு. எம்மதத்தையும் பின்பற்றவும், அவரவர் தமது மதங்களைப் பிரசாரம் செய்யவும் அரசியல் சாசனம் உத்தரவாதம் தருகிறது.

எந்தக் குடிமகனும், தம் நாகரிகம், கலாச்சாரம், பண்பாடு, மரபுகளைப் பின்பற்றவும், மொழி, எழுத்துக்களைப் பாதுகாக்கவும், சிறுபான்மையினர் கல்வி நிறுவனங்கள் தொடங்கவும் உரிமை உண்டு. நீதிமன்றங்கள் வாயிலாக அடிப்படை உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளவும் நமது அரசியல் சட்டம் வழி செய்கிறது.

கட்டாயத்தின் மூலம் வேலை வாங்கவும், இளஞ்சிறார்களை வேலையில் அமர்த்தவும் அரசியல் சட்டம் தடைசெய்கிறது.

**கடமைகள் :**

இந்திய அரசியல் அமைப்பை அங்கீகரித்து, தேசியக் கொடி, தேசிய கீதத்துக்கு உரிய மரியாதை செய்ய வேண்டியது நம் கடமை. நாட்டின் பாதுகாப்பு, தேசிய நலனுக்கு முன்னுரிமை வழங்குவது, ஜாதி, மத, வேறுபாடுகளைக் கடந்து சகோதரத்துவம் பேணுதல், இந்திய கலாசாரத்தைப் பேணிக் காப்பது, சுற்றுச்சூழலைப் பாதுகாத்து, உயிரினங்களிடத்தில் அன்பு செலுத்துவது போன்றவையும் இந்தியக் குடிமக்களின் கடமை என்கிறது அரசியல் சட்டம். தவிர, தொழில், விஞ்ஞான, விவசாய ஆய்வுகளில் பங்கு ஏற்பது, மனிதநேயம் வளர்ப்பது, பொதுச் சொத்துக்களைப் பாதுகாப்பது, வன்முறையைத் தவிர்ப்பது, இவையும் கூட அரசியல் சாசனத்தில் நமக்கு வரையறுக்கப்பட்டுள்ள கடமைகள்தான்!

தொகுப்பு : **கௌதம்ராம்**

பலமான அடி இது என்றால் மிகையில்லை.

*1989ல்*, பதினெட்டு வயது ஆனவர்களுக்கு வாக்குரிமை வழங்கும் சட்டத் திருத்தத்தை ஜனநாயகப் புரட்சி என்றே குறிப்பிடலாம்.

சமீப கால திருத்தங்களுள் கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு அதிகாரப் பகிர்வு அளிக்கப்பட்டது மிக முக்கியமானது.

இடஒதுக்கீடு, கட்சித் தாவல் தடை, பஞ்சாயத்து ராஜ்யம் போன்றவை, ஏட்டளவில் சிறப்பானவை என்றாலும், செயல்படுத்தும் போது, எதிர்பார்த்த பலன்களை அளிக்கவில்லை என்பது கண்கூடு. பெருகி வரும் மக்கள் தொகை பெரும் சவாலாய் இருக்கிறது. இதனால் இடஒதுக்கீடு போதிய பலன் தரவில்லை. கட்சித் தாவல் தடை தனிநபர் கட்சித் தாவலை நிறுத்திவிட்டாலும் கட்சிகள் உடைக்கப்படுவதைத் தவிர்க்க முடியவில்லை. பஞ்சாயத்துக்களில் அதிகாரங்கள் முழுமையாக பரவலாக்கப்படவில்லை; அவை பொருளாதார ரீதியில் சுயமாக இயங்க விடப்படவில்லை.

நல்ல நோக்கத்தோடு கொண்டு வரப்பட்ட இத்தகைய திருத்தங்கள், முழுமையாகப் பயனளிக்கும்படி செயல்பட, இன்னும் சில நடவடிக்கைகள் தேவைப்படலாம். அவற்றைச் செய்ய அரசு தவறக் கூடாது!

பேட்டி : **பாரதி**

# "முஷ்ரஃப் பேட்டியை பி.ஜே.பி. கண்டுகொள்ளவேயில்லை!"

"இந்தியா – பாகிஸ்தான் உறவு குறித்து ஹிந்து நாளிதழ் ஆழமான அக்கறை கொண்டது. இதற்கு முன்பு பேனசிர் புட்டோவும், நவாஸ் ஷரீபும் பாக். பிரதமர்களாக இருந்தபோது நான் அவர்களை பேட்டி கண்டிருக்கிறேன். அந்த அடிப்படையில், எடுக்கப்பட்ட முயற்சியின் பலன்தான் ஜெனரல் பர்வேஸ் முஷ்ரஃபின் பேட்டியும்" என்கிறார் ஹிந்து நாளிதழின் எக்ஸிகியூடிவ் எடிட்டர் மாலினி பார்த்தசாரதி. ராணுவ நடவடிக்கை மூலமாக அதிரடியாய் பாகிஸ்தான் ஆட்சியைக் கைப்பற்றிய ஜெனரல் முஷ்ரஃபை பேட்டி கண்ட முதல் இந்தியப் பத்திரிகையாளர் இவர்தான்.

முஷ்ரஃபை சந்தித்து பேட்டி கண்ட அனுபவம் எப்படியிருந்தது?

"டெல்லியில் உள்ள பாகிஸ்தான் தூதரிடம், முஷ்ரஃபை பேட்டி காண எங்கள் விருப்பத்தைத் தெரிவித்தோம். அவர் இஸ்லாமாபாதுக்கு அதைத் தெரிவித்தார். ஜனவரி பதினைந்தாம் தேதி பொங்கல் அன்று காலை ஒன்பது மணிக்கு எனக்கு பேட்டியளிக்க ஜெனரல் முஷ்ரஃப் நேரம் ஒதுக்கியிருப்பதாக, வியாழக்கிழமை தகவல் வந்தது. வெள்ளிக்கிழமை, காலையில் புறப்பட்டேன். சென்னையிலிருந்து புது டெல்லி, அங்கிருந்து லாகூர், அப்புறம் இஸ்லாமாபாத் போய்ச் சேர்ந்தபோது இரவு ஒன்பது மணி.

"மறுநாள் காலை. பிரதமராக இருந்தபோது பேனசிர் புட்டோ வசித்த மாளிகையில்தான் ஜெனரல் முஷ்ரஃபை பேட்டி கண்டேன். ஒன்பதரை மணிக்கு பேட்டி ஆரம்பித்தது. அரை மணி நேரம்தான் எனக்கு



• முஷ்ரஃபுடன் பேட்டி (படம் - நன்றி : ஹிந்து)

ஒதுக்கப்பட்டிருந்தது என்றாலும், ஐம்பத்தைந்து நிமிடங்களுக்கு பேட்டி நீடித்தது.

"முஷ்ரஃப் ஒரு ராணுவ தளபதி என்பதால், பேட்டியின் போது இறுக்கமான சூழ்நிலை இருக்கும் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால், என் எதிர்பார்ப்

புக்கு மாறாக, அவர் இருந்தார்."

"குரலில் ராணுவ மிடுக்கு இருந்ததா?"

"இல்லை" என்று பதில் கூறியபடியே, பேட்டி பதிவுசெய்யப்பட்ட டேப்பைப் போட்டுக் காட்டினார் மாலினி பார்த்தசாரதி. சகஜமான உரையாடல் போலவே அது இருந்தது. முஷ்ரஃப் ஒரு கேள்விக்கு பதிலளித்துக் கொண்டிருந்தபோது, மாலினி பார்த்தசாரதி, இடையில் குறுக்கிட்ட போது கூட, உணர்ச்சி வசப்படாமல் தமது பதிலை இடையில் நிறுத்திவிட்டு, மாலினியின் கேள்வி முடித்த பின், பதிலைத் தொடர்ந்தார்.



"அவர் உங்களுக்கு பேட்டியளிக்க ஒப்புக் கொண்டதன் பின்னணி என்ன?"

"அவர் ராணுவ நடவடிக்கை மூலம் ஆட்சியைக் கைப்பற்றி விட்டார் என்பதால், இந்திய அரசு அவரை அங்கீகரிக்கவில்லை என்பது அவர் ஆதங்கம். ஆனாலும் இந்திய மக்களுக்கு, தமது கருத்துக்கள் போய்ச் சேர வேண்டும் என்று விரும்புகிறார். அதற்கு இந்தப் பேட்டி ஒரு வாய்ப்பாக அமையும் என்றுதான் பேட்டியளிக்க ஒப்புக் கொண்டதாக நான் நினைக்கிறேன்."

"கேள்விகளுக்கு எப்படி பதிலளித்தார்? நிதானமாக யோசித்து யோசித்துத்தான் பேசினாரா?"

"இல்லை. சரளமாக, அதே நேரம் கவனமாகப் பேசினார்."

"காஷ்மீர் பிரச்னையை முதலில் பேசி விட்டு, மற்றவை பற்றி அப்புறம் பேசலாம் என்கிற அவரது போக்கு, இந்திய – பாகிஸ்தான் உறவை எந்த அளவுக்கு மேம்படுத்தும்?"

"முந்தைய பிரதமர்கள், பேனசிரும் சரி, நவாஸ் ஷரீபும் சரி, மூன்றாவது நாட்டு மத்தியஸ்தத்துக்குத்தான் முன்னுரிமை வழங்கி

னார்கள். ஆனால், இவர் நேரடியாகப் பேசலாம் என்கிறாரே! அதைப் புத்திசாலித் தனமாக இந்தியா பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பது என் கருத்து."

"ஜனநாயக முறையில் தேர்தலைச் சந்திக்க அவர் தயாராக இருக்கிறாரா?"

"இப்போதைக்குத் தேர்தல் நடத்தும் எண்ணம் அவருக்கு இல்லை என்றே தெரிகிறது."

"பாகிஸ்தானின் சாதாரண மக்களுடன் பேசினீர்களா? அவர்கள் தங்கள் புதிய தலைமை பற்றி என்ன நினைக்கிறார்கள்?"

"பாகிஸ்தானின் அரசியலும், ஆட்சியும் மிக மோசமான நிலையில் இருப்பதாக நினைக்கிறார்கள். அரசியல் சுத்தப்படுத் தப்பட வேண்டும் என்று விரும்புகிறார்கள். தக்கநேரத்தில் அதிரடியாய்ச் செயல்பட்ட முஷ்ரஃப், சுத்தப்படுத்தும் பணியைச் சிறப்பாகச் செய்வதாகவே நினைக்கிறார் கள்."

"அப்படியெனில், தேர்தல் வந்தால், முஷ்ரஃப் ஜெயித்து விடுவாரா?"

"தேர்தல் வந்தால், முஷ்ரஃபைத்தான் தேர்ந்தெடுப்பார்கள் என்பதற்கு உத்தர வாதம் இல்லை. ஆனால், இப்போதைக்கு முஷ்ரஃப்தான் சரி என்பது அவர்கள் கருத்து."

"காஷ்மீர் பற்றி, பாகிஸ்தான் மக்கள் என்ன நினைக்கிறார்கள்?"

"காஷ்மீர், இந்தியாவின் ஒரு பகுதி. எக்காரணம் கொண்டும் அதை பாகிஸ் தானுக்கு விட்டுத் தரக்கூடாது என்று இந்தி யர்கள் நினைப்பது போலவே, காஷ்மீரில் இருப்பவர்கள் தங்களைச் சேர்ந்தவர்கள்; அம்மாநிலம் தவறுதலாக இந்தியாவுடன் இருக்கிறது. காஷ்மீர், பாகிஸ்தானுக்குத்தான் உரியது என்று நினைக்கிறார்கள்!"

"உள்ளூர் பிரச்னைகளைத் தீர்க்க முடி யாத காரணத்தால், மக்களின் கவனத்தை திசைதிருப்ப காஷ்மீரைப் பயன்படுத்து வதுதானே பாக். ஆட்சியாளர்கள் நெடுங் காலமாகக் கடைப்பிடிக்கும் வழிமுறை?"

"அது உண்மைதான். ஆனால், ஒருவிதத் தில் பார்த்தால், இங்கே பி.ஜே.பி. அரசும் அதைத்தானே செய்து கொண்டிருக்கிறது?"

"கார்கில் ஊடுருவலே, முஷ்ரஃபின் முழு ஆசியுடன் நடந்ததுதான். இப்போது, ஆட்சியே அவர் கையில் என்பதால், விரைவில் காஷ்மீரைக் கைப்பற்ற இந்தியா மீது போர் தொடுக்கலாம் என்று கூறப் படுகிறதே! இது எவ்வளவு தூரம் சாத்தியம்?"

"இந்தியாவுடன் போர் என்றால், உலக நாடுகள் மத்தியில் பாகிஸ்தானின் பெயர் ரொம்பவே கெட்டு விடும். எனவே நேரடிப் போரில் இறங்க மாட்டார். அதே நேரம் அவரது ஆசியுடன் தீவிரவாதச் செயல்கள் இங்கே தொடரும் என்பதே என் கணிப்பு."

"பேட்டி வெளியானபின் முஷ்ரஃப்பின் ரியாக்ஷன் என்ன?"

"தெரியவில்லை."

"இந்திய அரசின் ரியாக்ஷன் எப்படி யிருக்கிறது?"

"பா.ஜ.க. அரசு, இதை ஒரு பெரிய விஷய மாகவே எடுத்துக் கொள்ளவில்லை! வாச கர்களைப் பொறுத்தவரை, ஏராளமான வர்கள், 'இந்தியாவுக்கு எதிராக தீவிர வாதத்தை தூண்டி விட்டுக் கொண்டிருக்கும் பாகிஸ்தானி முஷ்ரஃபுக்கு ஏன் இத்தனை பெரிய முக்கியத்துவம்?' என்று உணர்ச்சி வசப்பட்டு எழுதிக் கொண்டிருக்கிறார்கள்! இறுதியில் விடைபெறும்போது, 'நீங்கள் இந்தியாவுக்கு வரும் போது, உங்களுக்கு ஒரு விருந்து அளிக்க விரும்புகிறேன்' என்று நான் சொன்னேன். சிரித்துக் கொண்டே, 'மிக்க மகிழ்ச்சி! என்னை பேட்டி கண்ட முதல் இந்தியப் பத்திரிகையாளராயிற்றே நீங்கள். இந்தியா வந்தால் உங்களைக் கண்டிப்பாகச் சந்திக்கிறேன்' என்று கூறினார் ஜெனரல் முஷ்ரஃப்."

பேட்டி : **எஸ். சந்திரமௌலி**

படம் : **ரவிசங்கரன்**



"பக்கத்து வீட்டு பாமா வாராவாரம் ஞாயிற்றுக்கிழமை மௌனவிரதம் இருக் காளாம்!"

"ஹூம்! அவ புருஷன் கொடுத்து வெச்ச வன்!"

– டி.என்.பாலகிருஷ்ணன்

# பாதுகாப்பான முதலீட்டிற்கு

# பவர்ஃபைனான்ஸ்

## இது ஒரு தமிழக அரசு நிதி நிறுவனம்

**13.14%**

| காலம் | ஆண்டு வட்டி | |
|---|---|---|
| | மாதமொரு முறை | மூன்று மாதங்களுக்கு ஒரு முறை |
| 12 மாதங்கள் & 1 நாள் | - | 12.12% |
| 25 மாதங்கள் | - | 12.63% |
| 36 மாதங்கள், 48 மாதங்கள் & 60 மாதங்கள் | 13% | 13.14% |

**18.18%**

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 13%)

- இந்நிறுவனம் வங்கிப்பணி சாராத நிதி நிறுவனமாக ரிசர்வ் வங்கியில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் பதிவு எண் : 07.00389 ஆகும்.
- முழுமையான பாதுகாப்பிற்கு CRISIL வழங்கியுள்ள FA+ மதிப்பீடு.
- துவக்கத்திலிருந்து தொடர்ச்சியாக இலாபம் ஈட்டி வருகிறது.
- கடந்த மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து 20% ஈவுத்தொகை வழங்கி வருகிறது.




*மேலும் விபரங்களுக்கு :*


**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும்**
**அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

பதிவு அலுவலகம் : 84, டி.டி.கே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

தொலைபேசி : 4997689, 4995648. தொலைநகலி : 044 - 4982894.

Visit us at : www.tnpowerfinance.com www.tninfrafinance.com


DIPR/05/DISPLAY/2000

28-9-99 தேதியிட்ட 'எகனாமிக் டைம்ஸ்' இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

"Also available on the Internet" www.tn.gov.in / www.chennaionline.com

# தேசப் பாதுகாப்புக்குத் தீவிர இலக்குக் கூட்டங்கள்!

● 'விமானக் கடத்தல் விவகாரத்தால் பி.ஜே.பியின் இமேஜ் சரிந்து விட்டது' என்றார் அத்வானி. அவரைத் தொடர்ந்து, "இது, ஹிந்து கோழைத்தனம்!" என்றார் ஆர்.எஸ்.எஸ். தலைவர், ராஜேந்திர சிங். ராஜேந்திர சிங்கின் அறிக்கைக்கு, 'கன்யகுப்ஜ பிராமணரான வாஜ்பாய் தமது பிராமண கோழைத்தனத்தைக் காட்டி விட்டார்' என்று அர்த்தப் படுத்திக் கொண்டார்கள் வாஜ்பாய் வட்டத்தினர். பார்த்தார் பிரதமர், முன்பு தமது சந்திப்பை அத்வானி தவிர்த்து விட்டுப் பண்ணை இல்லத்துக்குச் சென்றது





போல, இப்போது அத்வானியுடன் இணைந்து செல்ல விருந்த தமது குஜராத் பயணத்தை ரத்து செய்தார். அத்வானி கேட்டு வாங்கிப் பெற்ற காஷ்மீர் விவகார விஷயத்தின் மீது தமது தனிப்பட்ட பார்வையைச் செலுத்தினார் பிரதமர். அதன் முன்னோட்டமாக காஷ்மீர் நிலவரத்தைப் பிரத்யேகமாகக் கண்காணிக்க உயர்மட்டக் கூட்டமொன்றைக் கூட்டினார். அத்வானி, ஃபெர்னாண்டஸ், ஜஸ்வந்த் சிங், யஷ்வந்த் சின்கா, மகாஜன் என்று பலருக்கும் பல்வேறு கட்டளைகளைப் பிறப்பித்தார். அதன்படி பார்த்தால், காஷ்மீர் மாநிலத்தைக் கிட்டத்தட்ட ராணுவமே எடுத்துக் கொள்ளுமோ என்கிற நிலை.

அதோடு, ராணுவம் உள்ளூர்ப் பாதுகாப்புப் படை ஒன்றை அமைக்கும். அதன் மூலம் காஷ்மீர் இளைஞர்களுக்குப் பயிற்சியளித்து, தீவிரவாதிகளுடனான யுத்தத்துக்குத் தயார் செய்யப்படுவார்கள். தேவைப்பட்டால் ராணுவ நடவடிக்கை கூட எடுக்கப்படலாம். அப்படியெடுக்கப்பட்டால், வரப்போகிற நான்கு மாநிலத் தேர்தல்களில், மற்ற பிரச்னைகள் பின்னுக்குத் தள்ளப்படும்; அது பி.ஜே.பியின் வெற்றிக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்றும் கணிக்கிறார்கள்.

அது சரி, வாஜ்பாய் – அத்வானி சண்டை என்பது உண்மையானதுதானா என்றால், "அதெல்லாம் சும்மா. இப்படியொரு நாடகம் நடத்தினால்தான் சில இரும்புக்கர நடவடிக்கைகளை எடுக்க முடியும். அது ஒருவேளை தவறாக முடிகிறபோது, பழியை ஒருவர் மீது ஒருவர் போட்டுக் கொண்டு, கட்சியின் இமேஜை காப்பாற்ற முடியும்" என்று ஒரு போடு போட்டார் ஒரு பி.ஜே.பி. தலைவர்.

● இப்போது மத்திய அரசின் எல்லாவிதமான உளவுக் கண்களும் பார்க்கிற இடம் காஷ்மீர் மட்டுமல்ல; வடகிழக்கு மாநிலங்களும்தான். காரணம், காஷ்மீருக்கு அடுத்தபடியாக ஐ.எஸ்.ஐ. ஊடுருவியிருக்கும் பகுதி இதுதான் என்று கருதப்படுகிறது. அதனால், வடகிழக்குப் பகுதியின் ஏழு முதல்வர்களோடும் பல்வேறு உளவு, போலீஸ் துறை அதிகாரிகளுடனுமான கூட்டம் ஒன்றை ஷில்லாங்கில் கூட்டினாரல்லவா பிரதமர். அதைத் தொடர்ந்து, தமிழகம் ஒரு 'மென் பகுதி' என்று கருதப்படுவதால், இங்கும் தீவிர கண்காணிப்பு இருக்குமென்று பேசப்படுகிறது.

● டான்சி வழக்கிலான உச்சநீதிமன்ற அப்பீலுக்காக டெல்லியிலுள்ள சாந்தி பூஷன், நரிமன் ஆகிய இரு பிரபல வக்கீல்களிடம் ஆலோசனை செய்து வருகிறது தமிழக அரசு. இருவருமே தமிழக அரசுக்கான வழக்குகளில் வாதாடுவார்கள் என்றும் பேசப்படுகிறது.

ராஜ தர்பார் :

— இந்த்ரப்ரஸ்தன்







2000 ஜனவரி 30
பிரமாதி தை 16
மலர் : 58
இதழ் : 27

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## விடுவிக்கப்பட்ட டான்ஸி ராணி!

டான்ஸி நிலபேர ஊழல் வழக்கிலிருந்து தம்மை விடுவிக்க வேண்டும் என்று உயர்நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்து வென்றிருக்கிறார் ஜெயலலிதா. தமிழக அரசு உச்சநீதி மன்றத்தில் மேல் முறையீடு செய்யவிருக்கிறது. உச்சநீதிமன்ற முடிவு தெரியும் வரை டான்ஸி வழக்கைச் சிறப்பு நீதிமன்றம் விசாரிக்க முடியாது. ஆனால் இதர வழக்குகள் சிறப்பு நீதிமன்றத்தில் தொடர்ந்து விசாரிக்கப்படும்.

டான்ஸி வழக்கின் அடிப்படை என்ன? அரசுக்குச் சொந்தமான நிலம், அன்றைய முதல்வர் பங்குதாரராயிருந்த நிறுவனத்துக்கு விற்கப்பட்டது; அதுவும் மார்க்கெட் ரேட்டைக் காட்டிலும் குறைவான விலைக்கு விற்கப்பட்டது என்பதுதான்.

அரசாங்க ஊழியர்கள் அரசுச் சொத்துகளை வாங்கக்கூடாது என்பது வழிகாட்டு நெறி தானே தவிர சட்டமல்ல; அதனால் ஜெயலலிதா பேரில் குற்றம்சாட்ட இடமில்லை என்பதே ஜெயலலிதாவை விடுவித்த தீர்ப்பின் அடிப்படை. இந்த வாதத்தை உச்சநீதிமன்றம் அப்படியே ஏற்குமா என்பதைப் பொறுத்திருந்து பார்க்க வேண்டும்.

ப்ளெசன்ட் ஸ்டே ஹோட்டல் வழக்கில், தமது கவனத்துக்கு வராமல் காரியங்கள் நடந்தன; அதனால் தாம் விடுவிக்கப்பட வேண்டும் என்று ஜெயலலிதா வாதாடியபோது, சென்னை உயர்நீதிமன்றம் அந்த வாதத்தை ஏற்கவில்லை. தார்மிகப் பொறுப்பு முதல்வருடையது என்றுதான் தீர்ப்பளித்தது.




டான்ஸி வழக்கை நடத்த ஆளுனர் அனுமதி தந்ததே தவறு என்று உச்சநீதிமன்றத்தில் ஜெயலலிதா முறையிட்டபோது, வழக்குத் தொடர போதுமான ஆதாரங்கள் உள்ளன. எனவே அதைத் தொடரலாம் என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது.

சிறப்பு நீதிமன்ற நீதிபதிகள் நியமனம் தொடர்பாக சென்னை உயர்நீதிமன்றத்தில் 'ஜெ' வழக்குத் தொடுத்தபோதும் டான்ஸி வழக்கு நடத்தப் போதுமான ஆதாரங்கள் இருப்பதாகவே தீர்ப்பு வழங்கப்பட்டது.

இப்போது டான்ஸி வழக்கில் வழங்கப்பட்டுள்ள உயர்நீதிமன்றத் தீர்ப்பு இவற்றிலிருந்து மாறுபட்டு, ஜெயலலிதா நீங்கலான அனைத்து இந்தியர்களையும் ஆச்சர்யத்தில் ஆழ்த்தி யிருக்கிறது.

சென்னை வழக்குரைஞர்கள் அமைப்பு இத் தீர்ப்பு குறித்து நாடுதழுவிய விவாதம் நடத்தப்பட வேண்டும் என்று உறுதியாகக் குரல்கொடுத்திருப்பது, இத் தீர்ப்பின் சர்ச்சைக்குரிய தன்மைக் குச் சான்று.

ஆனால் அத்தகைய விவாதம் நடக்குமா என்பதே சந்தேகம்தான். படித்தவர்கள் 'நமக்கேன் வம்பு' என்று ஒதுங்குவதுதான் இங்கு இயல்பு. மேலும் நம் நாட்டில் எழுதப் படிக்கத் தெரியாத வர்களே அதிகம். இத்தகையவர்களிடத்தில்தான் நீதிமன்றத் தீர்ப்புகளைக் காட்டிலும் முக்கிய மான தீர்ப்பான தேர்தல் தீர்ப்பை வழங்குகிற பொறுப்பும் ஒப்படைக்கப்பட்டுள்ளது. எனவே, நடந்து முடிந்த வழக்கின் விவரங்கள் அவர்களுக்குத் தெளிவாக்கப்பட வேண்டும்.

அரசு சொத்தை அதன் ஊழியர்கள் வாங்கலாகாது என்பது சட்டமல்ல; நன்னடத்தை விதிதான் என்றாலும் ஒரு கோடி ரூபாய் மதிப்புக்கு அதிகமான அரசு சொத்து விற்கப்படும் போது, அதற்கு முதல்வரின் நேரடி சம்மதம் பெறவேண்டும் என்று ஓர் அரசு ஆணை நடை முறையில் இருக்கிறது. இந்த அரசு ஆணையை வெளியிட்டதே ஜெயலலிதா தலைமையிலான அ.தி.மு.க. அரசுதான்.

இதையெல்லாம் சுட்டிக்காட்டி, அன்றைய தொழில்துறைச் செயலர், நிதித்துறைச் செயலர்,

தலைமைச் செயலர் ஆகிய மூன்று உயர் அதிகாரிகள் இந்த பேரத்தைத் தடுக்க முயன்றிருக்கிறார்கள். இதை அந்த மூவரே நீதிமன்றத்தில் வாக்குமூலமாகத் தெரிவித்திருக்கிறார்கள். துணைச் செயலரான கற்பூர சுந்தரபாண்டியன், 'அம்மாவுக்குக் கோபம் வந்துவிடும்' என்று வற்புறுத்தி கோப்புகளை நகர்த்தியதாகவும் நீதிமன்றத்தில் வாக்குமூலம் தரப்பட்டிருக்கிறது. துணைச் செயலரின் செல்வாக்கு செயலர்களின் நேர்மையுணர்வைக் காட்டிலும் பலமாகச் செயல்பட்டிருக்கிறது.

அடுத்து பத்திரப் பதிவு அலுவலகத்திலும் நிலத்துக்குத் தரப்பட்ட விலை, மார்க்கெட் மதிப்பைக் காட்டிலும் குறைவு என்று சுட்டிக்காட்டப்பட்டதாக உயர்நீதிமன்றத்தில் சான்று சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. இங்கேயும் கற்பூர சுந்தரபாண்டியனின் செல்வாக்கு செயல்பட்டது என்பதாக மற்றொரு அரசு துணைச் செயலர் காவல் துறையிடம் வாக்குமூலம் அளித்திருக்கிறார்.

அரசுக்கு இந்த பேரத்தில் அறுபத்தாறு லட்சம் ரூபாய் நஷ்டம். அதாவது மக்கள் சொத்தில் அறுபத்தாறு லட்சம் ரூபாய் 'அல்வா' ஆகியிருக்கிறது.

டான்ஸி நில விற்பனை சம்பந்தமான எந்தக் கோப்புகளிலும் ஜெயலலிதாவின் கையெழுத்து இல்லை. ஒரு கோடி ரூபாய்க்கு மேலான மதிப்புள்ள சொத்து விற்கப்படும் போது முதல்வரின் நேரடி சம்மதம் பெறவேண்டும் என்ற அரசாணை புறக்கணிக்கப்பட்டிருக்கிறது.

ஆனால், அரசாணை சட்டமாகாது. நன்னடத்தை விதிகளெல்லாம் சட்டமாகி விட முடியாது என்பது சென்னை உயர்நீதிமன்றத்தின் நிலை. அதனால் சட்டரீதியாகப் பார்த்தால் ஜெயலலிதா பேரில் எந்தக் குற்றச்சாட்டும் சொல்ல இடமில்லை என்கிறது உயர்நீதிமன்றம்.

மேல் முறையீட்டின் பேரிலான உச்சநீதிமன்றத் தீர்ப்பு, மக்கள் மன்றத் தீர்ப்புக்கு முன்னதாகப் பெறப்படுவது நல்லது. அது எப்படி அமைந்தாலும் தேர்தல் தீர்ப்பு நீதிதேவனுக்குப் பெருமை அளிப்பதாகவும் ஜனநாயகத்துக்கு மதிப்புச் சேர்ப்பதாகவும் அமைய வேண்டும். ○

◆ வருமானவரி முறைகேடு தொடர்பாக ஆறு வழக்குகள் ராஜேஷ்கன்னா மீது போடப்பட்டுள்ளன. இந்த முன்னாள் இந்தி நட்சத்திரம் நீதிமன்றத்துக்கு வர வேண்டாம் என்று விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. காரணம் உடல் நலக் குறைவு என்ற வழக்குரைஞர்களின் வாதம்தான். வழக்கில், அரசு தரப்பில் முக்கிய சாட்சி யார் தெரியுமா? ராஜேஷ் கன்னாவின் மாஜி மனைவியான டிம்பிள் கபாடியா! வாய்தாமேல் வாய்தாவாக வழக்கு வளர்ந்து கொண்டே போகிறது.

◆ பெல்லாரி தொகுதியை வரும் இடைத்தேர்தலில் தங்கள் கட்சிக்கு விட்டுக் கொடுத்து, இரு கட்சிகளுக்கும் இடையே நல்லுறவு ஏற்படுத்த வேண்டும் என்று காங்கிரஸ் கட்சியைக் கேட்டுக் கொண்டிருக்கிறார் பகுஜன் சமாஜ் கட்சித் தலைவர் கன்ஷிராம். தமது கட்சி வேட்பாளராக, முன்னாள் மத்திய அமைச்சர் ஆரிப் முகமத்கானையும் தயார் பண்ணிவிட்டார். ஆனால் காங்கிரஸ்கட்சி, பெல்லாரியை விட்டுத்தரத் தயாரில்லை. நழுவி விட்டது. பா.ஜ.க. பெல்லாரியை ஜனதா தள கட்சிக்கு விட்டுக் கொடுத்து விடப் போகிறது!

◆ ராஷ்மி உதய்சிங் என்ற சமையல் நிபுணர் ஒரு சமையல் புத்தகம் எழுதி

# பிரும்மாண்டமான



யிருக்கிறார். விலை ரூபாய் ஐந்நூறு. இதன் ஸ்பெஷாலிடி என்ன? பெயரே 'பிரபல மானவர்கள் சமையல் புத்தகம்.' அதில் அஜய் ஜடேஜா, ஆஷா போன்ஸ்லே முதல் சுனில் ஷெட்டி வரை ஏகப்பட்ட பிரபலங்கள் தங்களுக்குப் பிடித்த சமையல் ஐட்டங்கள் செய்வது எப்படி என்று விளக்கு கிறார்கள்!

◆ குமரி முனை வள்ளுவரை தூக்கிச் சாப்பிடப் போகிறார் பீகார் புத்தர். ஆம்! புத்த கயாவில் நாற்பத்து ஐந்து ஏக்கர் பரப்புள்ள புதிய பூங்கா ஒன்று உருவாகி வருகிறது. அதில் 150 மீட் டர் உயரத்துக்கு வெண்கலத்தில் செய்யப் பட்ட புத்தர் சிலை நிறுவப்படவுள்ளது. பெயர்: மைத்ரேய புத்தர். பூங்காவும், புத்தர் சிலையும் 2004ம் ஆண்டில் ரெடியாகுமாம்!





# பீகார் புத்தர்!

◆ சில மாதங்களுக்கு முன் டெல்லியை உலுக்கிய அழகி ஜெசிகாலால் கொலைச் சம்பவத்தில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டுள்ளது. அவரது உடலிலிருந்து இரண்டு புல்லட்கள் எடுக்கப்பட்டன. ஆனால், இரண்டும், ஒரே மாதிரியானவை இல்லை; ஒரே துப்பாக்கியில் பயன்படுத்தப்பட்டவையும் இல்லை. அப்படியெனில் அவரை இரண்டு பேர் ஒரே நேரத்தில் சுட்டிருக்க வேண்டும் என்று போலீஸ் கருதுகிறது. சுட்டவர் என்று மனு சர்மா என்ற ஒருவர் கைது செய்யப்பட்டிருக்கிறார். இன்னொருவர் யார்?

◆ பாராளுமன்ற உறுப்பினர் ஷபானா ஆஸ்மியைப் பார்க்கிறவர்கள் 'அட! இது எப்போதிலிருந்து?' என்று ஆச்சரியமாய் ஒரு லுக் விடுகிறார்கள். காரணம், அவர் தமது தலை முடியைக் குட்டையாக வெட்டிக் கொண்டு, ஸ்மார்ட்டாகத் தோற்ற மளிப்பதுதான்!

◆ கிழிந்த ரூபாய் நோட்டு, புழங்குவது நம் ஊரில் புதுசு இல்லை. ஆனாலும் இந்த பத்து ரூபாய் கிழிசல் நோட்டை உற்றுப் பாருங்கள். ஏதாவது கண்டுபிடிக்க முடிகிறதா? இரண்டு வெவ்வேறு பத்து ரூபாய் நோட்டுகளின் பாதியை ஒட்டியிருக்கிறார்கள். பெங்களூரில் டெய்லர் ஒருவரிடம் இந்த நோட்டைக் கொடுத்த கஸ்டமர் ஒருவர் சொன்னது: ''பரவாயில்லை! அட்ஜஸ்ட் பண்ணிக்கங்க!''

◆ இங்குள்ள படம், பார்த்தாலே காந்திஜியுடையது என்று புரிந்து விடும். இதனை வரைந்தவர் முன்னாள் பிரதமர் வி.பி.சிங். படத்தில் ஒரு தவறு உள்ளது. என்னவென்று கண்டுபிடியுங்கள் பார்ப்போம். இரண்டுமே இடதுகால் செருப்புகள்.

தொகுப்பு: **நியூஸ்வாலா**

சுயமரியாதை இயக்கத்தைத் தாம் ஏன் ஆரம்பித்தார் என்பது பற்றி ஓரிடத்தில் பெரியார் எழுதியிருப்பார். "எனக்குப் பெயர் வரவேண்டுமென்றோ புகழ் வர வேண்டுமென்றோ பொருள் வரவேண்டு மென்றோ நான் இதை ஸ்தாபிக்கவில்லை. ஏனென்றால் இவையெல்லாம் வேறு எவரையும் விட எனக்கு அதிகமாகவே இருந்தன. இந்தச் சமூகத்தில் இருக்கிற குறை களை நீக்குவதற்கு எனக்கு வேறு வழி தெரியவில்லை. இந்தச் சமூகத்தைச் சீர் திருத்துகிற தகுதியும் அருகதையும் எனக்கு இருக்கிறதோ இல்லையோ! இதைச் செய்ய வேறு எவரும் முன் வரவில்லையே என்ப தால்தான் இதை என் மேல் போட்டுக் கொண்டு செய்கிறேன்!" என்று அவர் எழுதி யிருந்ததைப் படித்ததும் அவர் மீதிருந்த மரி யாதை மேலும் கூடியது

கூடவே, பக்தியையும் ஒழுக்கத்தையும் பெரியார் பிரித்துப் பார்த்த விதம் என்னுள் ஒரு புதிய பார்வையைச் செலுத்தியது. பக்தி என்பது தனிமனித விஷயம். பக்தி இல்லாத ஒருவன் நரகத்துக்குத்தான் போவான் என்றால், அப்படிப் போவது அவன் ஒருவனை மட்டுமே பாதிக்கிற விஷயம். ஆனால் ஒழுக்கம் என்பது சமூக விஷயம். ஒழுக்கமில்லாத ஒருவனால் அவன் மட்டுமல்லாமல், அந்தச் சமூகமே பாதிக்கப் படும் என்று ஒழுக்கத்துக்கு முக்கியத்துவம் கொடுத்தார் பெரியார்.

# பெரியாரிடம் கேள்வி கேட்டேன்!

இப்படிப்பட்ட அவ ரது ஆழமான சிந்தனை கள் காரணமாக, அவ ரைப் பார்த்துப் பேச வேண்டும் என்கிற எண் ணம் மேலும் மேலும் கூடிக் கொண்டே வந்தது.



இதன் காரணமாக ஒரு நாள் புறப்பட்டு, பெரியார்திடல் வரை வந்து விட்டேன். வந்த பிறகு ஒருவித தயக்கம். உடனே திரும்பி விட்டேன். பிறகு இன்னொரு நாள் புறப்பட்டு வந்தேன். அப்போது பெரியார் திடலுக்குள் வரைதான் என்னால் செல்ல முடிந்ததே தவிர, அதற்கப்புறம் செல்வதற்கு முடியவில்லை. இன்னும் சில சமயங்களில் அவர் இருக்கும் அறை வாசல் வரை வந்து விடுவேன். இருந்தாலும் உள்ளே போகும் துணிச்சல் இல்லாமல் திரும்பி விடுவேன்.

இப்படியே இரண்டொரு மாதங்கள் சென்றன. ஆனாலும் பெரியாரைச் சென்று பார்த்துப் பேசுவதற்கான தைரியம் மட்டும் எனக்கு வரவேயில்லை. அதனால் உட் கார்ந்து யோசிக்க ஆரம்பித்தேன். ஏன் எனக்கு அவரைச் சந்திக்கும் தைரியம் வரவில்லை? யோசித்தபோது, அவரைச் சந்தித்துப் பேசுவதற்கு வலுவான ஒரு காரணம், அல்லது சந்தேகம் ஏதும் என்னிடம் இருக்க வேண்டாமா? அப்படியொரு கேள்வியைத் தயார் செய்து கொண்டால் என்ன என்று தோன்றியது.

என்ன கேள்வியைத் தயார் செய்வது? என்னுள் சீர்திருத்தக் கருத்துக்களை விதைத் தவர் பாரதியார்தான். பெரியாரோ பார்ப் பனர்களை எதிர்ப்பவர். பெரியார் எதிர்க்கிற ஒரு ஜாதியைச் சேர்ந்தவர் என்ப தாலேயே நான் பாரதியாரை ஒதுக்கி விட முடியாது. என்னுள் சீர்திருத்தக் கருத்துக் களை விதைத்த பாரதியார் பிறந்த ஜாதியை எதிர்ப்பவராயிற்றே என்று என்னால் பெரி யாரையும் ஒதுக்கிவிட முடியாது. சரி! இந்தச் சந்தேகத்தையே பெரியாரிடம் கேள்வியாகக் கேட்டுத் தெரிந்து கொண்டு விட்டால் என்ன? அவரைச் சந்திப்பதற்கு நல்ல காரணமும் ஆயிற்று; என் குழப்பத்துக்கு விடை கிடைத்த மாதிரியும் ஆயிற்று என்று ஒருநாள் புறப்பட்டு விட்டேன்.

பேராசிரியர் பெரியார்தாசன்

இதற்குள் நெற்றிக்குத் திருநீறு பூசுவது போன்ற பழக்கங்கள் என்னிடமிருந்து தானாகவே மெள்ள மெள்ள மறைந்து போயிருந்தன என்பதால், நானும் ஒரு சீர்திருத்தக்காரன்தான் என்கிற எண்ணமும் அவரைச் சந்திக்கிற ஒரு துணிச்சலைத் தந்திருந்தது.

**நா**ன் பெரியார் அறைக்குள் சென்ற போது, ஒரு கட்டிலில் உட்கார்ந்திருந்தார். இடுப்பில் லுங்கி கட்டியிருந்தார். மேலே கறுப்புச் சட்டை. அதற்குள் பனியன் போன்றதொரு வெள்ளைச் சட்டை என்கிற வழக்கமான உடையில்தான் இருந்தார். அவரது வெள்ளைத் தாடியும் அவரது பொன்னிற மேனியும் கூட என்னை வெகுவாகக் கவர்ந்தன!



அவரைச் சுற்றி பல்வேறு புத்தகங்கள் இரைந்து கிடந்தன. கறுப்புச் சட்டையணிந்த சிலரும் அந்த அறையில் உட்கார்ந்திருந்தார்கள். பெரிய மீசை வைத்த ஒருவரும் அங்கே இருந்தார். நான் கல்லூரி மாணவன்தானே! பெரியாரைத் தவிர, வேறு யாரையும் எனக்கு அப்போது அடையாளம் தெரியவில்லை.

கிடுகிடுவென பெரியார் அருகில் சென்றேன். "நான் பச்சையப்பன் கல்லூரியில் படிக்கும் மாணவன். பி.ஏ. மூன்றாம் ஆண்டு படிக்கிறேன். உங்கள் புத்தகங்களையெல்லாம் நிறையப் படித்திருக்கிறேன். அதிலெல்லாம் நீங்கள் சொல்லியிருக்கிற கருத்துக்கள் எனக்கு மிகவும் பிடிக்கும்!" என்று என்னை நானே அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

ஆனால், நான் சொன்னதையெல்லாம் பெரியார் காதில் வாங்கிக் கொண்டதாகவே தெரியவில்லை. அந்த அறையிலிருந்த பிறரும் என்னையே அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் பெரியார் மட்டும் வேறு ஏதோ செய்து கொண்டிருந்தாரே தவிர, என்னைக் கவனிக்கவேயில்லை.

எனக்கு ரொம்பவும் ஏமாற்றமாகப் போய் விட்டது. என்ன செய்வது? பேசாமல் திரும்பி விடலாமா என்று கூட ஓர் எண்ணம் வந்தது. ஆனாலும் அதை அடக்கிக் கொண்டேன். இத்தனை நாட்களாக யோசித்து யோசித்து, இன்று தைரியமாகப் பெரியார் முன்னால் வந்து நின்று பேச ஆரம்பித்த பிறகு திரும்பிப் போவதா? என்கிற வைராக்கியம் வந்து விட்டது எனக்கு. அதனால் அவர் என்னைக் கவனிக்கிறாரா இல்லையா என்பது பற்றியெல்லாம் கவலைப்படாமல் மீண்டும், "ஐயா! உங்ககிட்ட ஒரு கேள்வி!" என்றேன்.

நான் இப்படிச் சொன்னதுதான் தாமதம். உடனே, சட்டென்று, "ஐயா வாங்க. உட்

காருங்க. கேளுங்க!'' என்று என்னைக் கவனிக்க ஆரம்பித்தார் பெரியார்.

ஏன் இப்போது மட்டும் இத்தனை ஆர்வமாக என்னைக் கவனிக்க ஆரம்பித்தார்? முன்பு ஏன் அவர் என்னைக் கண்டுகொள்ளவேயில்லை? என்னை நானே அறிமுகப் படுத்திக் கொண்டு, அவரது நூல்களைப் பற்றியும் கருத்துக்களைப் பற்றியும் நான் புகழ்ந்து பேசியதை, நான் அவருக்குச் செய்யும் முகஸ்துதியாக நினைத்துக் கொண்டிருக்கிறார். அதனால்தான் முகஸ்துதி பிடிக்காத அவர் என்னைச் சட்டை செய்யாமல் இருந்திருக்கிறார். 'எதையும் அப்படியே ஏற்றுக் கொள்ளக் கூடாது. உனது சொந்த மூளையை உபயோகித்து யோசி. அதுபற்றிக் கேள்வி கேட்டு, முழுமையாகத் தெரிந்து கொள்' என்பதுதானே பெரியார் வலியுறுத்தும் கருத்து! அதனால்தான், "ஐயா ஒரு கேள்வி!'' என்று நான் சொன்னதும் அவர் சந்தோஷப்பட்டு என்னைக் கவனிக்க ஆரம்பித்திருக்கிறார்.

அவர் உட்காரச் சொன்ன போதும் நான் உட்காரவில்லை. நின்றபடியேதான் கேட்டேன் : "ஐயா! நீங்கள் கூறுகிற சமூக சீர்திருத்தக் கருத்துக்களையெல்லாம் ஒரு பார்ப்பனர் ஏற்றுக் கொண்டால், அந்தப் பார்ப்பனரை நாம் ஒதுக்கி வைத்து விட வேண்டுமா? அது எப்படிச் சரியாகும்?''

நான் இப்படிக் கேட்டதும் பெரியார் என்னைக் கூர்ந்து பார்த்தார். சுற்றியிருந்தவர்களும் என்னைக் கூர்ந்து பார்க்க ஆரம்பித்தார்கள்.

(தொடரும்)



''டாக்டர், நர்ஸுக்கு சம்பளபாக்கி இருக்கா?''

''ஆமா, எப்படித் தெரியும்?''

''டாக்டரை இப்போ பார்க்க முடியுமா'ன்னு பர்மிஷன் கேட்டேன். ஆமா பெரிய டாட்டா, பிர்லா... பர்மிஷன் வேற தேவையா? உள்ளதான் இருக்காரு. போய்ப் பார்த்துக்குங்கன்னு சலிச்சுக்கறாங்களே!''

– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

''நீங்க படைக்கும் ஒவ்வொரு நாவலிலும் உங்க மனைவிக்கு பெரும் பங்கு உண்டுன்னு சொல்றீங்களே, எப்படி?''

''நாவலுக்கு இரண்டாயிரம் ரூபா கிடைச்சுதுன்னா, அதிலே ஆயிரத்து ஐநூறு ரூபாயைப் பிடுங்கிக்குவா என் மனைவி!''

– கு. அருணாசலம்





''மாட்டு கொம்புகளில் என்னமோ எழுதியிருக்கற மாதிரி தெரியுதே!...''

''இங்கேயும் ஸ்பான்சர்கள் வந்தாச்சு!...''

– மிஸ்டர் எக்ஸ்

# அஸ்திவாரம்

**பா**ல் தாக்கரேவா? லாலு யாதவ்வா? யார் சாயல் என்று கண்டுபிடிக்க முடியாத ஒரு சர்வாதிகாரம் படைத்த கதாபாத்திரம் - சதானந்த் மராட்டே. அரசியல் உலகின் அனைத்து நிகழ்வுகளையும் கட்டுப்படுத்தும் சூத்திரதாரி.

அவரிடம் சரணாகதி அடைந்த அரசியல் அயோக்கியர் ஜி.ஆர்.கே. தமது மகளையே விலையாக மராட்டே கேட்க அதிர்ந்து போய்த் திருந்துகிறார் ஜி.ஆர்.கே. விஷயமறிந்த மகள் அஞ்சலியின் ஆத்திரம் அரசியல் களத்தைத் தூய்மைப் படுத்தும் ஆக்கபூர்வமான சக்தியாக மாறுகிறது. மராட்டேயின் மகன் தனது காதலன் என்பது அவளுக்குக் கூடுதல் பலம்.

தேர்தலில் நின்று, ஜெயித்து மராட்டேவை அஞ்சலி மடக்கத் தீர்மானிக்கும் கட்டத்தில் மராட்டே ஜூனியர் 'மரணம்'! மகனையே பலியாக்கத் தயங்கவில்லை தந்தை என்பதை பகிரங்கப்படுத்தாமல் மிக சூசகமாகச் சொல்லியதன்மூலம் நாடகத்துக்கு அபாரமான கனம் சேர்க்கிறார் பாம்பே சாணக்யா. அவர் எழுதி, இயக்கியுள்ள 'அஸ்திவாரம்' பல நவீன முயற்சிகளை உள்ளடக்கியிருக்கிறது.

சிலை இறங்கி வந்து பேசும் யுக்தி, தேர்தலுக்கு முந்தைய lobbyingஐக் குறியீடாக உணர்த்தும் காட்சி, அஞ்சலி - மராட்டே மோதலை ஒரு செஸ் ஆட்டமாக உருவகப் படுத்தும் அமைப்பு என்று எளிமையான ஒளியமைப்பும் காட்சி ஜோடனையும் கொண்டே சுவை சேர்த்திருக்கிறார்.

அஞ்சலி, உள்துறை அமைச்சராகி மராட்டே பேரில் நடவடிக்கை எடுத்து சிறைவைப்பதும் நேர்மையான அரசியல்வாதியாக மட்டுமின்றி நல்ல நிர்வாகியாகவும் செயல்படுவதும்... ஐயோ! டூ குட் டு பி ட்ரூ... என்று நினைக்கிற கட்டத்தில் அவர் பிரெயின் ட்யூமரில் இறந்து போவதும் (தனக்கு அந்த நோய் இருப்பது முன்னமே தெரிந்திருக்கிறது) சதானந்த் மராட்டே மீண்டும் கொடிகட்டிப் பறப்பதும்... இதுதான் கதை.

வேகவேகமான உணர்ச்சி மாற்றங்கள், ஆங்காங்கே அனல் பறக்கும் வசனங்கள், தற்கால அரசியலைச் சாடும் நையாண்டி என்று ஆர்வத்தைத் தூண்டும் அம்சங்கள். மராட்டேவாக நடிக்கும் பாம்பே குமாரின் அனுபவப்பட்ட நடிப்புக்குச் சற்றும் சளைக்காத புதுமுகம் சங்கீதாவின் (அஞ்சலி) ஆற்றல்... (உணர்ச்சிவசப்படும்போது குரல் கொஞ்சம் கிறீச்சிடுவது மட்டுமே குறை)...

- பாராட்ட நிறைய அம்சங்கள் இருக்கின்றன.

துணைக் கதாபாத்திரங்களுள் சிலர் முழுமையாய்ப் படைக்கப்படவில்லை; போராடும் குணம் என்ற ஒரே ஒரு உணர்ச்சியைத் தவிர வேறெதுவும் கதாநாயகி வெளிப்படுத்துவதில்லை; அதனால் அவன் தோல்வி, யார் கட்டுப்பாட்டிலும் இல்லாத பிரெயின் ட்யூமரால் விளையவேண்டிய கட்டாயம்.

- இப்படிச் சில குறைகளும் இருக்கின்றன.

அவநம்பிக்கையைக் கொஞ்சம் ஒதுக்கிவிட்டுத்தான் பார்க்க வேண்டும்.

ஆனாலும், ஆட்டம் காணாத பலமான அஸ்திவாரம். பாம்பே சாணக்யா துணிந்து அமைத்த கடைக்காலின் மேல் நிறைய முயற்சிகள் தொடர வாய்ப்பு இருக்கிறது.

— காஞ்சனா பிரகாஷ்ராவ்

## காதில் விழுந்தவை:

# பாண்டியில் த.மா.கா. நிலை என்ன?



● உற்சாகமான அதிகாரிகளுக்கு அரசின் பத்தாம் பசலியான விதிமுறைகளும், நடைமுறைகளும் ஒரு தடைக் கல்லாக இருப்பதற்கு சமீபத்தைய உதாரணமாக கோட்டையில் ஒரு விவகாரம் கிசுகிசுக்கப்படுகிறது. திருவாரூர் மாவட்டத்தில் அரசு அலுவலகங்கள் கம்ப்யூட்டர் மயமாக்கப்பட்டு வருகின்றன அல்லவா! இதற்காக ஆர்வத்துடன் உழைத்து வருபவர் மாவட்ட ஆட்சியாளர் உமா சங்கர். திருவாரூரில் இது சம்பந்தமான தொடக்க விழாவில் அண்மையில் கலந்து கொண்டார், முதல்வர். தொடக்க விழாவுக்குச் சில 'மென் பொருள்கள்' வாங்க வேண்டிய சூழ்நிலையில், அவசரம் காரணமாக சில விதிமுறைகளை எழுத்தில் கையாளாமல் வாய் மொழியாக அனுமதி பெற்று நேரடியாக வாங்கி விட்டாராம் ஆட்சியாளர். லட்சக்கணக்கான மதிப்புள்ள இந்தப் பொருள்கள் வாங்குவதற்கு முறைப்படி அனுமதி கேட்டு, பின்னர் கடிதம் அனுப்பினாராம். ஆனால் கோட்டையிலுள்ள நிதி இலாகா அதிகாரிகள் சூழ்நிலையைப் புரிந்து கொள்ளாமல் எழுத்தில் முன் அனுமதி பெறாதது தவறு என்று சொல்லி இழுத்தடிக்கிறார்களாம். தனியார் நிறுவனம் பணத்துக்குச் சுற்றி வர, கலெக்டரின் பாடு தர்ம சங்கடமாக இருக்கிறதாம்.

● நாயர் புடிச்ச புலி வால் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அதற்கும் பாண்டி விவகாரத்தில் மூப்பனாரின் தற்போதைய நிலைக்கும் அதிக வித்தியாசமில்லை என்று சொல்லி நகைக்கிறார்கள். "காங்கிரஸ் எப்படி நடந்து கொள்ளும் என்று கணிக்காமல் உள்ளூர் த.மா.கா.வின் பேச்சைக் கேட்டுக் கொண்டு அவசரப்பட்டு அமைச்சர்களை விலகச் சொல்லி விட்டோம்; இப்போது அரசிலும் இல்லை; பக்காவான எதிர்க்கட்சியாகவும் இல்லை. திரிசங்கு நிலையில் இருக்கிறோம்" என்றார் ஒரு த.மா.கா பிரமுகர். 'தைரியமாக வாபஸ் பெற்றால் தி.மு.க அரசு கவிழுமா' என்பதும் கேள்விக்குறியாக இருக்கிறதாம். காரணம் அந்த நிலையில் த.மா.கா.விலேயே பிளவு வர வாய்ப்பு இருக்கிறதாம். இப்போது அ.இ.அ.தி.மு.க.வுடன், த.மா.கா நெருங்கி வருவதற்கான சாத்தியங்கள் அதிகமாகி வருகின்றன அல்லவா! மாறி வரும் இந்த நிலையில் கசப்பாய் இருக்கும் ப. சிதம்பரம், தாம் உண்டு; தம் வழக்கறிஞர் தொழில் உண்டு என தில்லியில் கேம்ப் போட்டு விட்டாராம்.

● சர்ச்சைக்குரிய டான்ஸி வளாகத்திலேயே பெரிய கொட்டகையாகப் போட்டு கட்சிக்காரர்களை அம்மா சந்தித்து வருகிறார் அல்லவா! கோர்ட்டில் வழக்கு நிலுவையில் இருக்கும் ஓர் இடத்தை கட்சிக்காகப் பயன்படுத்தக் கூடாது என்று ஸ்பெஷல் கோர்ட்டில் தமிழக அரசு மனு தாக்கல் செய்யும் என்கிறார்கள். கட்சிக்காரர்கள், அதுவும் அழைப்பு உள்ளவர்கள் மட்டுமே அம்மா கூட்டத்தில் அனுமதிக்கப்பட்டனர். ஜெயா தொலைக்காட்சி தவிர வேறு யாருக்கும் அனுமதி கிடையாது. கூட்டத்தில் பேச சந்தர்ப்பம் கிடைத்த கிளைக்கழக செயலாளர்கள் அம்மாவைப் புகழ்வதற்கே ஐந்து நிமிடங்கள் எடுத்துக் கொள்ளவே, 'நேரடியாக விஷயத்துக்கு வாருங்கள்' என்று ஜெ. அன்பாகக் கடிந்து கொண்டாராம். சில மாவட்டப் பிரமுகர்கள் கடந்த பாராளுமன்றத் தேர்தலின்போது கட்சி கொடுத்த பணத்தைப் பகிர்ந்து கொடுக்காமல் ஸ்வாஹா செய்தது; மற்றும் எதிர்க்கட்சிக்காரர்களிடம் பணம் வாங்கிக் கொண்டு அமைதியாகிப் போனது என்று சரமாரியான குற்றச்சாட்டுக்கள் சொல்லப்பட்டன. ஆளும் கட்சியுடன் கூட்டணி வைத்துக்கொண்டு மாவட்ட அளவில் அரசு வேலைகளை டெண்டர் எடுத்து வரும் கட்சிப் பிரமுகர்கள் பற்றியும் ஏராளமாகப் புகார் சொல்லப்பட்டதாம். ஒரு பிரமுகர் உணர்ச்சி வசப்பட்டு பிளேடால் கையைக் கீறிக் கொண்டு 'உங்களுக்காக உயிரைக் கொடுப்பேன்' என்று சூளுரைத்தாராம்.

— சஞ்சயன்

படம்: வெங்கடேஷ்

# ஆண்டு தொடக்கம் தரும் ஆனந்தம்

# ஆயுள் முழுவதும் தொடர TDFC யில் சேமியுங்கள்!



**13.14%**

36 மாதம் அதற்குமேல்
13% மாதாந்திர வட்டி உண்டு
1வருடம் 12.12% மற்றும்
25 மாதங்கள் 12.63% காலாண்டிற்கு



**18.18%**

60 மாதங்களுக்கு
வருடவட்டி 13% மாதத்தோறும்
கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படும்.

* Rating from CRISIL FA(+) indicates adequate safety.
* Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403



## தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.
தொலைபேசி : 8292059, 8292917, 8293351, பேக்ஸ் : (044) 8237876
தந்தி :TAFCON. P.B.No.719. E-mail:tdfc@giasmd01.vsnl.net.in

கிளைகள் :
* அரசு விரைவு பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044. தொலைபேசி : (0422) 497102
* அரசு விரைவு பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001. தொலைபேசி:(0431) 464188
* ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி: (0452) 741686
* முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001. தொலைபேசி:(0424) 258204

* உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
* காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்.

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 29.9.99 தினசரிகளில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

**"Details are also available on the Internet" : www.tn.gov.in / www.chennaionline.com**

DIPR/19/DIS/2000/ELEGANT

# நீங்கள் கேட்டவை — தராசு

● த. ஜான்ஸிராணி, சந்திரப்பட்டி.

? நாத்திகம் பேசும் கம்யூனிஸ்ட் தலைவர்கள் இஃப்தார் விருந்தில் கலந்து கொள்கிறார்களே, எப்படி?

! கம்யூனிஸ்டுகள் மட்டுமா? தி.மு.கவும் கூடத்தான். வோட்டு அரசியலில் ஈடுபட்ட பிறகு வேறென்ன செய்ய? வேதாளத்துக்கு வாழ்க்கைப்பட்டால் முருங்கை மரத்தில் ஏற



• அவலை நினைத்து...



• 'முத்திரை' நடிப்பு!

வேண்டியதுதான்.

● புளியரை கணேசன், சென்னை – 30.

? ஆஸ்திரேலியாவுக்குச் சும்மா டூர் போனவர்களை கிரிக்கெட் ஆடச் சொல்லியிருப்பதைக் காட்டிலும் ஒரு கிரிக்கெட் டீமையே இந்தியா அங்கு அனுப்பினால் என்ன...?

! நன்றாய்ச் சொன்னீர்கள்.

● கு. கணேசன், மறைமலைநகர்.

? 'ஜெ ஆட்சியில் பஸ் கட்டணத்தை உயர்த்தாததால்தான் நாங்கள் அதை உயர்த்த வேண்டியதாயிற்று; 'ஜெ ஆட்சியில் ஆண்டுதோறும் மின் கட்டணத்தை உயர்த்தியதுபோல்தான் நாங்களும் உயர்த்தியிருக்கிறோம் என்றெல்லாம் காரணம் கூறுவது குறித்து...?

! ஜெ ஆட்சியில் நடந்தது போல்தானே எங்கள் ஆட்சியிலும் 'ஊழல்' நடக்கிறது என்று சொல்லிவிடக் கூடாது என பிரார்த்திப்போம்!

● எல். மீனாட்சிசுந்தரம், திருவண்ணாமலை.

? கமல்ஹாசன் இதழ் முத்தப் பிரியராய் இருப்பதை வரவேற்கிறீர்களா?

! நடிப்பில் முத்திரை பதிப்பது என்பதை கமல்ஹாசன் இப்படிப் புரிந்து கொண்டிருக்கிறார் என்றால் அதற்காக வருத்தப்படுவதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்!

● இரா. புவனேஸ்வரி, சென்னை – 81.

? சன் டீ.வி.யில் மகரஜோதி நேரடி ஒளி



• தண்டனை வாதம்!

பரப்பு எப்படி...?

! நம்பிக்கையோடு பார்த்தவர்களுக்கு நேரில் சென்றவர்களைக் காட்டிலும் அற்புதமான தரிசனம்!

● டி. அழகர்சாமி, மதுரை – 16.

? பாகிஸ்தான் தீவிரவாதிகள் தமிழகத்தில் இல்லை என திட்டவட்டமாகக் கூறுகிறாரே டி.ஜி.பி. சர்மா?

! இலங்கைத் தீவிரவாதிகள் குறித்து அதே உத்தரவாதத்தைத் தரச் சொல்லுங்களேன் பார்ப்போம்!

● எம். பாஸ்கர், திண்டுக்கல் – 1.

? நாட்டின் ஐந்து பெரிய விமான நிலையங்களைத் தனியாரிடம் ஒப்படைக்க மத்திய அரசு முடிவு செய்திருப்பது பற்றி...?

! துணிச்சலான நல்ல முடிவு. பயணிகளுக்குச் சேவை மேம்பட வாய்ப்பு உண்டு. கழுகுப் பார்வையுடன் கூடிய கண்காணிப்பும் அவசியம். அலட்சியம் கூடாது.

● அரு. சொர்ணலட்சுமி, ஈரோடு – 3.

? 'கர்மாபா'வுக்கு அடைக்கலம் தருவது சரியா?

! 'அடைக்கலம்' என்கிற வார்த்தையைக் கவனமாகத் தவிர்த்து நம் அமைச்சர்கள் அவரைத் தங்க அனுமதிப்பதாகச் சொல்வதைக் கவனிக்கவில்லையா? (சீனா ஏற்காத ஒருவரை அங்கீகரிக்கும் அச்சம்!) இரண்டு வயது லாமாவைத் தலைவராக்கியிருக்கும் சீனாவின் தந்திரம் பெர்னாண்டஸின் தந்திரத்தைத் தூக்கிச் சாப்பிட்டு விட்டதே!

● ப. இராம்முருகன், சென்னை – 81.

? தூக்குத் தண்டனை போன்ற காட்டு

# இடைத் தேர்தல்

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
எம். சம்பத்,
9, மாரியம்மன் கோயில் தெரு,
வேலாயுதம்பாளையம்,
கரூர் மாவட்டம் - 639 117.



• கோயபல் பிரசாரம்!



• அடைக்கலமா?

பிராண்டித்தனமான தண்டனை வேறு இருக்க முடியாது என்கிறாரே வைகோ...?

! தொண்டர்களை மனித வெடிகுண்டு களாக்கிக் காவு கொடுப்பதும் நீசத்தனமான கொலை முயற்சிகளில் ஈடுபடுவதும் அத்தகை யவர்களை ஆதரிப்பதும் காட்டுமிராண்டித் தனமாகத் தெரியவில்லை. சட்டரீதியான நட வடிக்கைதான் காட்டுமிராண்டித்தனம்! ஜஸ்டிஸ் மகாராஜன் ஒருமுறை ராஜாஜி யிடம் கேட்டார் : "தூக்குத் தண்டனை வழங்க வேண்டிய நிலையில் என் மனம் சஞ் சலப்படுகிறதே என்ன செய்ய...?"

ராஜாஜி பதில் : "உங்கள் முன் பரிதாபத் துக்குரியவராக நிற்கும் குற்றவாளியைப் பார்ப்பதை விட அவன் செய்த படுகொலை யால் அல்லலுற்றுத் தவித்து நிற்கும் குடும் பத்தை (குடும்பங்களை) எண்ணிப் பாருங்கள், சஞ்சலம் தீரும்!"

● கு. சரவணன், பாளையங்கோட்டை.

? இடைத்தேர்தலில் வெற்றிக் கனியை ஜெயலலிதாவிடம் ஒப்படைப்போம் என்று கருப்பசாமி பாண்டியன் கூறியுள்ளாரே... வெற்றிக்கனி கிட்டுமா?

! கருப்பசாமி பாண்டியனின் சூளுரையைக் காட்டிலும் கருணாநிதியின் உழைப்பையும் சாதுர்யத்தையும் பொறுத்தது அது!

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? உமாபாரதி பதவி விலகியது குறித்து...?

! அவலை நினைத்து உரலை இடிக்கும் அர சியல் நாடகம். உமாபாரதியின் தான்தோன் றித்தனம் எப்போதுமே பி.ஜே.பி. தலைமைக் குத் தலைவலிதான்!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம். ❑

? காவல்துறை - பொதுமக்கள் நல்லுறவை வளர்க்க தமிழக அரசு லட்சிய காவல் நிலை யங்கள் அமைக்குமாமே... ஏற்கெனவே உள் ளவை அலட்சிய காவல் நிலையங்களா?

! அல்ல என்று நிரூபிக்கிற பொறுப்பாவது மற்ற காவல் நிலையங்களுக்கு ஏற்படும் - அதாவது லட்சிய காவல் நிலையங்கள் ஒழுங் காகச் செயல்பட்டால்.



• ஊக்கம்...



• ...உற்சாகம்

● வி. பிரசன்னகிருஷ்ணன், சென்னை - 17.

? 'அடித்து உதைத்து யாரோ சிலரிடம் வாக்குமூலம் வாங்கி வைத்துக் கொண்டு பாகிஸ்தானே இந்திய விமானத்தைக் கடத்தியதாக நாடகமாடுகிறீர்கள். பாபர் மசூதியை இடித்த அத்வானி அமைச்சராக உள்ள நாட்டில் நியாயம் எடுபடுமா?' என்று டீ.வி. பேட்டியில் பாகிஸ்தான் தூதர் பொரிந்து தள்ளியது பற்றி...?

! பாக்கிலுள்ள நமது தூதரக ஊழியரை அடித்து உதைத்து பொய் வாக்குமூலம் பெற முயற்சி செய்த பாகிஸ்தான் அரசின் தூதர் வேறெப்படிப் பேசுவாராம்? காஷ்மீரில் ஊடுருவும் தீவிரவாதிகளுக்கு ஊக்கம் தந்து விட்டு, 'என்னை நம்புங்கள்' என்று அண்டப் புளுகு பேட்டி தரும் ராணுவ அதிபர் முஷ்ரஃப் ஆட்சியில் வேறென்ன எதிர்பார்க்க முடியும் - கோயபல் பிரசாரத்தைத் தவிர!

● ந. விநாயகமூர்த்தி, சென்னை - 13.

? வாழ்க்கையில் ஊக்கமும் உற்சாகமும் உண்டாக வழிமுறைகள் என்ன?

! தினமும் காலை எழுந்ததும் விவேகானந் தர் மொழி அல்லது பாரதி வரிகள் படித்து விட்டு மறு வேலை பாருங்கள். இன்றுதான் புதிதாகப் பிறந்தாற்போல் தோன்றும். ○

## வெற்றிக்கனி ஜெயவுக்கா...?

* ரூ. 25 பரிசு பெறுபவர் :
புளியரை கணேசன்,
9, ஏ பிளாக், ஷெனாய் நகர்,
சென்னை - 600 030.

"ஆலந்தூர் நகராட்சியின் அடாவடித்தனம்" என்ற தலைப்பில் வெளியான செய்திக்கு சில விளக்கம் அளிக்க விரும்புகிறேன்.

ஆலந்தூர் நகராட்சிப் பகுதியில் ரூ. 34.00 கோடி செலவில் பாதாள சாக்கடை திட்டம் தமிழக அரசால் அனுமதிக்கப்பட்டுள்ளது. மேற்படி தொகையை அரசு மான்யம் மற்றும் உலக வங்கிக் கடன் மூலம் பெற்று திட்டம் நிறைவேற்றப்பட உள்ளது. இத் திட்டத்திற்குக் கடனுதவி செய்யும் நிதி நிறுவனம் குறைந்தபட்சம் 10,000 (பத்தாயிரம்) இணைப்புகளுக்கான டெபாசிட் தொகையை வரி விதிப்பு ஒன்றுக்கு ரூ. 5000/- வீதம் முன்கூட்டியே வசூலிக்கப்பட வேண்டுமென்று ஒரு நிபந்தனை விதித்துள்ளது. அதாவது இந்த நிபந்தனைக்குட்படாவிட்டால் திட்டத்தைத் துவக்க இயலாதென திட்டவட்டமாக அறிவிக்கப்பட்டுள்ளது.

இதுபற்றி கடந்த செப்டெம்பர் மாதம் முதல் ஆலந்தூர் நகரத்திலுள்ள அனைத்து நகர் நலச் சங்கங்களின் பிரதிநிதிகளுக்கான கூட்டங்கள் கூட்டப்பட்டு விரிவாக விவாதிக்கப்பட்டது. நகர் நலச் சங்கங்களின் கூட்டத்தில் அடுக்கு மாடி கட்டடத்தில்




# "அன்புடன்" கேட்டுக் கொள்ளும்

குடியிருப்பவர்கள் பல சந்தேகங்களை எழுப்பினர்.

அவற்றில் மிக முக்கியமானது ஒவ்வொரு பிளாட்டுக்கும் தனித்தனியாக டெபாசிட் வசூலிப்பது சரியல்ல என்பது. மேற்படி திட்டத்திற்குப் பெறப்படும் கடன் தொகைக்கான வட்டி மற்றும் தவணைத் தொகையை நகரிலுள்ள 26,000 வீடுகளுக்கும் இணைப்பு வழங்கப்பட்டு, அதனடிப்படையில் பெறப்படும் தொகையைக் கொண்டே செலுத்த இயலுமென்று அவர்களுக்கு விளக்கமளிக்கப்பட்டது. மேலும் இணைப்பு வழங்கப்படும் காலகட்டத்தில் சென்னை பெருநகர் குடிநீர் மற்றும் கழிவுநீரகற்று வாரியம் தற்போது பின்பற்றுகின்ற டெபாசிட் மற்றும் கட்டணம் வசூலிக்கும் முறையே இதற்கும் பொருந்துமெனவும் விளக்கம் அளிக்கப்பட்டது.

நகரத்திலுள்ள குடியிருப்போர் எவரிடத்திலும் டெபாசிட் தொகை செலுத்த கட்டாயப்படுத்தப்படவில்லை. கட்டாயப்படுத்தியிருந்தால் 26,000 வரிவிதிப்புகளின் குடியிருப்பாளர்களிடமிருந்தும் வசூலித்திருக்க முடியும். நகராட்சியினுடைய வேண்டுகோளை ஏற்று இதுவரையில் 10,200 பேர் வைப்புத் தொகை செலுத்தியுள்ளனர். மேலும் 31.12.99 என நிர்ணயிக்கப்பட்ட காலக்கெடுவை நகரமன்ற உறுப்பினர்களும்

நலச்சங்கங்களும் கேட்டுக் கொண்டதற்கிணங்க 31.1.2000 வரை கால நீட்டிப்பு செய்யப்பட்டுள்ளது.

புதிதாகத் தோன்றியிருக்கும் ஃபிளாட் உரிமையாளர்கள் சங்கத்தினர் சிலர் என்னைச் சந்தித்தபோது, அவர்களிடமும் விரிவாக விளக்கி, ஃபிளாட்டில் வசிப்பவர்களின் சிரமத்தைத் தவிர்க்க மேற்படி ரூ. 5000/-ஐ இரண்டு தவணைகளில் செலுத்த வழிவகை செய்து தருவதாகவும் உறுதி கூறினேன். அந்தக் கூட்டத்தில் வந்தவர்கள் பலரும் அதனை ஏற்றுக் கொண்டு அன்றே நகராட்சிக் கருவூலத்தில் டெபாசிட் தொகையை செலுத்தி விட்டுச் சென்றுள்ளார்கள் என்பதே உண்மை.

மேலும் 1.2.2000 முதல் டெபாசிட் தொகையை ரூ. 6000/- ஆக வசூலிக்கக் காரணம், ஏற்கெனவே மூன்று மாதத்திற்கு முன்னதாக ரூ. 5000/- செலுத்தியவர்கள் நீதிமன்றம் சென்று சட்ட சிக்கல்களை உருவாக்கக் கூடாதென்பதே.

'பாதாள சாக்கடைத் திட்டத்திற்கு வைப்புத் தொகை செலுத்தாவிடில் என்ன நடக்குமென' ஃபிளாட் குடியிருப்போர் சங்கக் கூட்டத்தில் கேள்வி எழுப்பப்பட்டது. மேற்படி கேள்விக்கு பதிலளிக்கையில் ஆலந்தூரில் ஒரு காலத்தில் எடுப்புக் கழிப்பறை இருந்து வந்தது. செப்டிக் டேங்க் முறை அமுல்படுத்தப்பட்டபோது அனைத்து எடுப்புக் கழிப்பறைகளும் ரத்து செய்யப்பட்டு, அப்புறப்படுத்தப்பட்டன. அதனைப் போலவே பாதாளச் சாக்கடைத் திட்டம் நிறைவேற்றப்படும்போதும் செப்டிக் டேங்க் அகற்றப்பட உத்திரவிடப்படுமென்றே தெரிவிக்கப் பட்டது.

இதுவரை பாதாள சாக்கடைத் திட்டத்திற்கு டெபாசிட் செலுத்ாதவர்கள் இந்த விளக்கத்தை ஏற்று, குழப்பம் விளைவிப்பவர்களுக்குச் செவிசாய்க்காமல் விரைவில் பாதாளச் சாக்கடைத் திட்டம் துவங்க நகராட்சிக்கு உதவும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

நகர் மன்றத் தலைவர், ஆர். எஸ். பாரதி.
ஆலந்தூர் நகராட்சி.

# ஆலந்தூர் நகராட்சி!

(பாதாள சாக்கடைத் திட்டம் பற்றி, நகராட்சியிலுள்ள அனைத்து நகர் நலச் சங்கங்களின் பிரதிநிதிகளுடனும் விவாதித்ததாகக் கூறுகிறார் நகர் மன்றத் தலைவர். நகராட்சியில் தனி வீடுகளில் வசிப்போரை விடவும் அதிகமான அளவுக்கு ஃபிளாட்டுகளில்தான் வசிக்கிறார்கள். ஆனால், எத்தனை ஃபிளாட் உரிமையாளர்கள் சங்கப் பிரதிநிதிகளிடம் விவாதிக்கப்பட்டது என்பதற்கு சரியான விளக்கம் இல்லை.

இதோடு, ஃபிளாட் உரிமையாளர்கள் சங்கத்தினரின் முக்கியமான கேள்வி என்பது, சிலர் தங்களுடைய இடத்தில் நான்கைந்து ஃபிளாட்டுகளைக் கட்டி வாடகைக்கு விட்டுள்ளனர். மேலும் பலர் மேல் மாடியிலோ அல்லது கீழ்த் தளத்திலோ தாங்கள் குடியிருந்து கொண்டு, மற்றதை வாடகைக்கு விட்டுள்ளனர். அப்படிப்பட்டவர்கள் ஒரே வரிவிதிப்புதாரர்களாகவே இருக்கின்றனர் என்பதால், அவர்கள் வெறும் ஐயாயிரம் ரூபாய் மட்டுமே செலுத்தினால் போதும் என்று நகராட்சி சொல்லுவது எப்படி முறையாகும் என்பதுதான்!

இந்தக் கேள்விக்கும் அதை மாற்றியமைப்பதற்காக தாங்கள் தரும் யோசனைகள் பற்றியும் நகர்மன்றத் தலைவர் எந்தவிதமான விளக்கமும் அளிக்காதது ஏன் என்று கேட்கிறார்கள் ஃபிளாட் உரிமையாளர்கள் சங்கத்தைச் சேர்ந்தவர்கள்!)

# GOKULAM

The monthly magazine for children

## SPORTS DAY FUN

## CRYING WOLF — Short story

## OYSTERS AND PEARLS

- In the wild



PUZZLES

SNIPPETS

PENPALS

AND LOTS

MORE

February 2000

Rs. 6/-

47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097



# குளிர்பானங்கள் ஆபத்தானவையா?

ஒன்றரை லிட்டர் கோக கோலா பெட் பாட்டிலில் ஒட்டியிருக்கிற லேபிலைப் பார்த்திருக்கிறீர்களோ? அதன் தயாரிப்புப் பொருள்களில் பாஸ்ஃபாரிக் அமிலமும் ஒன்று. குறைவான அளவு எதிலீன் க்ளைகால் - குளிர்ச்சிக்கு. ஜீரோ டிகிரி சென்டிகிரேடிலும் திரவம் உறைந்து போய்விடாமல் இருக்க வைக்கிற ஆன்ட்டி-ஃப்ரீஸ் தன்மை இதில்தான் இருக்கிறதாம். இந்தக் கெமிலுக்கு ஆர்செனிக்கின் தன்மை இருக்கிறது. ஆர்செனிக் என்றால், மெல்ல மெல்லச் சாகடிக்கும் என்பார்கள். ஒரு மணி நேரத்துக்குள் நாலு லிட்டர் கோக் குடித்தால் நேரே பரலோகப் பிராப்திதான்!

கோக கோலாவில் pH எவ்வளவு தெரியுமா? 3.4! நம் பற்களையும், எலும்பு



• டாக்டர் கிருஷ்ணமூர்த்தி

களையும் நொறுக்கிக் கரைத்து விட இந்த அஸிடிடி அளவு போதும். 30 வயதில் மனித உடலில் எலும்புகளின் வளர்ச்சி நின்று போய் விடுகிறது. அப்புறம் நாம் சாப்பிடும் உணவில் உள்ள அஸிடிடி அளவைப் பொறுத்து 8 முதல் 18 சதவிகிதம் வரை எலும்புகள் உறுதி இழக்கத் தொடங்குகின்றன.

எலும்புகளிலிருந்து கரைக்கப்படும் கால்ஷியம் ஒட்டு மொத்தமாக தமனியில் சேர்ந்து அடைத்துக்கொண்டு, இரத்தக் குழாய் மட்டும் அல்லாமல், சருமம், சிறு நீரகம் போன்ற முக்கிய உறுப்புகளின் செயல்பாட்டைப் பாதிக்கத் தொடங்குகிறது. குளிர் பானத்தில் விட்டமின், மினரல் சத்து எதுவும் கிடையாது. அதிக சர்க்கரை, கார்போனிக் ஆஸிட், கலரிங் கெமிகல்கள்தாம் இருக்கின்றன.

சிலர், சாப்பிட்டவுடன் ஒரு குளிர் பானம் குடிப்பார்கள். இவர்களுக்கு என்ன ஆகும் தெரியுமா? நம் உடம்புக்குத் தேவை குறைந்தபட்சம் 37 டிகிரி செல்ஷியஸ் உஷ்ணம். அப்போதுதான் நம் உடலில் செரிமானத்துக்கு உகந்த என்ஸைம் வேலை செய்யும். சாஃப்ட் ட்ரிங்க் 37 டிகிரி செல்ஷியசுக்குக் கீழேதான், அதாவது 0 டிகிரி குளிர்ச்சியில் இருக்கும். இது என்ஸைம்களை நீர்த்துப் போகச் செய்து, ஜீரண வேலையைக் கடினமாக்கி, உண்ட உணவை செரிக்காமல் போகச் செய்து விடும். அப்புறம் வாயுத் தொல்லை! ஜீரண உறுப்பில் டாக்சின் உற்பத்தியாகி, இரத்தத்தோடு உடல் எங்கும் பரவும் ஆபத்தும் உண்டு. அப்புறம் என்ன, உடலின் பிற பகுதிகளிலும் டாக்சின் பரவி விடும். நோய் ஒவ்வொன்றாகத் தலை தூக்கும். அடுத்த தடவை பெப்சியோ, கோககோலாவோ குடிக்கும்போது இதை எல்லாம் யோசியுங்கள்.

இரண்டு மாதங்களுக்கு முன் தில்லி பல்கலைக் கழகத்தில் ஒரு போட்டி நடந்தது. யார் அதிகம் கோக் குடிப்பார்கள் என்று. வெற்றி பெற்றவர் குடித்தது எட்டு பாட்டில்கள். ஆனால் அந்த இடத்திலேயே மயக்கமாகி விட்டார். கார்பன் டை ஆக்ஸைட் இரத்தத்தோடு கலந்து உடலில் பரவி விட்டது. இதற்குப் பிறகு அந்தக் கல்லூரி கான்டீனில் குளிர் பான வகைகளையே தடை செய்து விட்டார் பிரின்சிபல்!

குளிர்பானங்களில் சேர்க்கப்படும் கெமிகல்கள் உடலுக்குக் கேடு விளைவிப்பவை என்று உங்களுக்குத் தெரியுமா? ஒருவர் உதிர்ந்து விழுந்த பல்லை ஒரு கோக் பாட்டிலில் போட்டுவிட்டு, 10 நாள் கழித்துப் பார்த்தபோது அது கரைந்தே விட்டது! நம்ப முடிகிறதா இதை? பற்களும், எலும்புகளும் தான் மனிதன் இறந்த பிறகும்கூட அதிக நாள் அப்படியே இருக்கக் கூடியவை அல்லவா?

பற்களுக்கே இந்தக் கதியானால், வயிற்றின் மெல்லிய உட் பகுதிக்கும், ஜீரண உறுப்புக்கும் இந்தக் குளிர்பானங்கள் செய்கிற தீமையை எல்லாரும் நினைத்துப் பார்க்க வேண்டும்.

நல்ல இளநீரை ஐந்து ரூபாய் கொடுத்து வாங்கிக் குடிக்காதவர்கள், பத்து ரூபாய் கொடுத்து இந்தப் பாழாய்ப் போன குளிர் பானங்களைக் குடித்துத் தொலைக்கிறார்களே?

— Drink Coca Cola and Die! என்ற தலைப்புடன் இப்படியொரு எச்சரிக்கை நமக்கு இன்டர்நெட்டில் வந்தது.

மிரண்டு போய், இந்த விவரங்களை மைசூரில் உள்ள, மத்திய உணவுப் பொருள் ஆராய்ச்சிக் கழகத்தின் தோட்டப் பயிர்/பானங்கள் தொழில் நுட்பப் பிரிவின் தலைவர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தியிடம் தெரிவித்தோம். அவர் பதில்:

"முதலாவதாக, எதிலீன் க்ளைகால் எதுவும் குளிர்பானத்தில் சேர்ப்பதில்லை. ப்ரொபிலீன் க்ளைகால்தான் பயன்படுத்துகிறார்கள். அதுகூட, பானத்தின் மணத்தைச் சரியான கட்டுப்பாட்டில் வைத்திருப்பதற்காக அளவாகச் சேர்க்கப்படுகிறது. இருமலுக்கான 'சிரப்'களிலும் இது சேர்ப்பதுண்டு. இது பாதகமானது அல்ல.

"இரண்டாவதாக, பாஸ்ஃபாரிக் ஆஸிட் குறைந்தபட்ச அளவு, அதாவது அனுமதிக்கப்பட்ட அளவே சேர்க்கப்படுகிறது. ஒரு நபர், தொடர்ந்து எட்டு பாட்டில்கள் கோககோலா குடித்தால்தான் மயக்கமடையும் நிலை வரும். அப்படி எட்டு பாட்டில்கள் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து எந்தச் சாதாரண சந்தர்ப்பத்திலும், யாரும் குடிக்க மாட்டார்கள்.

"மூன்றாவதாக, இந்தக் குளிர்பானங்களைத் தயாரிக்கும் நிறுவனங்கள், அகில உலக அளவில், விஞ்ஞான ரீதியாகத் தங்கள் தயாரிப்பை முறையான அங்கீகாரம் பெற்று, ஒரே மாதிரி ஃபார்முலாவில் உருவாக்குகிறார்கள். சாதக-பாதகங்களை அறியாமலோ, ஆராயாமலோ இவர்கள் இம்மாதிரி உலகளாவிய விற்பனையில் காலெடுத்து வைக்க மாட்டார்கள்."

— **எஸ்.வி.என்.**

# பற

'என்னால் பறக்க முடியுமா?'

சுவாதியின் மனத்தில் அந்தக் கேள்வி திமு ரென்று எழுந்தது.

இந்தக் காசி மாநகரின் குறுகிய சந்துகளின் கட்டடங்களுக் கிடையே பறந்து போவது எளிதல்ல. ஒரு சர்க்கஸ் கலைஞன் பெரு உருண்டைக்குள் மோட்டார் சைக்கிள் ஓட்டுவதற்கொப்பானது அது. எனினும் பறக்கும் சுகமே நிகரற்றதுதானே. தெருக்கள் கிடக்கட்டும், அவற்றின் இடைவெளிகளில் அங்கங்கே தரிசனம் அளிக்கும் கங்கை நதியின் மீது பறக்க வேண்டும்.

இலக்கில்லாமல் பறக்கலாமா? அல்லது இலக்கு அவசியமா? பறப்பதே நோக்கம் எனும்போது கூடுதல் லட்சியம் எதற்கு?

ஆசைகளுக்குச் சிறகுகள் என்றோ முளைத்து விட்டன. தனக்கு எப்போது முளைக்கும்?

சங்கட் மோட்சன் ஆஞ்சநேயர் கோவில் நெருங்கி விட்டது. 'பஜ்ரங் பலி கீ ஜெய்! மஹாவீர் அனுமான் கீ ஜெய்' என்ற குரல்கள் உரத்து ஒலித்துக் கொண்டிருந்தன. வாசலில் சின்னச் சின்ன தூத்பேடாக்களை மூங்கில் தட்டுக்களில் வைத்து விற்றுக் கொண்டிருந்தார்கள். பிரசாதம். ராமபிரான் கொட்டாவிக்கு சொடுக்குப் போடாத சமயத்திலெல்லாம் கையில் கதையுடன் அருள்பாலித்துக் கொண்டிருந்த அனுமனுக்கு இனிமையான நைவேத்தியம்.

மாருதிக்கென்ன, இறக்கைகள் இல்லாமலேயே கடலைக் கடந்து விட்டார். தான் அப்படியில்லையே. மனதைப் போலவே படபடவென்று அடித்துக் கொள்ளும் இறக்கைகள் உடனடித் தேவை. துணைக்குக் கூடவே ஏதாவது பறவை (புறா அல்லது குருவி போன்ற வன்முறை கலக்காத வகைதான்) பக்கவாட்டில் பறந்தபடியே வந்தால் பயமின்றிப் பறக்கலாம்.

'அதெல்லாம் சரி, என்னால் பறக்க முடியுமா?' - பலமுறை

அருண்சரண்யா

# 1

இந்தக் கேள்வி முன்ன மேயே எழுந்ததுண்டு. பெரும்பாலும் மனத்தில் – சில சமயம் வாய்விட்டே. குரலை உயர்த்தியெல் லாம் கட்டுப்படுத்த மாட்டார் அப்பா. வார்த்தைகளைக் கொண்டே அந்த வித்தையைச் செய்து விடுவார். "பறக்கணுமா?" என்று கேட்டுச் சின்னதாய்ச் சிரித்துவிட்டு, "பெண்ணாய்ப் பிறந்த வளுக்கு எப்போதும் கால்கள் பூமி யிலே பதிஞ்சிருக்கணும். கண் களும்தான்" என்பார்.

அப்போதைக்கு உற்சாகம் அடங்கிவிடும். என்றாலும் காற்றில் சாம்பல் விலகும் போது எட்டிப் பார்க்கும் செந்தணல் போல், அதே கேள்வி மீண்டும் மனத்தில் சுடுகாய்த் தோன்றி மின்சார மாய்ப் பரவும்.

வாரணாசி – புண்ணிய பூமி. நினைத்தாலே மோட்

## வீணாகிக் கொண்டிருக்கும் குடிநீர்!

பல்லாவரம், ஆலந்தூர் நகராட்சிப் பகுதிகளுக்கு, பாலாற்றிலிருந்துதான் குழாய் மூலம் குடிநீர் கொண்டுவரப் படுகிறது. வழக்கமாகவே, ''மின்சார அழுத்தம் போதவில்லை; அதனால்தான் இங்குள்ள மேல்நிலைத் தொட்டிகள் சரியாக நிறையவில்லை; எனவேதான் இன்றைக்குக் குடிநீர் விநியோகம் சரியாக இல்லை!'' என்று நகராட்சியினர் மக்களுக்குச் சமாதானம் சொல்வார்கள். அதுவும் வரப்போகிற மாதங்களில் சென்னைக்கும் அதன் புறநகர்ப் பகுதிகளுக்கும் வரப்போகும் குடிநீர்ப் பஞ்சத்தை நினைத்தால் பகீரென்கிறது.

இந்த நிலையில் பாலாற்றிலிருந்து குழாய் மூலம் கொண்டுவரப்படும் குடிநீரை எத்தனை கவனமாகக் கொண்டுவர வேண்டும். அதுதான் இல்லை! கூடுவாஞ்சேரிக்கு அருகில் பாலாற்றுக் குழாயில் உடைப்பு ஏற்பட்டு, பல நாட்களாகக் குடிநீர் வீணாகிக் கொண்டிருப்பதைத்தான் படத்தில் பார்க்கிறீர்கள்.

– இளங்கோவன்



சம். விஸ்வநாதர் மகிமை. அன்னபூரணி ஆட்சி. இங்கு பறக்க தவம் செய்திருக்க வேண்டும். பக்தியை சுவாசித்து விண்ணில் வாழ்வது எவ்வளவு பரவசம்!

ஆனால் எண்ணங்கள் சிறகடித்தாலும் பாதங்களைப் பார்த்துப் பார்த்து வைக்க வேண்டிய கட்டாயத்திலிருந்தாள் சுவாதி. ஏராளமான மாடுகள். 'நாய்களும் நாங்களும் ஒன்றல்லவே' என்பது போன்ற கர்வத்துடன் நடுத்தெருவில் தங்கள் கழிவுகளைச் சிதற விட்டிருந்தன. தவிர, இந்திய நியதிக்கேற்ப சைக்கிள் நுழைய முடியாத இடைவெளிகளிலும் நுழைந்து கொண்டிருந்தன ஆட்டோக்கள். காளிதாசன் அருகிலிருந்த காசியை விட்டு "காஞ்சி"க்கே சிறந்த நகரம் என்று ஓட்டுப் போட்டானென்றால் காரண மில்லாமலா?

வழியில் தென்பட்ட விநாயகர் கோவிலுக்கு முன் செருப்புகளைக் கழற்றி விட்டு பிரார்த்தித்துக் கொண்டாள். அவளைப் பொறுத்தவரை பிரார்த்தனை என்பது தெரிந்த ஸ்லோகங்களைச் சொல்வது மட்டுமே. தன்னைப் பெற்றெடுத்தவுடனேயே இறந்து விட்ட அம்மாவை அவன் மீண்டும் தந்து விட மாட்டான் என்பது மட்டும் புரிந்திருந்தது. மற்றபடி, "இறைவனிடம் என்ன கேட்க வேண்டும்?" என்பது அவளுக்கு விளங்காத விஷயம். இது மட்டுமா, பல விஷயங்கள் அவளுக்கு விளங்கியதில்லை.

"இன்னும் ரெண்டு வருஷத்திலே நாமெல்லாம் மேஜராயிடுவோம்" என்று பள்ளித் தோழி சுதா சொன்னபோது அப்பாவித்தனமாக, "எனக்கு ராணுவத்திலே சேர ஆசையில்லே. அப்பா விட மாட்டார்'' என்று பதிலளித்திருக்கிறாள். வகுப்பே சிரித்தது. பதினெட்டு வயது நிறைந்தால் மேஜர் என்பது 'ஐந்து ராங்க்குக்குள் தொடர்ந்து பெற்று வந்தும் அறிவு வளராத' அவளுக்கு எடுத்துக் கூறப் பட்டது.

''மேஜர் என்பதற்கு இதுதான் அர்த்தமா?'' என்று அவள் சற்றே கூச்சத்தோடு கேட்க, ''அது மட்டுமில்லே. காதலனுடன் ஓடிப் போக சட்டம் அனுமதிக்கும்னும் அர்த்தம்'' என்றாள் காதம்பரி. சுவாதி காதுகளைப் பொத்திக் கொண்டாள்.

அன்று மாலை கொஞ்சம் கிண்டலும், நிறைய அக்கறையுமாக சுதா கேட்டாள். "ஆர்மியிலே சேர இஷ்டமில்லேன்னுட்டே, ஓகே. பின்னே வருங்காலத்திலே என்ன செய்யப் போறே?"

"அப்பாவைத்தான் கேக்கணும்."

கேள்வியைச் சற்றே மாற்றிக் கேட்டாள் தோழி. "உங்கப்பா உன்னை என்ன படிக்க வைக்கப் போறார்ன்றது இருக்கட்டும். உனக்கு என்னவாக ஆகணும்னு ஆசை?"

சுதாவுக்குச் சொல்வது இருக்கட்டும். இந்த அடிப்படைக் கேள்வியைத் தனக்குள்ளேயே எழுப்பிக் கொண்டபோது பெரும் பாலும் குழப்பம்தான் மிச்சமானது.

இந்தக் கேள்விக்குப் பதில் தெரியாம லேயே தான் நினைவு தெரிந்த நாளிலிருந்து வளர்ந்த டேராடூனை விட்டு காசிக்கு வரும் படி ஆகிவிட்டது. எதற்காக இந்த இடமாற்றம் என்பதும் விளங்கவில்லை. அப்பா சொல்லவில்லை.

"யாரு சுவாதியா?" என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தாள். ருக்மிணிபாய் பாட்டி. அவர்புறமாக நகர்ந்து மின்னல் வேகத்தில் அவரது இரண்டு பாதங்களையும் வலது கையால் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டாள். இந்தப் பதினெட்டு வருடங்களில் பதிந்து விட்ட பழக்கம். ருக்மிணிபாய் பாட்டியின் வலது பாதத்தில் கறுப்புச் சங்கு போன்ற ஒரு மச்சம் இருந்தது மனத்தில் பதிந்தது. மற்றவர்களின் பாதங்களில் உள்ள அடையாளங்கள் மனத்தில் ஏனோ அழுத்தமாகவே தங்கி விடுகின்றன.

"நல்லாயிரு. ஆமாம், எங்கே இந்தப் பக்கம்? அப்பாவைத் தேடிக்கிட்டா?"

"ஆமாம் பாட்டி. பதினோரு மணிக்கே சாப்பிட வந்துடுவார். ஒரு மணியாகியும் இன்னமும் வரல்லே. உச்சிகால பூஜை கூட முடிஞ்சிருக்குமே. கவலையாக இருந்தது. அதுதான் புறப்பட்டேன்."

"கவலைப்படாதே. கோயிலிலேதான் இருப்பார். அவருக்குத்தான் பக்திப் பரவசத்திலே மூழ்கிட்டா உலகமே தெரியாதே. சரி வரேன்" என்றபடி பாட்டி நகர, சுவாதி நடையைத் தொடர்ந்தாள்.

அனுமான்காட் வழியாகச் செல்லலாமா அல்லது கடைத்தெரு வழியாகவா என்பதில் ஒரு சின்னக் குழப்பம். இரண்டும் சமதூரம் தான் என்றாலும், "அடி அசடே, அந்த வழியாகவா வந்தாய்?" என்று அப்பா குற்றம் சாட்டுவாரோ என்ற தயக்கம்.

ஒருவழியாக மகாலிங்கேஷ்வர் கோயிலை அடைந்தபோது அப்பாவின் குரலில் லிங்காஷ்டகம் கணீரென்று கேட்டது.

'தேவமுனி ப்ரவாரார்ச்சித லிங்கம்

காமதகன கருணாகர லிங்கம்'.

அப்பாவின் குரல் தழுதழுப்பது புரிந்தது. "மனத்தில் எழும் காம உணர்வுகளை எரித்து விடும் கருணை பொங்கும் சிவபெருமானே" என்ற பொருள் படைத்த இந்த வரியை எப்போது கூறினாலும் அப்பாவின் மனம் நெக்குருகுவது புலப்படும். பீமலா தீதி கூட இதை ஒருமுறை கவனித்து விட்டாள். "பாவம் மனைவி இறந்து போய் இத்தனை வருஷம் மனதை அலைபாயவிடாமல் வாழுகிறார்னா அது சும்மாவா? ஈஸ்வர அனுக்கிரகமும் இல்லாமல் அது நடந்து விடுமா?" என்று அப்போது கூறினாள்.

ஒருவழியாக அப்பா லிங்காஷ்டகத்தை

### "நிஜ நியூஸை விட்டுடறாங்க!"



"சில நாட்களுக்கு முன்பு ஒரு நண்பர் என்னைச் சந்தித்தபோது, 'என்ன சார், மௌர்யா ஹோட்டல் உங்களுடையதா? உங்க தம்பிங்க அத்தனை பேருக்கும் வெளிநாட்டு கார் வாங்கிக் கொடுத்திருக்கீங்களாமே!' என்றார். எனக்கு பயங்கர ஷாக். இந்தச் செய்திகளையெல்லாம் ஒரு பத்திரிகையில் படித்துவிட்டுத்தான் அவர் என்னை இப்படிக் கேட்டிருக்கிறார். இப்படியா சார் பத்திரிகைல பொய் நியூஸ் போடுவாங்க? நான் கூடிய சீக்கிரம் முதியோர் இல்லம் ஒண்ணு கட்டப் போறேன். இது மாதிரியான நிஜமான நியூஸையெல்லாம் பத்திரிகைக்காரங்க கண்டுக்கறதே இல்லை!" என்று மிகவும் வருத்தப்பட்டவர் இசையமைப்பாளர் தேவா.

– ஆர்.எஸ்.ஏ.

பிரசாந்த் ரொம்ப ரொம்பக் கவலைப்படுகிற விஷயம் மூன்றாம் உலகப் போர். இது குறித்து நாஸ்ட்ரடேமஸ் எழுதி வைத்து விட்டுப் போனதைப் படித்ததால் வந்த கவலை இது. "அவர் எழுதிய மாதிரிதானே எல்லாமே நடந்துக்கிட்டு வருது. மூன்றாம் உலகப் போர்னு ஒண்ணு வந்தா, உலகம்




என்ன ஆகும்? நினைச்சாலே ரொம்ப பயமா இருக்கு!" என்று ஒருபுறம் கவலைப்பட்டாலும் விரைவில் சரித்திரப் படம் ஒன்றில் நடிக்கப் போகிறார் பிரசாந்த்.

—ஆர்.எஸ்.ஏ.

முடித்து விட்டிருந்தார். நெற்றியிலும், வெற்று மார்பிலும் ஸ்கேல் கொண்டு வரையப்பட்டது போன்ற கச்சிதமான விபூதிப் பட்டைகள். 'என் நெறியே உன்னதம்' எனும் பிடிவாதத்தை வெளிப்படுத்தும் கண்கள். களையான முகம். தீர்க்கமான உடற்கட்டு.

"பண்டிட்ஜி, பண்டிட்ஜி" என்று கோயிலில் குழுமியிருந்தவர்கள் அவரை நோக்கிக் கரம் குவித்து, அவர் அளித்த திருநீறை பயபக்தியுடன் வாங்கிக் கொண்டனர்.

ஒவ்வொருவராகக் கலைந்த பிறகு பண்டிட்ஜி – சுவாதியின் அப்பா என்ற சட்டையை மாட்டிக் கொண்டார்.

"எதற்காக இவ்வளவு தூரம் வந்தே?"

சுவாதி மௌனமாக இருந்தாள். கால்கள் தொய்ந்து கொண்டிருந்தன.

"சாப்பாட்டு வேளை வந்தும் நான் வரல்லியேன்னா?"

ஆமாம் என்பது போல் தலையசைத்தாள்.

"சிவபூஜையிலே நான் நேரத்தை கவனிக்க மறந்துட்டேன்" என்றபடி சன்னதி கதவை இழுத்துப் பூட்டிவிட்டு சாவியை இடுப்பில் செருகிக் கொண்டு கிளம்பும் போது அந்தக் கேள்வியை நறுக்கெனக் கேட்டார்.

"முன்னாவைத் துணைக்கு அழைச்சுக்காமல் நீ மட்டும் ஏன் தனியாக வந்தே?"

சுவாதிக்குப் புரியவில்லை. முன்னா என்ன தனக்குப் பெரிய துணை? பத்து வயதுப் பையன் அவன். போதாக்குறைக்கு மனநிலை சரியில்லாதவன். அதை அவ்வப்போது வெளிக்காட்டிக் கொண்டிருப்பவனும் கூட. அந்த முன்னா போய் தனக்குத் துணையா?

"அப்பா, முன்னா என்னைவிடச் சின்னவன்."

"ஆனால் அவன் ஆண் பிள்ளை" என்ற அப்பா தொடர்ந்தார்.

"ஒரு கதை சொல்றேன் கேள். பார்வையில்லாத அறிஞர் ஒருவர் தன் கையில் எரியும் மெழுகுவர்த்தியோடு நடந்து கொண்டிருந்தாராம். 'இந்த வெளிச்சத்தால் உங்களுக்கு என்ன பயன்?'னு ஒருத்தர் கேட்டபோது, 'மற்றவங்க இதைப் பார்த்து என் மேல் இடிச்சுக்காமல் இருப்பாங்களே'ன்னாராம். அந்த மாதிரிதான் முன்னா உன் கூட வருவதும். புரிந்ததா?"

சுவாதிக்குப் புரியவில்லை. டேராடூன் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்த அப்பா, அந்தப் பதவியை ராஜினாமா செய்துவிட்டு, இரண்டு வருடங்களுக்கு முன் காசிக்கு எதற்காக வரவேண்டும்? இங்கே கோவிலில் அர்ச்சகராகத் தமது வாழ்க்கையை ஏன் தொடர வேண்டும்?' என்ற கேள்விகளுக்கு பதில் கிடைக்காதது போலவே, இந்தக் கேள்விக்கான பதிலும் அவளுக்குப் புலப்படவில்லை.

(தொடர்ந்து பறக்கும்)

# பொன்னியின் செல்வன்



## பதினெட்டாம் அத்தியாயம்

## அம்பு பாய்ந்தது!

ஓடைக் கரையில் ஒரு மரத்தின் பின்னால் பாதி மறைந்தும் மறையாமலும் நின்ற ஊமை ராணியைப் பூங்குழலி பார்த்தாள். எதிர்பாராத சமயத்தில் எதிர்பாராத இடத்தில் அவளைக் கண்டதினால் பூங்குழலிக்குச் சிறிது திகைப்பு உண்டாயிற்று. அயல் மனிதர்களைப் பார்ப்பதில் ஊமை ராணிக்குப் பிரியம் இல்லை என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது. படகில் சேந்தன் அமுதன் இருக்கிறானே, அவனைக் கண்டு ஒருவேளை அத்தை ஓடி விடுவாளோ? - என்ற எண்ணம் அவள் மனத்தில் தோன்றிய அந்தக்கணமே அவளுடைய அத்தை ஓடத் தொடங்கி விட்டாள். பூங்குழலி சட்டென்று ஓடத்திலிருந்து ஓடைக் கரையில் குதித்து மேட்டில் ஏறிப் பார்த்தாள். அத்தை சற்றுத் தூரத்தில் அடர்ந்த காட்டுக்குள் மறைந்ததைக் கவனித்தாள்.

இதற்குள் சேந்தன் அமுதனும் கரையில் குதித்து மேட்டில் ஏறிப் பூங்குழலி நின்ற இடத்துக்கு வந்து சேர்ந்தான்.

"பூங்குழலி! பூங்குழலி! சற்று முன் இங்கே நின்றது யார்?" என்று கேட்டான்.

"உனக்குத் தெரியவில்லையா,

**அமரர் கல்கி**

அமுதா?"

"நிச்சியமாய்ச் சொல்லத் தெரிய வில்லை; ஒருவேளை..."

"ஆமாம்; என் அத்தைதான்! நீ செத்துப் போனதாக நினைத்துக்கொண் டிருந்த உன் பெரியம்மாதான்!"

"ஆமாம்; அம்மாவின் ஜாடை கொஞ்சம் இருந்தது போல் தோன் றியது."

"வெறுமனே ஏதாவது சொல்லாதே! சின்ன அத்தைக்கும் பெரிய அத்தைக் கும் உருவ ஒற்றுமை ஒன்றுமில்லை. குணத்தில் ஒற்றுமையும் இல்லை. வீட்டில் கட்டிப் போட்டிருக்கும் பசு எங்கே? காட்டில் எதேச்சையாகத் திரியும் சிங்க ராணி எங்கே?"

"சரி; அப்படியே இருக்கட்டும். ஏன் உன்னைப் பார்த்ததும் சிங்க ராணி ஓடிப் போய் விட்டாள்?"

பூங்குழலி சிரித்து விட்டு, "என்னைக் கண்டு ஓடவில்லை; உன்னைப் பார்த்து விட்டுத்தான் ஓடினாள். அயல் மனிதர் களைப் பார்ப்பதற்கு அவளுக்குப் பிரியமிருப்பதில்லை" என்றாள்.

"நான் அயல் மனிதன் அல்லவே?"

"அத்தைக்கு அது தெரியாதல்லவா? தெரிந்துகொண்டால் உன்னைப் பார்த்து விட்டு ஓட மாட்டாள். ஆனால் தெரிந்து கொள்வதற்கு முன் னால் ரொம்பவும் தயங்குவாள்."

"பூங்குழலி! இப்போது என்ன செய்யப் போகிறாய்?"

"அத்தையைத் தேடிப் பிடிக்கப் போகிறேன்."

"நானும் வரட்டுமா?"

"எதற்காக?"

"பெரியம்மாவை நேரில் பார்த்துத் தெரிந்து கொள்வதற்காகத்தான்."

"எதற்காகப் பெரியம்மாவை நீ தெரிந்து கொள்ள வேண்டும்?"

சேந்தன் அமுதன் தன் பெரியம்மா வின் பழைய வரலாற்றைச் சிறிது பூங் குழலியிடம் அறிந்துகொண்டிருந்தபடி யால் அவளைப் பார்க்க ஆவலாயிருந் தான். அத்துடன் பெரியம்மா தன் கட்சி யிலிருந்து பூங்குழலியின் மனத்தை மாற்றுவதற்கு உதவி செய்யக் கூடும் என்ற ஆசையும் அவனுக்கு இருந்தது.

"எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. ஆனால் பெரியம்மா வைத் தெரிந்து கொள்ள விரும்புவதற் குக் காரணம் வேண்டுமா, என்ன?" என்றான்.

பூங்குழலி சற்று யோசித்து விட்டு, "சரி, வா! போகலாம். உன்னையும் அழைத்துச் சென்றால் பெரியம்மா வைப் பிடிப்பது சற்றுப் பிரயாசையாக இருக்கும். ஆனாலும் யார் விடுகிறார் கள்? படகை இங்கேயே கட்டிப் போட்டு விட்டுப் போகலாம்!" என் றாள்.

அவ்விதமே படகை ஒரு தாழம்பூப் புதரின் அடியில் மறைவாக விட்டுக் கட்டியும் போட்டு விட்டு இருவரும் கோடிக்கரைக் காட்டை நோக்கிச் சென்றார்கள்.

நடந்துகொண்டே சேந்தன் அமுதன் "பூங்குழலி! பெரியம்மா இலங்கைத் தீவிலும் பூதத் தீவிலும் இருக்கிறாள் என்று சொன்னாயல்லவா?" என்றான்.

"ஆமாம்; சில சமயம் இலங்கைத் தீவிலும் சில சமயம் பூதத் தீவிலும் இருப்பாள்."

"இங்கே அடிக்கடி வருவதுண்டா?"

"இல்லை; அபூர்வமாகத்தான் வரு வாள். நான் வெகு நாள் அவளைப் போய்ப் பார்க்காமலிருந்தால் வரு வாள்."

"இப்போது உன்னைப் பார்க்கத்தான் வந்திருக்கிறாளா?"

"இந்தத் தடவை வேறு காரியமாக வந்திருக்கிறாள் என்று தோன்றுகிறது."

"வேறு என்ன காரியம்?"

"அவளுடைய சுவீகாரப் புதல்வன் கடலில் முழுகிப் போய் விட்டானா, தப்பிப் பிழைத்துக் கரை சேர்ந்தானா என்று தெரிந்து கொள்வதற்கு வந்திருக் கலாம். இளவரசர் கப்பலேறிப் புறப் பட்ட பிறகு, கடலில் சுழிக்காற்று அடித் தது அத்தைக்குத் தெரியும் அல்லவா?"

"அருள்வர்மர் இவளுடைய சுவீகாரப் புதல்வரா? அப்படியானால் பெரியம்மாவின் சொந்த மகன் யார்?"

"அதுதான் எனக்குத் தெரியவில்லை. ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் அந்த இரகசியத்தை நான் கண்டு

பிடித்துத் தெரிந்து கொள்ளப் போகிறேன்.''

''சொந்த மகன் உயிரோடிருக்கிறானோ, அல்லது இறந்து போய் விட்டானோ?''

''ஆம்; அவன் இறந்து போயிருக்கவுங் கூடும். யாருக்குத் தெரியும்?'' என்று சொன்னாள் பூங்குழலி.

சற்றுப் பொறுத்து, ''அமுதா! அத்தையைப் பார்த்தாயே? உன் அன்னையின் முக ஜாடையாயிருப்பதாகச் சொன்னாய்; வேறு யாருடைய முகமாவது ஞாபகத்துக்கு வந்ததா?'' என்று கேட்டாள்.

''ஏதோ ஞாபகம் வருவது போலத் தோன்றுகிறது. தெளிவாகத் தெரியவில்லை. மேகத்திரை போட்டு மறைத்தது போலிருக்கிறது.''

''பழுவூர் இளையராணியை நீ அடிக்கடி பார்த்ததுண்டா?''

''சில சமயம் பார்த்ததுண்டு. ஆமாம்! நீ சொன்ன பிறகு யாருடைய முக ஜாடை என்று தெரிகிறது. நந்தினி தேவியின் முகத் தோற்றமேதான்! ஆச்சரியமாயிருக்கிறதே! அது எப்படி ஏற்பட்டிருக்கும், பூங்குழலி? நீ எப்படி அந்த ஒற்றுமையைக் கண்டுபிடித்தாய்?''

''அத்தையை அடிக்கடி நான் பார்த்துக்கொண்டிருக்கிறேன். பழுவூர் இளையராணியைச் சில தினங்களுக்கு முன்னாலேதான் இதே கோடிக் கரையில் பார்த்தேன். முகத் தோற்றத்தின் ஒற்றுமை உடனே எனக்குத் தெரிந்து போய்விட்டது...''

''காரணம் என்னவாயிருக்கும்?''

''அதையுந்தான் ஒருநாள் கண்டு பிடிக்கப் போகிறேன். இன்றைக்கு அத்தையைப் பார்த்ததும் அதைப் பற்றிக் கேட்கலாமென்றிருக்கிறேன்.''

''அத்தைதான் ஊமையாயிற்றே? எப்படி அவளுடன் பேசுவாய்?''

''நீ உன் தாயாரோடு பேசுவதில்லையா, அமுதா!''

''ஜாடையினால் பேசுவேன். பிறந்தது முதல் பழக்கம். அப்படியும் புதிய விஷயம் ஒன்றைப் பற்றிச் சொல்வதாயிருந்தால் கஷ்டந்தான்!''

''பெரிய அத்தையும் நானும் அப்படித்தான் ஜாடையினால் பேசிக்கொள்வோம். ஜாடையினால் பேச முடியாததைச் சித்திரம் எழுதிக் காட்டிக் கொள்வோம்...''

''ஒரே குடும்பத்தில் அக்கா, தங்கை இருவரும் ஊமையாகப் பிறந்தது எவ்வளவு கஷ்டமான விஷயம்? அவர்களைப் பெற்றவர்களுக்கு அதனால் எவ்வளவு துன்பமாயிருந்திருக்கும்?''

''அது மட்டுமல்ல. சிறு வயதில் அக்காவும் தங்கையும் ஓயாமல் சண்டை போட்டுக் கொள்வார்களாம். அதனால்தான் பாட்டனார் பெரிய அத்தையை மட்டும் அழைத்துக்கொண்டு போய்ப் பூதத் தீவில் குடியேறி வசித்து வந்தாராம். பெரிய அத்தையின் பேரில் தாத்தாவுக்கு ரொம்ப ஆசையாம். குழந்தை பிறந்தவுடன் அவளுக்கு ராணியாகும் யோகம் இருக்கிறது என்று யாரோ ஜோசியன் ஒருவன் சொன்னானாம். அதனால் குழந்தை ஊமை என்று தெரிந்ததும் அவருடைய மன வேதனை ரொம்ப அதிகமாயிருந்ததாம்...''

இப்படிப் பேசிக்கொண்டே அவர்கள் காட்டில் புகுந்தார்கள். வெகு நேரம் தேடி அலைந்தும் ஊமை ராணியைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

''அமுதா! நீ என்னுடனிருப்பதனால்தான் அத்தையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. உன்னைக் கண்டு வேண்டுமென்றே மறைந்து கொள்கிறாள்.''

''என் அதிர்ஷ்டம் அவ்வளவுதான். நான் நினைத்தது எதுவும் நடைபெறுவதில்லை. நான் போகட்டுமா?''

''எப்படிப் போவாய்? இந்தக் காட்டிலிருந்து உன்னை நான்தான் வெளியிலே கொண்டு போய் விட வேண்டும்.''

இந்தச் சமயத்தில் ஓர் அதிசயமான குரலின் ஒலி காட்டுக்குள்ளேயிருந்து வந்தது. அது மனிதக் குரலாகவும்

தோன்றவில்லை; மிருகங்களின் குரலாகவும் தோன்றவில்லை.

இரண்டு மூன்று தடவை அந்த ஒலி கேட்டது. அந்த ஒலி வந்த திசையை நோக்கிச் சில மான்கள் பாய்ந்து ஓடின. பூங்குழலி சற்று நின்று யோசித்தாள்.



"அமுதா! சத்தம் செய்யாமல் என்னைத் தொடர்ந்து வா!" என்று கூறினாள்.



குரல் வந்த திக்கை நோக்கி இருவரும் மெள்ள நடந்து சென்றார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் அதிசயமான காட்சி ஒன்றைக் கண்டார்கள்.

ஊமை ராணி ஒரு மரத்தின் அடிப் பகுதியில் சாய்ந்து நின்றுகொண்டிருந்தாள். அவளுடைய கையில் இளந்தளிர்கள் சில வைத்துக்கொண்டிருந்தாள். அவளைச் சுற்றிலும் ஏழெட்டு அழகிய மான்கள் நின்றுகொண்டிருந்தன. அவள் கையிலிருந்த தளிர்களைத் தின்பதற்கு அவை போட்டியிட்டன. அவளுடைய தோளின் மீது ஒரு சிறிய மான் குட்டி உட்கார்ந்து தன் சின்னஞ் சிறிய அழகிய கண்களால் அவளுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தது.

இந்த அபூர்வமான தோற்றத்தைக் கண்டு பூங்குழலியும் அமுதனும் சிறிது நேரம் அசையாமல் நின்றார்கள்.

முதலில் ஊமை ராணியின் தோள் மேலிருந்த மான் குட்டிதான் அவர்களைப் பார்த்தது. பார்த்ததும் தோள் மீதிருந்து துள்ளிக் கீழே குதித்தது.

மற்ற மான்களும் அவர்களைப் பார்த்து விட்டன. எல்லா மான்களும் அவர்கள் நெருங்கி வந்தால் பாய்ந்து ஓடுவதற்கு ஆயத்தமாக நின்றன.

பின்னர் ஊமை ராணியும் அவர்களைப் பார்த்தாள். அவள் தொண்டையிலிருந்து இன்னொரு விசித்திரமான ஒலி வந்தது.

அதைக் கேட்டதும் மான்கள் எல்லாம் துள்ளிப் பாய்ந்து ஓடிப் போய் விட்டன.

"அத்தைக்கு மனிதர்களின் பாஷை மட்டுந்தான் தெரியாது. மிருகங்களின் பாஷை நன்றாய்த் தெரியும்" என்று பூங்குழலி சொல்லிக்கொண்டே, ஊமை ராணியிடம் சமிக்ஞை செய்தாள்.

ஊமை ராணி இம்முறை ஓட



வில்லை. பூங்குழலியைப் பார்த்துப் பதில் சமிக்ஞை செய்தான்.

பூங்குழலி நெருங்கி வந்ததும் ஊமை ராணி அவளைக் கட்டி அணைத்துக் கொண்டு உச்சி மோந்தாள்.

சேந்தன் அமுதன் சற்றுத் தூரத்திலேயே நின்றுகொண்டிருந்தான்.

அத்தையும் மருமகளும் சிறிது நேரம் மௌன பாஷையில் பேசினார்கள்.

பின்னர் பூங்குழலி அமுதனை அருகில் வரும்படி அழைத்தாள்.

ஊமை ராணி அவனை மேலுங்கீழும் சில தடவை உற்றுப் பார்த்து விட்டு அவன் தலை மீது கை வைத்து ஆசி கூறும் பாவனையில் சிறிது நேரம் இருந்தாள்.

பின்னர் கையை அவன் தலையிலிருந்து எடுத்துவிட்டுப் பூங்குழலியைக் கையை இழுத்துக்கொண்டு போனாள்.

மூன்று பேரும் ஓடைக் கரைக்கு வந்தார்கள்.

ஊமை ராணி அங்கேயே உட்கார்ந்துகொண்டு பூங்குழலிக்குப் போய் வரும்படி சமிக்ஞை காட்டினாள்.

பூங்குழலி "வா! அமுதா! வீட்டுக்குப் போகலாம். அத்தை வர மாட்டாளாம். இங்கே சாப்பாடு கொண்டு வர வேண்டுமாம்" என்றாள்.

இருவரும் கலங்கரை விளக்கை நோக்கிப் போனார்கள்.

"பூங்குழலி! எனக்கு என்ன சொல்கிறாய்?" என்று அமுதன் கேட்டான்.

"உன்னோடு தஞ்சைக்கு வரலாம் என்ற எண்ணம் எனக்கு இருந்தது. அது இப்போது சாத்தியமில்லை. அத்தைக்கு அவருடைய செல்வச் சுவீகாரப் பிள்ளையைப் பார்க்க வேண்டுமாம். ஆகையால் மறுபடியும் நாகைப்பட்டினப் பிரயாணம் எனக்கு இருக்கிறது. நீயும் உடன் வந்தால் அத்தை உடனே ஓடி மறைந்தாலும் மறைந்து விடுவாள். அவளிடம் நான் தெரிந்து கொள்ள வேண்டிய விவரங்களையும் தெரிந்து கொள்ள முடியாது."

சேந்தன் அமுதன் பெருமூச்சு விட்டு, "நான் கொடுத்து வைத்தது அவ்வளவு தான். அப்படியானால், இப்போதே உன்னிடம் விடை பெற்றுக் கொள்கிறேனே!" என்றான்.

"இல்லை, இல்லை! வீட்டுக்கு வந்து சாப்பிட்டு விட்டு உன் மாமன் முதலியவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு போ! இல்லாவிட்டால், என்னிடம் எல்லாரும் சண்டைக்கு வருவார்கள்!"

வழியில் இன்னோர் இடத்தில் ஒரு புதரின் மறைவில் நின்று ஒரு பெண்ணும் ஆணும் பேசிக் கொண்டிருப்பதை அவர்கள் பார்த்தார்கள்.

"ஆகா! அண்ணி ராக்கம்மாள் போலிருக்கிறது. இன்னமும் இரகசியப் பேச்சு முடிந்தபாடாக இல்லை. இப்போது வந்திருப்பவர்கள் யார்? அந்தப் பாண்டிய நாட்டு ஒற்றர்கள் தானா? வேறு யாராவதா?" என்று பூங்குழலி தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

ராக்கம்மாள் புதர் மறைவிலிருந்து வெளிப்பட்டு வந்தாள். பூங்குழலியைப் பார்த்ததும் சிறிது திடுக்கிட்டாள். ஆனால் அதை உடனே மறைத்துக் கொண்டு வேகமாக அவர்களண்டை நெருங்கி வந்தாள்.

"பூங்குழலி! இத்தனை நாட்கள் எங்கே தொலைந்து போயிருந்தாய்? உன் அப்பாவும் அண்ணனும் ரொம்பக் கவலைப்பட்டுப் போனார்களே!" என்றாள்.

"எதற்காகக் கவலைப்பட வேண்டும்? நான் வீட்டை விட்டுப் போவது இது தான் முதல் தடவையா?"

"இந்தத் தடவை உன் அத்தை மகனையும் அழைத்துக்கொண்டு போய் விட்டாயல்லவா? ஒருவருக்கும் சொல்லாமல் நீங்கள் கலியாணம் செய்து கொண்டு விடுவீர்களோ என்று கவலை!"

"அண்ணி! இந்த மாதிரி அசட்டுப் பேச்செல்லாம் என்னிடம் பேச வேண்டாம் என்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன்? இன்னொரு தடவை இவ்வாறு பேசினாயோ...?

"இல்லையடி, பெண்ணே! இல்லை!

நீ உன் அத்தை மகனைக் கலியாணம் செய்துகொண்டால் எனக்கு என்ன? அரச குமாரனைக் கலியாணம் செய்து கொண்டால் எனக்கென்ன? இலங்கையிலிருந்து உன் பெரிய அத்தை வந்து உன்னைத் தேடிக்கொண்டிருந்தாள். அவளை நீ பார்த்து விட்டாயா?'' என்றான்.

“இல்லை, இன்னும் பார்க்கவில்லை!'' என்று சொன்னாள் பூங்குழலி.

வீடு சேர்வதற்குள் சேந்தன் அமுதனிடம் தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்தபோது, “அமுதா! ஜாக்கிரதை! அண்ணி பாண்டிய நாட்டுச் சதிகாரர்களோடு சேர்ந்தவள். அவள் உன் வாயைப் பிடுங்கப் பார்ப்பாள். ஒன்றுக்கும் பதில் சொல்லாதே!'' என்றாள்.

“இங்கு நான் இருக்கும் இன்னும் சிறிது நேரமும் ஊமையாகவே இருந்து விடுகிறேன்'' என்றான் சேந்தன் அமுதன்.

அன்று பிற்பகலில் பூங்குழலி மறுபடியும் நாகைப்பட்டினத்தை நோக்கித் தன் ஓடத்தைச் செலுத்தினாள். படகில் ஊமை ராணி வீற்றிருந்தாள்.

ஊமை ராணியின் அருகில் இருக்கும்போது பூங்குழலி எப்போதும் மன நிம்மதி அடைவது வழக்கம். ஒத்த உணர்ச்சியுள்ள அவர்களுடைய உள்ளங்கள் ஒன்றுக்கொன்று அவ்விதம் அமைதியை அளிப்பதுண்டு.

ஆனால் இம்முறை பூங்குழலியின் மனத்தில் அத்தகைய நிம்மதி ஏற்படவில்லை.

சில நாளைக்கு முன்பு அதே ஓடத்தில் பொன்னியின் செல்வனை உணர்வு இழந்திருந்த நிலையில் அழைத்துப் போனது அவளுக்கு அடிக்கடி நினைவு வந்தது. அந்த இராஜ குமாரனை இன்னொரு இராஜ குமாரியிடம் சேர்ப்பிப்பதற்காகவே தான் அத்தனை கஷ்டத்திற்கு உள்ளானதை எண்ணியபோது அவளுடைய இதயத்தில் 'சுருக்'கென்ற வேதனை ஏற்பட்டது.

சேந்தன் அமுதனை ''ஊருக்குப் போ!'' என்று பிடித்துத் தள்ளியது போல் அனுப்பி விட்டதை எண்ணிய போது அவள் உள்ளம் இரங்கியது.

இந்த எண்ணங்களைத் தவிர, அன்று அவளுடைய தந்தை தியாகவிடங்கக் கரையர் செய்த எச்சரிக்கை அடிக்கடி நினைவுக்கு வந்துகொண்டிருந்தது.

''குழந்தாய்! உன்னுடைய போக்கு வரத்துகளைக் கொஞ்சம் கட்டுப்படுத்திக்கொண்டால் நன்றாயிருக்கும். யார் யாரோ புதுப் புது மனிதர்கள் இங்கே வந்துகொண்டிருக்கிறார்கள். எதற்காக வருகிறார்கள் என்று தெரியவில்லை. இராஜ்யத்தில் ஏதேதோ சதிகள் நடந்துகொண்டிருக்கின்றன. அவற்றில் நீ அகப்பட்டுக் கொள்ளாதே! நம்முடைய குடும்பம் என்றென்றைக்கும் சோழ குலத்து மன்னர் குடும்பத்துக்குக் கடமைப்பட்டது! இதை மறந்து விடாதே!'' என்று அவளுடைய தந்தை கூறினார்.

தந்தையின் எச்சரிக்கையோடு அண்ணியின் இரகசிய நடவடிக்கைகளையும் சேர்த்து எண்ணியபோது பூங்குழலிக்கு என்றுமில்லாத திகில் உண்டாயிற்று. ஒருவேளை அந்தப் புது மனிதர்கள் தன்னைத் தேடிக் கொண்டுதான் வந்திருப்பார்களோ? தன்னைத் தொடர்வதின் மூலம் பொன்னியின் செல்வன் இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க முயல்வார்களோ? தன் மூலமாக அது வெளிப்பட்டால் எவ்வளவு பெரிய குற்றமாக முடியும்...?

பூங்குழலியின் மனக் கலக்கத்தை அதிகமாக்கக் கூடிய விதமாக ஓடையின் கரையோரக் காடுகளில் சலசலப்புச் சத்தங்கள் கேட்டுக்கொண்டிருந்தன.

அப்போது காற்றே அடிக்கவில்லை. எட்டுத் திசைகளும் சதி செய்து கொண்டு காற்றைப் பிடித்துத் தடுத்து வைத்திருப்பது போல் இருந்தது.

அப்படியிருக்கும்போது ஓடைக் கரைக் காடுகளில் சலசலப்பு ஏற்படக் காரணம் என்ன?

ஊமை ராணிக்கு இந்தத் தொந்தரவு

ஒன்றுமில்லை. அவளுக்குக் காது கேட்காது. ஆகையால் சலசலப்புச் சத்தமும் காதில் விழாது. அவளிடம் அதைப் பற்றி யோசனை கேட்கவும் முடியாது.

ஆனால் ஊமை ராணிக்கு அதிசயமான வேறு சில சக்திகள் உண்டு. கண்ணால் பார்த்தும் காதால் கேட்டும் தெரிந்து கொள்ள முடியாத விஷயங்களை ஆறாவது புலனின் உதவியைக் கொண்டு அவள் கண்டு கொள்வாள். அவள் அறியாத அபாயம் ஒன்றும் தன்னை நெருங்க முடியாதல்லவா...?

இது என்ன? அத்தையும் கவலையோடு அடிக்கடி ஓடைக் கரையை அண்ணாந்து பார்த்துக்கொண்டு வருகிறாளே? உண்மையிலே அபாயம் ஏதேனும் தொடர்ந்து வருகிறதோ...?

அத்தை ஓடைக் கரையை அடிக்கடி பார்ப்பதின் காரணம் சீக்கிரம் வெளியாகி விட்டது. பூங்குழலியின் கவலையை அது போக்குவதாயிருந்தது.

ஓரிடத்தில் ஐந்தாறு மான்கள் ஓடைக் கரைப் புதர்களின் இடையில் தெரிந்தும் தெரியாமலும் நின்று படகை எட்டிப்



பார்த்தன! இல்லை: படகைப் பார்க்கவில்லை! ஊமை ராணியைப் பார்த்தன!

ஆகா! மான்களைப் போன்ற அழகான பிராணிகள் உலகில் வேறு எதுவும் இல்லை! மான்களைப் படைத்த கடவுள் எதற்காக மனிதர்களையும் படைத்தாரோ, தெரியவில்லை. சண்டாள மனிதர்கள்! இவ்வளவு அழகான பிராணிகளை வேட்டையாடிக் கொல்லுகிறவர்களும் இருக்கிறார்கள் அல்லவா...?

மான்களைப் பார்த்து, அவற்றின் அழகை நினைத்து, அதிசயித்த பூங்குழலியின் கரங்கள் துடுப்புப் போடுவதை நிறுத்தின. படகு நின்றது.



ஊமை ராணியின் தொண்டையி லிருந்து ஒரு விசித்திரமான ஒலி கிளம்பிற்று. அது அன்று காலையில் கேட்ட குரல் போல் இல்லை. அதில் திகிலும் எச்சரிக் கையும் கலந்திருந்தன.

அதைக் கேட்ட மான்களும் திகில் அடைந்து திரும்பி ஓடத் தொடங்கின.

அதே கணத்தில் எங்கேயோ மறை வான இடத்திலிருந்து ஓர் அம்பு விர் என்று வந்து ஒரு மானின் மீது தைத்தது.

அவள் மானின் சமீபத்தை அடைந்த அதே சமயத்தில் நாலா புறத்துப் புதர் களிலும் சலசலப்புச் சத்தம் உண்டாயிற்று. அடுத்த வினாடியில் ஏழெட்டுப் பேர் வந்து



அம்பு தைத்த மான் சோகம் நிறைந்த ஓலமிட்டது!

ஊமை ராணி படகிலிருந்து கரையில் தாவிக் குதித்துக் காயமடைந்த மானை நோக்கி ஓடினாள்.

அவளைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர் களில் பலர் கையில் வேலாயுதங்கள் இருந் தன. சற்றுத் தூரத்தில் அவர்களுக்கு வழி காட்டி அழைத்து வந்த ராக்கம்மாளும் காணப் பட்டாள்.

ஊமை ராணி தப்பி ஓட முயன்றாள்;

முடியவில்லை. தப்பி ஓடுவது இயலாத காரியம் என்று அறிந்ததும் ஊமை ராணி சும்மா நின்று விட்டாள்.

இரண்டு பேர் நெருங்கி வந்து அவளுடைய கைகளைக் கயிற்றினால் பிணைத்துக் கட்டினார்கள்.

இவ்வளவும் பூங்குழலி பார்த்துக் கொண்டிருக்கும்போதே சில வினாடி நேரத்தில் நிகழ்ந்து விட்டன. ஊமை ராணியின் கரங்களைக் கயிற்றினால் கட்டுகிறார்கள் என்பதை அறிந்ததும் பூங்குழலி படகிலிருந்து பாய்ந்து கூச்சலிட் டுக்கொண்டு ஓடி வந்தாள். கையிலிருந்த துடுப்பை ஓங்கிக்கொண்டு வந்தாள்.

ஊமை ராணியைச் சுற்றி நின்றவர்களில் ஐந்தாறு பேர் பூங்குழலியை நோக்கி ஓடி வந்தார்கள். அவளைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய்ப் படகில் தூக்கிப் போட்டுக் கயிற்றினால் இறுக்கிக் கட்டி விட்டார்கள்.

பிறகு திரும்பிச் சென்றார்கள். அவர்களுடன் சாவதானமாக வந்த ஊமை ராணியையும் அழைத்துக்கொண்டு சில விநாடி நேரத்தில் மறைந்து விட்டார்கள்.

(தொடரும்)



# கண்டமனூர் காட்டில் கம்ப்யூட்டர் கல்வி!

தேனியிலிருந்து 22 கி.மீ. தொலைவில் இருக்கிற கண்டமனூர் வனப்பகுதி, இப்போது செய்தித்தாள்களில் திடீரென்று இடம் பெறத் தொடங்கியிருக்கிறது. சாதிக் கலவரங்களுக்குப் பெயர் போன இப் பகுதியைச் சேர்ந்த கிராமங்கள், இன்று அமைதிப் பூங்காவாகத் திகழ்கின்றன.

கண்டமனூரைச் சுற்றியுள்ள வனப் பகுதிகளில், மரங்களை வெட்டியும், வெள்ளாடுகளை மேயவிட்டும் காட்டை அழித்துக்கொண்டிருந்த கிராமத்தினரை அழைத்து, 'வெள்ளாடுகளை விற்று விடுங்கள். மரத்தை வெட்டாதீர்கள். உங்கள் பிழைப்புக்கு மாடு வாங்கி வைத்துக் கொண்டு, பால் வியாபாரம் செய்யுங்கள்!'' என்றார்கள் வனத்துறை அதிகாரிகள். அதற்குப் பலன் கிடைத்தது.

கிட்டத்தட்ட இரண்டு வருடங்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட தமிழ்நாடு காடு வளர்ப்புத் திட்டம், இன்று கண்டமனூரில் வெற்றி கண்டதில் பாதிப் பெருமை அந்த வனப் பகுதியை ஒட்டிய புதுராமச்சந்திரபுரம், கணவாய்ப்பட்டி கிராமத்தினரைச் சேரும். ஏனென்றால் மதுரையிலிருந்து வந்த வனத்துறை அதிகாரிகள் ராம்குமாரும், சண்முக சுந்தரமும் இத் திட்டத்தை எடுத்துச் சொன்னபோது, முதலில் இவர்கள் தயங்கினாலும் பிறகு மனசு மாறி, முழு ஒத்துழைப்புத் தந்தார்கள்.

வனத்துறையின் 150 வருட காலச் சரித்திரத்தில், இப்போதுதான் முதன் முதலாக நவீன வனத்துறை நிர்வாகத் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறதாம்.

முதலில் வனங்களை நம்பி வாழும் கிராம மக்களுக்கு, மாற்று வருவாய்த் திட்டம் கொடுப்பது. இரண்டாவது, இந்திய அரசின் சமூக பாலிடெக்னிக் திட்டத்தில், பத்தாவது படித்துவிட்டு, வேலை வாய்ப்பு இல்லாத கிராமத்து மாணவ – மாணவிகளுக்கு வேலை வாய்ப்புப் பெற்றுத் தரும் கம்ப்யூட்டர் – டைப் ரைட்டிங் – பயிற்சி அளிப்பது. பெண்களுக்குத் தையல் பயிற்சி.

டைப்ரைட்டர்கள், கம்ப்யூட்டர்கள், தையல் மெஷின்கள் எல்லாம் வாங்கி வந்த பிறகு, இவற்றை வைத்துப் பயிற்சிகள் கொடுக்க இடம்?

''என் குவார்ட்டர்ஸ் முழுவதையும் இப்போதைக்கு ட்ரெயினிங் சென்ட்டராக வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று தம் வீட்டை அப்படியே கொடுத்து விட்டார் கண்டமனூர் வனத்துறை ரேஞ்சர் ஷேக் உமர். (இப்போது ஒரு கிலோமீட்டர் தூரத்தில் உள்ள புதுராமச்சந்திரபுரத்தில் 60 சென்ட் நிலம் வாங்கிப் பதிவு செய்து, சென்ட்டருக்கான கட்டட வேலைகளைத் தொடங்கி விட்டார்கள்.)


• டைலரிங் வகுப்பு

இதற்கு முன்னால் வாழ்க்கையே தினசரிப் போராட்டமாக இருந்தது. இப்போது கறவை மாடுகள் வாங்கப் பத்தாயிரம் ரூபாய் கடன் தந்ததும், பால் விற்றுச் சம்பாதிக்கிறார்கள் குருவம்மாளும், வள்ளியம்மாளும், துர்க்கையம்மாளும், மாரியம்மாளும். (கடனைத் திரும்பச் செலுத்தவும் தொடங்கி விட்டார்கள்.)

நிலப் பாதுகாப்பு வேலைகளில் உற்சாகமாக ஈடுபட்டார்கள். நிறையச் செடி



• கம்ப்யூட்டர் பயிற்சி

எண்ணெய் வித்துக்கள் ஏராள மாய்த் தர.

மாணவ – மாணவிகளுக்கு டைப்ரைட்டிங் வகுப்புகள் நடத்துகிறார் ஆசிரியை மங்களம். சிவகாமி டெய்லரிங் வகுப்புகள் எடுக்கிறார். (இப்போதே தங்கள் குடும்பத்துக்கு வேண்டிய பாவாடை – ஜாக்கெட்டுகளைத் தாங்களே தைத்துக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள்!) ஆசிரியர் முருகன் மாணவ – மாணவிகளுக்கு கம்ப்யூட்டர் பயிற்சிகள் கொடுக்கிறார். ஜாவா – ஆரகிள் எல்லாம் இப்போது இவர்களுக்கு சகஜமாகி விட்டது. பயிற்சி பெற்ற பிறகு கிடைக்கும் சான்றிதழ்களை வைத்து, வங்கிகளில் கம்ப்யூட்டர் வாங்கக் கடனுதவி கிடைக்குமாம்.



• ஆசிரியை மங்களம்

வகைகளை நட்டார்கள். இப்போது முதல் தடவையாக, நெல் சாகுபடிகூடச் செய்து விட்டார்கள்!

"ஓடைகளை மறிச்சு, தண்ணி வீணாப் போயிடாம செக் – டாம் கட்டுனோம். கிணத்துல நிறையத் தண்ணி ஏறிச்சு. நிறையத் தண்ணி நிலத்தடிக்கும் போச்சு. நில அரிப்பு வராம இருக்க, ஓடைக்கு ரெண்டு புறமும் மூங்கில் நட்டோம்!'' என்கிறார்கள்.



• வனத்துறை அதிகாரிகள்

"மண் வளப் பாதுகாப்புக்கு இன்னும் முக்கியத்துவம் கொடுத்தா, பயிர் விளைச்சலுக்கு நிறைய நிலம் இருக்கும்!" என்கிறார் வனத்துறை அலுவலர் கலைவாணன். (இவர் சயன்ஸ் பட்டதாரியும்கூட!)

புளிய மரமும், நாவல் மரமும் தவிர, புங்கனும் வேம்பும் நட்டிருக்கிறார்கள். முதல் இரண்டும் பழம் தர. மற்ற இரண்டும்

அருகிலுள்ள அரசுப் பள்ளியில் ஆசிரியராக இருக்கும் எம்.ஏ.எம்ஃபில் படித்த வேலுச்சாமி டைப்ரைட்டிங் கற்றுக் கொள்கிறார். பி.ஏ.பி.எட் படித்த மாலா தனியார் பள்ளி ஒன்றில் ஆசிரியை. ('சம்பளம் ரொம்பக் குறைச்சலுங்க') இவரும் டைப்பிங், டெய்லரிங், கம்ப்யூட்டர் எல்லாம் கற்கிறார். கம்ப்யூட்டரில் 25 பேர் கற்கிறார்கள். டெய்லரிங்கில் 25 பேர் பயிற்சி முடித்து, அடுத்த பாட்ச் ஆரம்பமாகிவிட்டது.

ஜப்பானிய சர்வதேசக் கூட்டுறவு வங்கி, வனங்களைக் காப்பாற்ற என்றே கொடுத்த 500 கோடி ரூபாய்க் கடனுதவியால், கண்டமனூர் வனச் சரகம், ஒரு முன்னுதாரணமான வெற்றிக் கதையைச் சொல்லுகிறது. மதுரை – தேனி மாவட்டங்களில் இன்னும் 25 கிராமங்களில் இத் திட்டத்தைச் செயல்படுத்தப் போகிறார்கள். 2001க்குள் 1000 கிராமங்களை இப்படி மாற்றி அமைத்து விட முடியும் என்கிறார்கள் வனத்துறை அதிகாரிகள்.

சேலம், தர்மபுரி வனப் பகுதிகளிலும் இதே மாதிரி திட்டங்களைச் செயல்படுத்தத் தொடங்கியிருக்கிறார்கள்.

— சாருகேசி

**அரசாங்க விருதுகளின் மதிப்பு குறித்து அடிக்கடி விவாதம் எழுகிறது... 'பிரச்னை ரொம்பப் பழசு!' என்பதை உணர்த்தும் கட்டுரை இது...**

**தி**ருவாளர் வேல் முருக தாஸர் கிறிஸ்து வரல்ல; சுத்த சைவர். ஆனாலும் அவருக்கு ஜனவரி 1, ஒரு பெரிய விசேஷ தினமா யிருந்தது. அன்று காலை அவர் எழுந்ததும் அப்யங்கன ஸ்நானம் செய்து பூஜை, புனஸ் காரங்களை முடித்து, சிற்றுண்டியருந்தி விட்டுக் கூடத்தில் வந்து நாற்காலியில் உட் கார்ந்தார். அவ்வூர் தபாலாபீஸில் ஒன்பது மணிக்குத் தபால் பட்டுவாடா செய்வது வழக்கம். தபாலை வாங்கிக் கொண்டு வரும் படி எட்டு மணிக்கே ஆள் அனுப்பினார். "துரு மெயில் மாதிரி வந்து சேரணும்" என்று கட்டளையிட்டார்.



அவருடைய பேரப் பிள்ளை பழனியாண்டி அந்தப் பக்கம் வந் தான். அவனை அருகில் அழைத் தார். தம்முடைய ஆள் காட்டி விர லையும் நடுவிரலையும் மூக்கிலே வைத்து எடுத்து, பையன் முன் நீட்டி "இந்த இரண்டு விரலில் ஒன்றைத் தொடு'' என்றார். பையன் நடு விரலைத் தொட் டான். "சீ! தரித்திரம்! மூதேவி!" என்று அவனைத் திட்டி முதுகில் ஒரு அடி வைத்தார். பையன் நாக்கைப் பிதுக்கிக் காண்பித்துத் "தாத்தாவுக்குப் பட்டப் பைத்தி யம்" என்று சொல்லிக் கொண்டே ஓடிப் போனான்.

உண்மையில், வேல் முருக தாஸருக்குப் பைத்தியம் கியித்தியம் ஒன்றுமில்லை. வயது ஐம்பதுக்கு மேலானாலும், அவரது மூளை நல்ல நிலை மையில் தான் இருந்தது. ஆனால் இச்சமயம் பேரப்பையன் ஆள் காட்டி விரலைத் தொடாமல் நடுவிரலைத் தொட்டபடியால் சிறிது அவரது மூளையைக் குழப்பி விட் டான். ஏனெனில், அவன் ஆள்காட்டி விர லைத் தொட்டால் இன்று வரும் பத்திரி கையில் புது வருஷப் பட்டம் பெற்றவரின் ஜாபிதாவில் தமது பெயரும் வரும் என்று அவர் நினைத்துக் கொண்டார்.

இப்பொழுது கொஞ்சம் சந்தேகம் தோன்றி விட்டது. ஒரு வேளை இல்லாமற் போய் விடுமோ? தலைக்கு மேல் கௌளி 'கொட்' என்றது. அதற்குப் பலன் என்ன வென்று பஞ்சாங்கத்தை எடுத்துப் பார்த் தார். "ஓடிப் போன மனைவி திரும்பி வரு வாள்" என்றிருந்தது. பஞ்சாங்கத்தை அப் படியே தூக்கி அந்தக் கௌளியின் மேல் விட்டெறிந்தார். பர்த்தாவுக்கேற்ற பதிவிர தையாயிருந்த அவருடைய பத்தினி காலஞ் சென்று வருஷம் எட்டாகி விட்டது.

'சீச்சீ! இதெல்லாம் சுத்த அசட்டுத்தனம்! ''நாளென் செயும் கோளென் செயும்'' என்னும் பாட்டைச் சொல்லிக் கொண்டார்.

பழனியாண்டவன் கலியுக வரதனா யிற்றே. அவனை நம்பியது வீண் போகுமா? சென்ற வருஷந்தானே ரூ. 365 செலவழித்துப் பஞ்சாமிர்த அபிஷேகம் பண்ணி வைத் தோம்? திருப்புகழ் பஜனை கோஷ்டிக்கு மாதம் ஒருமுறை 'மகேசுவர பூஜை' நடத்தி வருவதும் விழலுக்கிறைத்த நீராகுமா? ஒருநாளுமில்லை.

** ** **



**வே**ல் முருக தாஸர் பரம பக்தசிகா மணி; ஆனால் கர்ம வீரருங்கூட. பழனி யாண்டவனை அவர் நம்பினார்; அத்துடன் சும்மா இருந்துவிடவில்லை. மேற்கொண்டு வேண்டிய காரியங்களையும் செய்திருந்தார்.

பெட்டியைத் திறந்து அதில் பத்திரமாய் வைத்திருந்த ஒரு பழைய பத்திரிகைத் துணுக்கை எடுத்தார். அதுசென்ற வருஷத் துப் பத்திரிகை. கவர்னர் லண்டன்டர்ரி பிரபுவின் செல்வச் சிரஞ்சீவி மருமகனுக்கு நடந்த கலியாண வைபவத்தை அதில் வர்ணித்திருந்தது. கலியாண வர்ணனை முடிந்த பிறகு, தம்பதிகளுக்கு அளிக்கப் பெற்ற பரிசுகளின் விவர ஜாபிதா ஒன்றும்

இருந்தது.

சென்னை மாகாணத்தின் பிரமுகர்கள் அநேகமாக எல்லாருடைய பெயர்களும் அதில் காணப்பட்டன. அப்பெயர்களுக்கு நடுவே இருந்து "மிஸ்டர் வேல் முருக தாஸ்: செக்" என்னும் வார்த்தைகளுக்கு அடியில் சிவப்புப் பென்ஸிலால் கோடு இழுக்கப்பட்டிருந்தது.

சிலர் ஆபரணங்கள், சிலர் பொன் வெள்ளிப் பாத்திரங்கள், சிலர் உடைகள், சிலர் கடிகாரம் நிலைக்கண்ணாடி முதலிய பொருள்கள், இவ்வாறு பலவிதமான பரிசுகள் அளித்திருந்தார்கள். ஆனால் பொறுக்கான நாலைந்து பெரிய மனிதர்கள் மட்டுந்தான் 'செக்' கொடுத்தவர்கள். அவர்களில் நமது வேல்முருக தாஸரும் ஒருவர்.

மேற்படி பத்திரிகைத் துணுக்கை எடுத்துப் பார்த்ததும் வேல் முருக தாஸருக்கு மறுபடியும் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. ஆனால் பட்ட ஜாபிதாவில் எந்தப் பகுதியின் கீழ் தமது பெயர் வரக்கூடும்? அதில் தான் கொஞ்சம் சந்தேகம். "திவான் பகதூர்" எதிர் பார்க்கலாமா? கொஞ்சம் அதிகந்தான். "ராவ் சாகிப்" ரொம்ப கீழ்த்தரம். செக்கில் கண்ட தொகைக்குக் கொஞ்சமும் பொருத்தமானதல்ல. எனவே, "ராவ்பகதூர்" பத்தியில் தான் வரவேண்டும்.

** ** **

டிங், டிங், டிங்-மணி ஒன்பதடித்தது. தபாலை வாங்கிக் கொண்டு வேலைக்காரன் குடல் தெறிக்க ஓடி வந்தான். வழக்கத்திற்கு மாறாக மற்ற தபால்களையெல்லாம் தூரப் போட்டுவிட்டு பத்திரிகையைப் பிரித்தார். பத்திரிகைக்காரர்கள் மிகவும் சிரத்தையுடனே வெளியூர் நேயர்களுக்கும் ஜனவரி முதல் தேதியன்றே பட்ட ஜாபிதா சேருமாறு டிசம்பர் 31, பத்திரிகையுடன் விசேஷ அனுபந்தமாகச் சேர்த்து அனுப்பியிருந்தார்கள். வேல் முருக தாஸர் அந்தப் பகுதியை அவசரமாக எடுத்தார். **கே.ஸி.ஐ.இ., நைட், ஸி.ஐ.இ., திவான் பகதூர்**-இவைகளை மளமளவென்று தள்ளிக் கொண்டு வந்து **ராவ் பகதூர்** வந்ததும் ஆவலுடன் நோக்கினார். அதில் முதன் முதலாக இருந்த பெயர் எதுவென்று நினைக்கிறீர்கள்? சந்தேகமென்ன? மிஸ்டர் **ஸி.எம். வேல்முருகதாஸர்** என்னும் பெயர்தான்! பழனியாண்டவனிடத்தில் நமது தாஸருடைய பக்தி எப்படிப் பெருகியிருக்குமென்று சொல்லவும் வேண்டுமோ?

## பின்னுரை

நேயர்களுக்கு இந்தக் கதையின் முடிவு ஏமாற்றத்தையளித்திருக்குமென்பதை நான் அறிவேன். வழக்கம் போல் கதை ஓர் ஆச்சரியத்துடன் முடியவில்லையேயென்று நினைக்கிறீர்களல்லவா? எனினும், ஊன்றிப் பார்த்தால் இதிலும் ஓர் ஆச்சரியம் இருப்பதைக் காண்பீர்கள். வழக்கத்துக்கு மாறாக ஆச்சரியம் ஒன்றும் இல்லாமல் முடிவதே ஓர் ஆச்சரியமல்லவா?

இருக்கட்டும்; கதையை வேறு எந்த விதத்தில் முடித்திருக்கலாமென்று உங்களுக்குத் தோன்றுகிறது?.... "ராவ்பகதூர் ஜாபிதாவில் தாஸரின் பெயர் இல்லை. உடனே அவர் மார்படைத்து இறந்து விழுந்தார். தகன ஸம்ஸ்காரங்கள் நடைபெற்றன. மறுநாள் வந்த பத்திரிகையில் பின் வரும் திருத்தம் காணப்பட்டது: – 'நேற்று வெளியான பட்ட ஜாபிதாவில், ராவ் பகதூர் பட்டம் பெற்றவர்களில் மிஸ்டர் வேல்முருக தாஸரின் பெயர் அச்சுத் தவறுதலினால் விடப்பட்டுப் போனதற்காக வருந்துகிறோம்' "....

இவ்வாறு முடித்திருந்தால் உங்களுக்கு ஒருவேளை திருப்தியாயிருந்திருக்கும். ஆனால் ராவ் பகதூர் வேல்முருக தாஸர் இன்றைய தினம் பழனியாண்டவன் புகழைப் பாடிக் கொண்டு கொட்டாப் புளியைப்போல் உட்கார்ந்திருக்கிறாரே? நான் என் செய்வேன்?

**('ஆனந்த விகடன்'1.1.1933)**

ஜனவரி-1

“திமிர்பிடித்தவன்!”

ஃபிரிட்ஜைத் திறந்து பார்த்த மோனாவின் மனம் தன்னிச்சையாக முணுமுணுத்தது. அங்கே, வற்றல் குழம்பு வைத்திருந்த பாத்திரத்தைச் சுற்றிப் புதிதாக ஒரு லேபில் ஒட்டப்பட்டு, அதில் “புளிக்காய்ச்சல்” என்றிருந்தது. பக்கத்திலேயே, சப்பாத்திகள் வைக்கப்பட்டிருந்த ப்ளாஸ்டிக் டப்பாவின் மேல், “ஆஸ்திரேலிய வரைபடம்?” என்றிருந்தது. விஷாலின் வேலையாகத்தானிருக்கும்.

இன்று அவளுக்குக் காலை ஷிஃப்ட் என்பதால் விடியலிலேயே எழுந்து ஓடி விட்டாள். அவனுக்குப் பத்து மணி ஆபீஸ். சாதமும், ஒரு கூட்டும், நாலு சப்பாத்தியும் செய்வதற்குத்தான் நேரமிருந்தது; ‘குழம்பும் தயிரும் ஃப்ரிஜ்ஜில்’ எனக் குறிப்பெழுதி விட்டுக் கிளம்பி விட்டாள். மதியம், வெயிலில் வீடு திரும்பி, குளிர்ந்த நீருக்காக ஃபிரிஜ்ஜைத் திறந்தால்... இது... அதிக எரிச்சலைக் கிளப்பியது.

“டூமச்” என மனம் வெதும்பியது; இளம்பும் அவசரத்திலும் இத்தனை செய்கிறாளே என்று ஒரு கரிசனமில்லை; இப்படி ஓய்வொழிச்சலில்லாமல் உழைக்கிறாளே என்று ஒரு பாராட்டில்லை; எப்போதும், எதிலும் எங்கே குற்றம் கண்டுபிடிக்கலாம் என்ற மனப்பான்மைதான், இது சரியில்லை அது சரியில்லை என்ற நொட்டாங்குதான்...

சாப்பாட்டு விஷயத்தில் மட்டும் என்றில்லை; சோஃபா மீது தப்பித் தவறி ஒரு ‘கர்சீஃப்’ கிடந்து விடக்கூடாது; நாற்காலி அதன் வழக்கமான இடத்திலிருந்து அரைக்கால் இஞ்ச் கூட நகர்ந்திருக்கலாகாது; நியூஸ் பேப்பரைப் படித்து விட்டு, மடித்து வைக்க மறந்திருந்தால், பிரளயமே நிகழும்; இத்தனை ஏன்? அவனுடைய சாக்ஸை உலர்த்தும் இடம், இடத்திலிருந்து வலமாக மாறியிருந்தால் கூட, ஊழிக் கூத்தாடுவான்! அப்படி ஒரு ‘‘பர்ஃபெக்ஷ



ஜெயஸ்ரீராஜ்

# சொல்லத்தான் தெரியவேயும்...

னிஸ்ட்"...

ஒழுங்கை விரும்புவது பொதுவாக நல்ல குணம்தான் என்றாலும், கட்டிலின் மீது டவல் கிடப்பதற்கும், பாத்ரூம் சுவரில் ஸ்டிக்கர் பொட்டு இருப்பதற்கும் வீட்டை இரண்டுபடுத்தி, மனநிம்மதியை த்வம்சிப்பதென்பது இம்சையின் உச்சகட்டமாக இருந்தது. மனித உரிமைக் கழகத்திடம் முறையிடலாமா என்று கூட அவள் நினைத்ததுண்டு!

இந்த மனநிலையில் மறுபடியும் மாலைச் சிற்றுண்டியோ, இரவு உணவோ தயாரிக்க முடியாது. நல்ல மனசுடன் சமைக்கும் போதே நானூறு குற்றங்கள்! குமைச்சலுடன் செய்தால், தீய்ந்த கத்தரிக்காயும், காய்ந்த குழம்பாயும் முடியும்; அப்புறம் யார் மறுபடியும் 'பாட்டு' கேட்பது?

பேசாமல் கதவை இழுத்துப் பூட்டி விட்டுக் கிளம்பினாள்; இரண்டு தெரு தாண்டித்தான் விஷால் வேலை செய்யும் வங்கி இருந்தது; அவன்தான் சீனியர் மானேஜர்; அவனிடம் சாவியைக் கொடுத்துவிட்டு, "அம்மா வீட்டுக்குப் போறேன்" என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டுக் கிளம்ப நினைத்தாள். அவன் ஏன் எதற்கென்றெல்லாம் கேட்க மாட்டான்.

சாதாரணமாக வேலையிடத்துக்கு அவள் வருவது அவ்வளவாக அவனுக்குப் பிடிக்காது; தவிர்க்க முடியாத காரணங்களுக்காக வர நேர்ந்தால், சட்டுப்புட்டென்று ஓரிரு வார்த்தைகளில் வேலையை முடித்து அனுப்பி விடுவான்; ஒரு காப்பி, கூல்ட்ரிங்க் கூட வரவழைத்தது கிடையாது.

அக்கறை இருந்தால் அங்கே வரட்டும்; அப்பா, அம்மா, அண்ணா, மன்னி எல்லோரையும் வைத்துக் கொண்டு நியாயம் கேட்க வேண்டும் – எங்கள் பெண்ணுக்கு குணமில்லையா? அறிவில்லையா? அழகில்லையா? படிப்பில்லையா? வேலையில்லையா? சீர் செனத்திதான் நாங்கள் செய்யவில்லையா? எதற்கு இப்படி நச்சு நச்சென்று தேள் கொட்டுவது போல் அவனைக் கொட்டுகிறாய்? என்று.

அவள் வீட்டிலும்தான் ஆண்கள் இருக்கிறார்கள். ஆனால் இப்படி ஒரு "பிடுங்கல் கேஸை" அவள் எங்கும் பார்த்ததில்லை.

"மஹா திமிர்பிடித்தவன்; அகம்பாவி; அகங்காரி" – இப்படி ஒரு சமயம் மனது எடை போட்டது. "ஏதாவது ஸைக்கோ கேஸாயிருக்குமோ? மனநல மருத்துவரிடம்

அழைத்துப் போக வேண்டுமோ?" இப்படி சிந்தனை ஓடியது மறு நிமிடம்.

ஒருவழியாக வங்கியை அடைந்து, ரிசப்ஷனுக்குள் நுழைந்தாள்; உள்ளே ஏதோ ரகளை என்பது பார்த்த மாத்திரத்தில் புரிந்து விட்டது. யாரோ ஒருவர் கையைக் காலை ஆட்டி உரத்த குரலில் சப்தித்துக் கொண்டிருக்க, விஷால் ஏதோ சமாதானப் படுத்துவது போல் அவரிடம் மன்றாடிக் கொண்டிருந்தான்.

"என்னாச்சு ராமசாமி? உள்ள என்ன தகராறு?" – எதிர்ப்பட்ட ப்யூனிடம் படபடப்புடன் விசாரித்தாள் மோனா.

"அதா... தெனம் நடக்கற கூத்துதான்; ஒரு பெரிய எக்ஸ்போர்ட் பார்ட்டி, அஞ்சு லட்சத்துக்கு செக் போட்டிருக்காரு; கம்ப்யூட்டர்ல அடிக்கையில, அந்த க்ளார்க்குப் பொண்ணு கடைசி ரெண்டு சைபரை பைசா காலத்துல போட்டு, அஞ்சு லட்சத்தை அஞ்சாயிரமாக்கிடிச்சி; இவுரோ ரெண்டு லட்சத்துக்கு வேறாளுக்கு 'செக்' குடுத்திருக்காரு; அவுரு வந்து பணம் கேட்டா, இந்தப் பொண்ணு 'பாலன்ஸ் இல்லை'ன்னு சொல்லிக்கிது; 'செக்'கை குடுத்தவரு, 'என் 'செக்'கை எவன்யா ரிடர்ன் பண்ணதுன்னு?' இங்கே வந்து தாம் தூம்னு குதிக்கறாரு; மானேஜரை கிசி கொதறிட்டாரு. பாவம் ஐயா... அந்தாளு கால்ல உயாத கொறையா கெஞ்சிட்டாரு.. அவுரு வுடறாரா? எம்.டிக்கு கம்ப்ளெயின்ட் எழுதுவேன், கேஸ் போடுவேன், அங்க போவேன் இங்க போவேன்னு குதிகுதின்னு குதிக்கறாரு... பொழுது விடிஞ்சா பொயுது போனா இதே பேஜாரான பொய்ப்புதான்..."

"ஏன்? அந்தக் கிளார்க் பொண்ணைக் கூப்ட்டு கண்டிக்கக் கூடாதா? அவளை மன்னிப்புக் கேட்கச் சொல்லறது..."

"ஹாங்... அது கண்ணைக் கசக்கிச் சுன்னா யூனியன்காரங்க ஓடி வந்துருவானுங்க... லேடீஸ் ஸ்டாஃபை ஹாரஸ்ஸோ காரஸ்ஸோ... அது என்னவோ ஒரு எயவைப் பண்றாருன்னு ஸ்டிரைக் பண்ணிடுவாங்க... அது இன்னும் தகறாராப் பூடும்; ஒரு நாகூட்றவ வர்லன்னாலும் ஐயாதான் தொடப்பம் எடுக்கணும்னுவாங்க. அப்பேர்பட்டகில்லாடிங்க. இன்னாப் பொய்ப்புமா இது? அதுங்காட்டியும் நான் ப்ரமோசனே வாணானு கிரேன்..." கொஞ்சம் சுயபுராணத்தையும் சாமர்த்தியமாக இடைச்செருகிக் கொண்டு அவன் முடித்தான்.

மோனாவுக்கு என்னவோ போலாகி விட்டது. ஒரு சின்னப் புள்ளிதான்; அது வலமிருந்து இடம்பெயர்ந்ததற்கா இத்தனை அனர்த்தம்? அதது அதே வடிவத்தில், அதனதன் இடத்தில் இருக்க வேண்டும் என்று விஷால் அரற்றுவதற்கு மூலம் இதுபோன்ற சம்பவங்கள்தானோ?

"பேசாம வாலண்டரி வாங்கிக்கினு ஒரு பொட்டிக் கடை வச்சுப் பொயச்சுக்கயேன் சாருன்னுவேன்... பொட்டிக் கடை இன்னாப்பா... ரொட்டிக் கடை வைச்சே நான் பொய்ச்சுப்பேன்னுவாரு... ஏம்மா? ஐயா நல்லா ரொட்டி சுடுவாராமே... மெய்யாலுமா?" ராமசாமி கொக்கி போட்டான்.

கிண்டலா வம்பா என்று அனுமானிக்க முடியாமல், "தெரியாதேப்பா" என்று சொல்லிவைத்தாள் மோனா. மனசுள் அவளது காலஞ்சென்ற மாமனார் திருநெல்வேலியில் பிரபலமான ஓட்டல் நடத்தியது ஃப்ளாஷ் அடித்து விலகியது.

"அதானே... நீங்க இருக்கையில அவுருக்கேன் அந்தத் தலை எயுத்து?" – ஐஸ் வைத்துவிட்டு, அவள் உருகுகிறாளா எனக் கடைக்கண்ணால் நோட்டம் விட்டவாறே, "நான் 'சிங்கிளா' இருந்தா எதுனாச்சும் பண்ணத் தயார்தான்; ஆனா 'ஃபாமிலி' இருக்குறாங்களே... அவுங்களுக்காகத் தான் பாக்க வேண்டி கிதுன்னாரு" என்றான்.

'ஃபாமிலி' என்று அவன் குறிப்பிட்டது அவளைத்தான் என்று நன்றாக விளங்கியது. அவளுக்குத் தெரிந்தவரை, கல்லிடைக் குறிச்சியில் வசிக்கும் தூரத்து மாமா குடும்பத்தைத் தவிர வேறு உறவு அவனுக்குக் கிடையாது. பிக்கல் பிடுங்கலில்லை என்றுதானே இந்த வரனை முடிப்பதில் அவள் தந்தை ஆர்வம் காட்டினார்?

அவளுக்காகவா அவன் இத்தனை அவமானங்களையும் சுமக்கிறான்? சாவியைக் கொடுக்காமல் நேரே வீட்டுக்குத் திரும்பி நடந்தாள் மோனா!

சரி... இதுவரை கதையைப் படித்து விட்டு, இனி எப்படிக் கதை முடியப் போகிறது என நினைக்கிறீர்கள்?

மோனா மனம் மாறி, கணவனுடைய சிடுசிடுப்பு கடுகடுப்புக்கெல்லாம் பொறுமையாய் ஈடுகொடுத்து கொண்டு, அவன் தனக்காகச் செய்திருக்கும் தியாகத்துக் கென்று இறும்பூதெய்தி, விஷால் மீது அதிகக் காதலும் அன்புமாய் வளையவந்தாள் என்பதாகவா?

அதுதானில்லை... மோனா புதிய மிலெனியப்பெண்!

## எச்சரிக்கையை அலட்சியப் படுத்தலாமா?

**வா**கன ஓட்டிகளை எச்சரிப்பதற்காக வைக்கப்படும் அறிவிப்புப் பலகைகளைக் கூடவா சகட்டுமேனிக்குப் பயன்படுத்தி பொன்மொழிகளை எழுத வேண்டும்? படத்தில் பாருங்கள்; 'விபத்துப் பகுதி; மெதுவாகச் செல்லவும்' என்கிற எச்சரிக்கை எழுதப்பட வேண்டிய முன் பக்கத்தில் கலைஞரின் பொன்மொழியை எழுதிவிட்டு, எச்சரிக்கையைப் போய் படிக்க முடியாதபடி பலகையின் பின்பக்கத்தில் எழுதியிருக்கிறார்கள். எச்சரிக்கையை அலட்சியப்படுத்துவது நல்லதா என்ன!

— பிரின்ஸ்



• எச்சரிக்கை இருக்க வேண்டிய இடத்தில் பொன்மொழி!




• பொன்மொழிக்குப் பின்னால் எச்சரிக்கை!

---

**மா**லை அவன் வீடு திரும்பியதும், "இன்னிக்கு ஆபீசுல என்னாச்சு? ஏதானும் ஸ்பெஷலா உண்டா?" என்றாள்.

''ஒண்ணுமில்லையே'' என வழக்கம் போல் அவன் பதிலளித்ததும், பிலுபிலு வென்று பிடித்துக்கொண்டாள். ''உங்க ப்ராப்ளம்ஸ் என்னன்னு சொன்னாத்தானே புரியும்? ஒண்ணுமில்லைன்னு மூடி வச்சா...?'' என பதில் ஆரம்பித்து, அன்று தான் கண்டதையும் கேட்டதையும் ஒன்றுவிடாமல் விவரித்தாள்.

மனசுக்குப் பிடிக்காமல், நிர்பந்தத்துக்காக வேலை செய்வதில் இருக்கும் இன்னல்களை, அதன் எதிரொலியாய்ப் பிறக்கும் மனக்கிலேசங்களை, நோய்களை, அதனால் மற்றவர்க்கு ஏற்படும் பாதிப்புகளை, கைதேர்ந்த மனநிலை மருத்துவர் போல அலசினாள்.

வாலண்டரி ரிடையர்மெண்ட் ஸ்கீமில் பணத்தை வாங்கிக் கொண்டு, ஒரு "ஃபாஸ்ட் ஃபுட் ஜாயிண்டை" ஆரம்பிக்க வைத்தாள்.

''ஆரம்ப கட்டத்தைப் பற்றிக் கவலைப் படாதீங்க; என் சம்பளம் இருக்கவே இருக்கு; நாம பட்டினி கிடந்து விட மாட்டோம்'' என்று உறுதியளித்தாள்.

''எங்க ஆபீஸ் இருக்கற ஏரியாவுல நிறைய அலுவலகங்கள்; ஒரே ஒரு ஃபைவ் ஸ்டார் ஓட்டல் தவிர, நடுத்தரவர்க்கத்துக்கு ஒண்ணும் கிடையாது...'' என இட 'ஸர்வே' யையும் முடித்தாள்.

தன் அலுவலகத்திலிருந்தும், நண்பர்கள் வட்டாரத்திலும் அப்பா, அண்ணா ஆபீசுகளிலிருந்தும், நிரந்தரமான கஸ்டமர்களைப் பிடித்துத் தந்தாள்.

இன்று...

மோனா ரெஸ்டாரெண்ட்; மாநில அளவில் சிறந்த சிற்றுண்டி சாலைக்கான விருது பெற்றிருப்பது பெரிசில்லை; 'இன்னர் லுக்' இதழ் நடத்திய கணிப்பில், 'பெஸ்ட் ஃபாஸ்ட் ஃபுட் ஜாயிண்ட் ஆஃப் த மிலெனியம்'' அவார்டு வாங்கியிருப்பதும் பெரிசில்லை...

ஆனால்...

கட்டிலில் கிடக்கும் டவலை விஷால் பேசாமல் எடுத்து உலர்த்துகிறான்; சோபாவில் இருக்கும் கர்சீஃபை வாயை மூடிக் கொண்டு அப்புறப்படுத்துகிறான். பிரித்துப் போட்டிருக்கும் பேப்பரையும் முணுமுணுக்காமல் தானாக எடுத்து மடித்து வைக்கிறானே? அது பெரிசில்லையா?

# பணம்



இது என்ன நடை? வேகம்? எந்தக் கப்பலை நகர்த்தப் போகிறார்கள்? அல்லது எந்தக் கோட்டையைக் கைப்பற்ற இத்தனை அவசரம்?

இரயிலை விட்டு இறங்கியதும் சுற்றிச் சுற்றிப் பார்த்தார் இல்லைநாயகம்.

பவுடர் பூசிய பெண்களும், கிராப்புத் தலை விடலைகளும், தன்னைப் போன்ற கிழடுகளும் விடுவிடுவென்று பஸ்ஸுக்காக ஓடுவதும், 'விருட்'டென்று ஏறுவதும், குதித்து இறங்குவதும், இறங்கிய வேகத்தில் மறைவதும்... ஆச்சரியமாக இருந்தது.

அட... ஆண் பெண் வித்தியாசம் கூடவா தெரியாது? ஒருவரையொருவர் இடித்து, தள்ளி, ஒதுக்கி விர்விர்ரென்று வில்லில் விலகும் அம்புகளாய்... என்னய்யா ஊர் இது?

அவர் பட்டிணம் போவதைக் கேள்விப் பட்டதும் நாட்டாண்மை மகன் சொன்னது ஞாபகத்திற்கு வந்தது. "ச்சைய்... அதென்ன ஊருய்யா... பெரிசு பெரிசா கட்டடங்களையும், காரு பஸ்ஸு, டிரவுசர் போட்ட பொம்மனாட்டிகளையும் வேணா பாக்கலாம். நம்மளை ஒரு 'மனுஷன்னு மதிக்க ஆளு கெடையாது. அட... வழி கேட்டா நின்னு சொல்லக் கூட நாதியில்லே... பார்த்துப் போய்ட்டு வா..."

"ராசாவாட்டம் எம்புள்ள இருக்கப்ப

நான் ஏன்யா, அடுத்தவன்கிட்ட விசாரிக்கப் போறேன்..." என்று அப்போது பதில் சொன்னார்.

நேரில் பார்த்த பெறகுதானே தெரிகிறது. அவன் சொன்னதுல ஒண்ணும் பிசகு இல்லை.

விசாலத்தையும் அழைத்து வந்திருக்கலாம் என்று தோன்றியது. அவராவது நாலு ஊரையும் ஜனங்களையும் பார்த்தவர். பிறந்தது முதல் பட்டிக்காட்டையே கட்டி அழும் ஜென்மம் அவள். இதே இடத்தில் நிறுத்தி இந்த அவசர மனிதர்களையும், இத்தனை வாகனங்களையும் காட்டினால் என்ன பண்ணுவாள்? மெரண்டு போயிருவா... பாவம்.

கற்பனை சுவாரஸ்யமாக இருக்க, உள்ளுக்குள் சிரிப்பு அரும்பியது.

இந்நேரம் தன்னைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருப்பாள் என நினைத்தார். "அவுக பட்டணம் போயிருக்காக. பெரியவன் வூட்டுக்கு!"

''ஏன் வெசலாம் நீ போவலையா?''

"நடவு காலம். மாடு கண்ணை விட்டுட்டு ரெண்டு பேரும் சோடி போட்டுக் கௌம்ப முடியுமா? அதான்... நா பெறகு போகலாம்ன்னு...''

நியாயமாக அவன் வர வேண்டிய காரியம்தான் இது. மருமகள் 'உண்டாகி' இருப்பதை மாமனாரா வந்து விசாரிப்பது?

நடராஜன் விஷயத்தில் எல்லாமே தலைகீழாகத்தான் நடக்கிறது.

படித்து நாலைந்து வருஷம் வேலை இல்லாமல் சுற்றியதும் –

வேலை கிடைத்த பிறகு நிரந்தரமாக பட்டினத்திலேயே தங்கி விட்டதும் –

சொந்தபந்தத்தில் அவர் பெண் தேடிக் கொண்டிருக்க, தன்னுடன் வேலை பார்க்கிறவளைத்தான் பிடிக்கிறது என்று ஒற்றைக் காலில் நின்றதும் –

**மும்தாஜ் யாசீன்**

கௌரவத்தை விட்டு அவரே கல்யாண ஏற்பாடுகளைச் செய்ததும் –

இவ்வளவிற்குப் பிறகும் கூட, "இத்தனை செய்தானே பாவி அப்பன்" என்று நினைக்கிறவனாக இல்லையே என்கிற வருத்தம் தான் அவருக்கு.

முன்பெல்லாம் கோவில் திருவிழா, பண்டிகைக்கு தலையைக் காட்டுகிறவன் இப்போது அவைகளுக்குக் கூட வருவதில்லை. ரெண்டு வரி கடுதாசி கூட அதிகம் கிடையாது. நாலு தடவை எழுதிப் போட்டால் ஒன்றிற்கு பதில் வரும். "அட... ஊருக்கு ஒரு நடை வந்துட்டுப் போ...''

நேரமில்லை. லீவு இல்லை. புலம்பல்.

"பய இனி இந்த தினுசுதான்..." என வெறுத்துப் போனாலும், ''என்ன பண்றானோ.. ஏது பண்றானோ..." என்று உள்ளுக்குள் ஒரு உதைப்பு இருந்து கொண்டேயிருந்தது. இந்த நிலையில் போன மாசம் நாட்டாண்மை சம்சாரம் தனது பங்காளி மகன் கல்யாணத்திற்கு வந்தவள் – பார்த்து விட்டு வந்து சொன்னாள். "அதென்னடி ஓம் மருமக மென்னு முழுங்கிறவ... ஒடம்பு மினுமினுப்பா தெரியுதேன்னு சம்சயப் பட்டுக் கேக்கறேன்... பதிலே சொல்ல மாட்டேங்கிறா.... இதெல்லாமா மறைப்பாளுவ. நாலு பெத்தவளுக்குத் தெரியாதாங்கறேன்... நீ போய்க் கேளு..."

விசாலம் சொன்ன போது சிலீரென்று இருந்தது. மனசுக்குள் பொங்கிப் பொங்கி

வழிந்தது. நிறை மகசூலில் நெல் மூட்டைகளை அட்டாலி போட்டு அடுக்கி விட்டு நாலடி தள்ளி நின்று பார்க்கும்போது தோன்றுமே ஒருவித பூரிப்பும் சந்தோஷமும். அப்படி இருந்தது.

மகன் மீதிருந்த கோபம் போன இடம் தெரியவில்லை.

''ஏன்... விசாலம் நீ போயி என்ன ஏதுன்னு பார்த்துட்டு வர்றியா?''

''தனியா எப்படிப் போவேணாம்... வேணா நீங்க போயி ரெண்டு பேரையும் கையோட கூட்டிக்கிட்டு வந்துடுங்க...''

தில்லைநாயகம் இரயில் ஏறும்படி ஆயிற்று.

''போகலாம்ப்பா...'' நடராஜன்



''எங்க தாத்தா சாகும்போது ஏதாவது சொன்னாரா டாக்டர்?''

''ம்...ம்... சிம்ரன், ரம்பா வாழும் காலத்தில் நானும் வாழ்ந்தேனேங்கிற திருப்தியோட போறேன்னு சொன்னார்ப்பா.''

— ஞா. ஞானமுத்து

அவரிடமிருந்த கைப்பையை வாங்கிக் கொண்டான். விடுவிடுவென்று நடக்க ஆரம்பித்தான். வேக நடை. வாய்க்கால், வரப்புகளில் நடந்து பழகிய அவரால் கூட தொடர முடியாத அத்தனை வேகம்....

''ஊரைக் கேலி பண்றது கெடக்கட்டும். இந்தப் பயலும்ல இப்படி நடந்து பழகி இருக்கான்...'' தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டார். ஊருக்குப் போனதும் விசாலத்திடம் சொல்லிச் சிரிக்க இன்னொரு சங்கதி கிட்டியதைப் போலிருந்தது.

நடராஜன் ஆட்டோவை கைதட்டிக் கூப்பிட்டான். வந்ததும் பையை உள்ளே வைத்து விட்டு, ''ஏறுங்கப்பா...''

வழியில் எல்லோரையும் எல்லாவற்றையும் விசாரித்தான். கேட்பதுதான் முக்கியம் என்பதைப் போல, ஒன்றிற்கு பதில் சொல்லி முடிப்பதற்குள் அடுத்த கேள்வி. எதையும் விஸ்தாரமான அடித்தளம் அமைத்துக் கொண்டு, பீடிகை போட்டு பேசிப் பழகிய அவருக்குத் திக்குமுக்காடியது.

ஆட்டோ மெயின் ரோட்டை விட்டு விலகி ஏதேதோ சந்து பொந்தெல்லாம் தாண்டிப் போயிற்று. ''ஸ்டாப்... ஸ்டாப்...'' அவன் கத்தவும் குலுங்கி நின்றது. ''இறங்கலாம்ப்பா...''

நடுத்தெருவில் இறங்கி நாலடி அகலம் இருந்த சந்திற்குள் நுழைந்தான். பத்தடிக்கு ஒரு வாசல் வந்து கொண்டிருந்தது. முதுகு காட்டி தண்ணீர் பம்ப் அடித்துக் கொண்டிருந்த மாலதி அவர்களது நடைச் சத்தம் கேட்டுத் திரும்பி, ''வாங்க மாமா...'' என்றாள். முந்தானையை இழுத்து விட்டுக் கொண்டாள்.

வீட்டுக் கதவைத் திறந்ததும் வெக்கை அடித்தது. தீப்பெட்டி அளவில் இரண்டு அறைகள். நடக்க மட்டும் இடம் விட்டு நிறைந்திருந்த சாமான்கள். கட்டில், பீரோ, டி.வி., வாஷிங்மெஷின்...

டேபிளில் டிபன் தயாராக இருந்தது.

மாலதியுடன் அவர் பேசிக் கொண்டிருக்க, நடராஜன் பம்ப் அடிக்கப் போய் விட்டான். மாலதி அடிக்கடி கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டாள்.

''மாமா... குளிக்கிறீங்களா?''

அவருக்கு சித்த நாழி சாய்ந்து எழ வேண்டும் போலிருந்தது.

''குளிச்சிருங்க மாமா... அப்புறம் தண்ணி நின்னுரும்...'' என்றாள் மாலதி.

பாத்ரூம் தரை வழுக்கியது. கையைத் தூக்கினால் கூரை இடிக்கும் போலிருந்தது. பக்கச் சுவர்களின் நெருக்கமும், திப்பி திப்பியாய் சோப்புக் கறைகளும்... ஆனாலும் என்ன? தண்ணீர் சுகமாக இருந்தது. தூக்கம் கெட்டதில் கதகதத்த உடம்பு நீர் பட்டதும் சிலீரிட்டது.

அவர் உள்ளே வந்த போது இருவரும் உடுப்பு மாற்றி நின்றிருந்தார்கள்.

''என்னய்யா.... வேலைக்கா?''

''ஆமாம்ப்பா... முக்கியமான வேலை. ஆடிட் நடக்குது.''

''மாலதியுமா?''

''ம்...''

''மாமா... டிபன் இந்தத் தட்டுல இருக்கு. ஹாட்பேக்ல லெமன் ரைஸ் வச்சிருக்கேன்.

சாப்பிட்டு... ரெஸ்ட் எடுங்க. சாயங்காலம் சீக்கிரம் வர்றோம்." மாலதி மளமளவென்று ஒப்புவித்தாள். அவர், "இதென்னடா அக்கிரமம்?" என்று யோசிப்பதற்குள் –

"வர்றேம்ப்பா..."

"வர்றேன்... மாமா..."

போய் விட்டார்கள். வாசலில் ஸ்கூட்டர் உறுமிய சப்தம்.

அவருக்குச் சப்பென்று இருந்தது. ததும்பிக் கொண்டிருந்த ஆசை புஸ்ஸென்று வடிந்து விட்ட வெறுமை. இத்தனை வருஷம் கழித்து வந்திருக்கும் தகப்பனை, ஏதோ வெற்றுச் சோற்று ஆள் போல தனியே விட்டுக் கிளம்பிய இருவர் மீதும் ஆத்திரமாக வந்தது. இவ்வளவுதானா இவர்கள்?

இதைவிடவும் அவமதிப்பு வேறு உண்டுமா?

மூடி வைத்த டிபன் தட்டையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தார் தில்லைநாயகம்.

படுத்தாலும் தூக்கம் வரவில்லை. உலகம் ரொம்பவும்தான் மாறி விட்டதைப் போலிருந்தது.

பக்கத்து வீட்டிற்கு விருந்தாளிகள் வந்தால் கூட, வலியச் சென்று பேசுகிறவர் அவர். "நம்ம ஊர்ப் பக்கம் மழையெல்லாம் எப்படிங்க?" என ஆரம்பிக்கிற பேச்சு எங்கெங்கோ போய் அன்னியோன்யத்தை வளர்க்கும். உறவை உண்டாக்கும் கருவியாகவே பேச்சு அப்போது விளங்கும்.

வந்ததிலிருந்து அவரும் கவனித்துக் கொண்டுதான் இருந்தார். உள்ளே புழுக்கம் தாளாமல், துண்டை தோளில் போட்டபடி அத்தனை நீள வாசலில் அவர் உலாவிய போதும் யாரும் அவரைக் கண்டுகொள்ளவில்லை. பேச்சுத்தான் வேண்டாம். ஒரு புன்னகை கூடவா முடியாது?

எதிர் வீட்டுத் திண்ணையில் நிழலாக இருக்க, போய் உட்கார்ந்தார். எதற்கோ கதவைத் திறந்த வீட்டுக்காரி, "யாரு?" எனக் கேட்டாள். முகத்தில் சந்தேகக் குறி.

"நா... நான் நடராஜன் அப்பா... ஊர்ல இருந்து வந்திருக்கேன்" என்றார்.

"எந்த நடராஜ்?"

"என் மகன்... இதா.. இந்த வீடு..."

"அவரு பேரு... நடராஜா?"

உள்ளே போய் விட்டாள். அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. நிஜமாகவே நடராஜைத் தெரியாதா இவளுக்கு? பொய்யா...? அனேக வீடுகள் பூட்டியிருந்தன. பவுடர் பூசி கிளம்புவதைப் பார்த்தால் பெண்களும் வேலைக்குப் போவார்கள் போல. குழந்தைகளும் ஸ்கூல் போக தெரு நடமாட்டம் இல்லாமல் இருந்தது.

உள்ளே வந்து தானும் கதவைச் சாத்திக் கொண்டார்.

எட்டு மணிக்கு மேல் ஆகிவிட்டது – மாலதியும், நடராஜனும் வீடு திரும்ப, "என்னப்பா... ரெஸ்ட் எடுத்தீங்களா?"

"ம்... அதுக்கென்ன?" என்றார் அவர்.

மாலதி உடுப்பு மாற்றிக் கொள்ள உள்ளே போனாள். நடராஜன் முகம் அலம்பிக் கொண்டு டேபிள் எதிரில் உட்கார்ந்தான். "மாலு... நான் இந்த ஸ்டேட்மெண்டை முடிக்கணும். டிபன் ரெடி பண்ணிரு..." தலையைக் குனிந்து கொண்டு ஏதோ கணக்குப் போட ஆரம்பித்தான்.



"என்னது! தலை தீபாவளிக்கு எங்கப்பா போட்டது ராசியேயில்லாத மோதிரமா?"

"ஆமா! அதை அடகு வச்சு ரம்மியாடியதில் ஆயிரம் ரூபாயும் அவுட்."

– உ. ராஜாஜி

அருகே அமர்ந்திருந்தும் பேச ஏதுமற்றதைப் போலிருந்தது. பிள்ளைகளுக்குத் தாயை விட தகப்பன் தூரம்தான் போலும்.

உள்ளே இன்னும் புழுக்கம் தணியவில்லை.

"ஏய்யா.... கொஞ்சம் காத்தோட்டம் உள்ள வீடா பார்க்கக் கூடாது?" எனக் கேட்டார் தில்லைநாயகம்.

"எல்லாம் இப்படித்தாம்ப்பா... இதுக்கே ஆயிரத்தைந்நூறு வாடகை..." அவர் பக்கம் திரும்பாமலே பதில் சொன்னான் நடராஜன்.

அவருக்கு எதிர் வீட்டுப் பெண் ஞாபகம்

வந்தது. "ஏன்யா... அக்கம்பக்கத்துல பழகுறது இல்லையா... உன்னை யாருன்னு கேக்கறா எதிர் வீட்டுக்காரி?"

"இந்த வாசல்ல பத்துக் குடித்தனம் இருக்கு. மாசம் ஒருத்தன் காலி பண்றான். புதுசா ஒருத்தன் குடி வர்றான். யாரு யாரைத் தெரிஞ்சுக்கிறது? அவசியமும் இல்லை. நேரமும் இல்லை..."

நடராஜன் வேலையில் மூழ்கினான். இடையே ஞாபகம் வந்தவன் போல உள்ளே போனான். "டிபன் ரெடியா?" என்று கேட்பது கேட்டது.

**வரப்போகும் ஆல்பத்துக்குப் போட்டி!**

யுவன் சங்கர் ராஜா இசையமைப்பில் ஒரு பாப் ஆல்பம் வரப்போகிறது. இன்னும் பெயர் வைக்கப்படாத இந்த ஆல்பத்தில் நடனமாடப் போகிறவர் பிரசாந்த். விஷயம் மெல்ல வெளியே கசிந்து. இந்த ஆல்பத்தின் வெளிநாட்டு விற்பனை உரிமைக்கு இப்போதே ஏகப்பட்ட போட்டியாம்.

— அமுதன்

"தலைவலிக்குது. டயர்டா இருக்கு. பிரட் டோஸ்ட் பண்ணிக்கலாம்" என்றாள் மாலதி.

ரொட்டி வாங்கி வந்தான். ஜாடியிலிருந்து எதையோ தடவி மாலதி தட்டில் வைத்தான். "சாப்பிடுங்க மாமா..."

அவர் அறிந்து ஆஸ்பத்திரியில் நோயாளிகள் தின்னுகிற வஸ்து அது. பாதியை ஒதுக்கிவிட்டு, "போதும்மா. எனக்குப் பசிக்கலை..." என எழுந்தார்.

நடராஜனும் மாலதியும் சங்கடப்பட்ட மாதிரி பார்த்தார்கள். "அப்பா.... நான் வேணா ஹோட்டல்ல போயி..."

"எனக்காக ஏம்ப்பா... சிரமம்.... மேல் துண்டால் ஈரக்கையைத் துடைத்துக் கொண்டார். வெளியே வந்தார்.

"அலாரம் வையுங்க... சீக்கிரமா எழுந்து மாவு ஆட்டி வச்சிட்டுப் போறேன்...'' அவளது பேச்சும், அவனது பெருமூச்சும் கேட்டது.

இத்தனை வருடம் கழித்து வரும் தகப்பனுக்குக் காய்ந்த ரொட்டி போடும் மகனை மறக்க முடியாது போலிருந்தது. மனது வலிக்க ஆரம்பித்தது.

அடுத்த இரண்டு தினங்களிலும் பெரிதாக ஒன்றும் மாறுதல் இல்லை. நிர்ணயிக்கப்பட்ட அட்டவணையின்படி இயங்குகிறவர்கள் போலவே இருந்தார்கள். அலாரம் வைத்து எழுவதும், அவள் சமையல்கட்டிற்கும், அவன் தண்ணீர் பம்பிற்கும் ஓடுவதும், டாய்லட் பாத்ரூமிற்கு காத்திருந்து இடம் பிடிப்பதும், வயிற்றுக்குள் எதையோ கொட்டிக் கொண்டு, அவருக்கும் அதையே போட்டு....

சாயங்காலம் இதைவிட மோசம். வெந்து தணிந்தவர்கள் போல வீடு திரும்பினார்கள். டி.வி. பார்த்தார்கள். அவசியம் கருதி வெளிப்படும் இரண்டொரு வார்த்தைகள். தூக்கம்.

தன் இருப்பு அவர்களை எந்தவிதத்திலும் பாதித்த மாதிரி தெரியவில்லை. அவர்கள் உபயோகிக்கும் பொருள்களைப் போல தானும் ஒரு வஸ்துவா? அதனால் திடீரென்று ஊருக்குப் போக வேண்டும் என்று தோன்றி விட்டது.

நடராஜன் குழப்பத்துடன் அவரைப் பார்த்தான். "என்னப்பா அவசரம்?" என்று கேட்டான்.

என்னவென்று சொல்வது?

"போகணும்ப்பா.... விட்டிரு..."

"அப்பா இப்படித்தான்.... சொன்னா.... சொன்னபடி..."

மாலதி ஒன்றும் தெரியாதவளைப் போல ஆச்சரியப் பார்வை பார்த்தாள். ஒப்பனை இல்லாத ஆணோ பெண்ணோ கிடையாது போலும்.

''ராத்திரி வண்டிக்குப் போறேன். அதுக்கு முந்தி சாமியப்பனையும் பார்த்துட்டு வர்றேன். விலாசம் குடு...''

"தனியாவா... ரெண்டு நாள் பொறுங்க. நான் வேணா கூட்டிட்டுப் போறேன்..."

"வாயில இருக்கு வழி... நீ விலாசத்தக் குடு... போதும்"

சாமியப்பன் அவருடைய ஊர்க்காரர்.

சொந்தமும் கூட. மனைவி போனதும் மகனோடு வந்து தங்கி விட்டார். தோப்புக் குத்தகை பணத்திற்கு ஊர் வரும்போது அவரைப் பார்க்காமல் போக மாட்டார்.

என்னதான் விலாசம் இருந்தாலும் வீட்டைக் கண்டுபிடிப்பதற்குள் கொஞ்சம் அலையும்படிதான் ஆயிற்று. தூரத்திலேயே அவரைக் கண்டுவிட்டு சாமியப்பன் ஓடி வந்தார். "அடடே... அய்யா... வாய்யா..."

துவைத்துக் கொண்டிருப்பார் போல. கையில் சோப்பு நுரை. கழுவிக் கொண்டு வந்தார்.

உள்ளே கூட்டிப் போனார். சோபாவில் உட்காரச் செய்து ஃபேன் போட்டார். நடராஜனின் வீட்டை அளவெடுத்துக் கட்டிய மாதிரி இருந்தது இதுவும். அதே இட நெருக்கடி, புழுக்கம்.

ஊரில் நான்கு அங்கண வீட்டில் புழங்கிய மனிதர் இதில் எப்படிக் காலம் தள்ளுகிறார் என ஆச்சரியமாக இருந்தது.

வீட்டில் அரவமில்லாததைக் கண்டு, "மருமக இல்லையா?" என்று கேட்டார் தில்லைநாயகம்.

"இருக்கு... வேலைக்குப் போயிருக்கு."

"வேலைக்கா.... இங்கும் அதே கூத்துத்தானா?"

சாமியப்பன் புன்னகைத்தார். "என்ன சாப்பிடறே... காப்பியா? டீயா?"

"ஏதுய்யா.... அடுப்படி வேலை கூடத் தெரியுமா?"

"கத்துக்க வேண்டியதுதான்..."

காப்பியும் மிக்சரும் வைத்தார். "என்னத்துக்கு இதெல்லாம்?" என ஏதோ சொன்னாலும் உள்ளூர இந்த உபசரிப்பு பிடித்திருந்தது. இருவரும் நாற்காலியை நெருக்கிப் போட்டுக் கொண்டார்கள். பேசினார்கள்.... பேசினார்கள்...

ஊர் நடப்பு, வீட்டு நடப்பு, விவசாயம், புறப்பட்டது, வந்தது, மனைவி, மருமகன், மகன் மீது புழுக்கம். புறப்படுகிற எண்ணம்...

சாமியப்பன் எல்லாவற்றையும், "ம்... ம்..." என்று கேட்டுக் கொண்டே வந்தார். இடையே பால்காரன் குரலுக்கு எழுந்து போனார். காய் வண்டிச் சப்தம் கேட்டு வெண்டைக்காய் வாங்கி வந்தார். பக்கத்து

## மாடல் ஆகும் மோனிகா!

கிளிண்டன் விவகாரத்துக்குப் பிறகு மறுபடி செய்திகளில் அடிபட்டுக் கொண்டிருக்கிறார் மோனிகா லெவின்ஸ்கி. இப்போது அவர்தான ஜென்னி கிரெய்க் என்ற எடைக் கட்டுப்பாட்டு உணவுக்கு விளம்பர மாடல். அந்த உணவைச் சாப்பிட்டு, எடை குறைந்திருப்பதாய்க் கூறும் லெவின்ஸ்கிக்கு, இன்னும் சுமார் இருபத்து நாலு கிலோ எடை குறைந்தால், பத்து லட்சம் டாலர் வெகுமதி தருவதாய்க் கூறியிருக்கிறார் அந்த டயட் உணவு தயாரிப்பாளர்.

– சி.எம்.



வீட்டுப் பெண், "மாமா... அவரு வந்தா சாவியைக் குடுத்துருங்க..." புது மனிதரைக் கண்டு தயங்கிய குரலில் சொல்ல, வாங்கி வைத்தார். துணிகளைக் காயப் போட்டார்.

"ம்... அப்புறப் படறதுன்னு ஆயிருச்சு?" – நிதானமாகக் கேட்டார்.

"பின்ன... இவன் போடற ரொட்டித் துண்டுக்கு இருக்க முடியுமா?" என்றார் தில்லைநாயகம்.

"தங்கச்சி கேக்காதா? போன காரியம் என்னாச்சு? அதுகளை ஏன் அழைச்சுட்டு வரலைன்னு?"

"ஏதாச்சும் சொல்ல வேண்டியதுதான்."

"நெசத்தையே சொல்லலாம். பேரப் புள்ளை யோகம் இப்போதைக்கு இல்லைன்னு."

"அப்படின்னா?"

"பைத்தியக்காரா... குழந்தை வேணாம்னு அவுங்க முடிவு பண்ணியாச்சு... என்னை முறைக்காதே... உம் மருமக எம் மருமககிட்ட சொன்னது இது..."

சாமியப்பன் சிரித்தார். வேதனையை



"கல்யாணம் செய்து கொண்டது தான் நான் செய்த இரண்டாவது தப்பு!"

"அப்படீன்னா உங்க முதல் தப்பு?"

"கல்யாணத்துக்கு முன்பு என் மனைவியைக் காதலித்தது தான்!"

— ஞா. ஞானமுத்து

## மன்னர் எழுதிய புத்தகம்!

பிரெஞ்சு நாட்டின் மன்னராக இருந்த பதினெட்டாம் லூயி, ஒருமுறை ஒரு பெரிய நூல் எழுதி அதைப் பாரிஸ் நகரத்தில் உள்ள பத்திரிகை அலுவலகம் ஒன்றிற்கு மதிப்புரைக்காக அனுப்பி வைத்தார். சில நாட்களில் மதிப்புரை பின்வருமாறு எழுதப்பட்டது:



"இந்த நூல் மன்னரால் எழுதப்பட்டது. எனவே இது விமர்சனத்துக்கு அப்பாற்பட்டது. இந்நூல் மட்டும் மன்னரால் எழுதப்படாமல் இருக்குமேயானால், இது விமர்சனத்திற்கே லாயக்கற்றது!"

ஆதாரம்: 'அறநெறி உணர்த்தும் அற்புதக் கதைகள்'

தகவல்: வி.எஸ். ஸ்ரீதரன்



"இந்தப் படத்துல எல்லாமே புதுப்புது செட்டா போட்டு எடுத்திருக்கேன்."

"நிஜமாவா...?"

"ஆமாம்! நடிகைக்குக் கூட பழைய பல்செட்டை கழட்டிட்டு புதுசு போட்டிருக்கேனா பாருங்களேன்!"

— வி. சாரதிடேச்சு

வெளிப்படுத்திய சிரிப்பு. "போன மாசமே டாக்டர்கிட்டயும் போய்ட்டு வந்தாச்சு..."

தில்லைநாயகம் அதிர்ந்தார். நிசம்தானா என திரும்பத் திரும்பக் கேட்டார். "என்ன கேடு? காசு பணம் இல்லையா... அதான் சம்பாதிக்கிறார்களே ரெண்டு பேரும்!" அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

"சம்பாதனைதான் பிரச்னையே... பெத்த பிறகு எப்படி வளர்க்கிறது?"

"....."

"வயித்துல வச்சுக்கிட்டு வேலைக்குப் போகணும்... மேலதிகாரி கீழ் அதிகாரின்னு பதில் சொல்லணும். உத்தியோகம் நிலையாகிற வரைக்கும் வழியே கெடையாது... இதுக்கெல்லாம்..."

சாமியப்பன் துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

"பாவம்யா இதுக... பவுடரும் மையும் பூசறதா நெனைக்கிறோம். துக்கத்தை மறைக்கிற வேஷம்யா அது. மனசோட ஒட்டாத வாழ்க்கை. ருசி இல்லாத சாப்பாடு. வேண்டியவங்க பக்கத்துல இல்லாத வெறுமை. தாய் தகப்பன் வந்தாலும் விட்டுட்டு ஓடணும்... நம்ம வாழ்வோட நெனைச்சுப் பாரு. பாவமா இல்லை? நிஜமாகவே வருத்தப்பட்டு அவர் பேசிய போது தில்லைநாயகத்திற்கு அதெல்லாம் புதியதாகத் தெரிந்தது. "அப்படி ஏன் வாழணும்ங்கறேன்... புடிக்கலைன்னா விட்டுட்டு வர வேண்டியதுதானே..."

"அதான் முடியறதில்லை. படிச்சதுக்கு வேலை வேண்டியிருக்கு. வேலைன்னா இதெல்லாம் இருக்கு."

சாமியப்பன் கீழே இறங்கி சப்பணமிட்டு உட்கார்ந்து வெண்டைக்காயை நறுக்க ஆரம்பித்தார். "இதெல்லாம் இங்க வந்த பெறகுதான் நானும் தெரிஞ்சுக்கிட்டேன். கஷ்டம் தெரிஞ்சதும் போக மனசு வரலை. முடிஞ்ச உதவிகளை செஞ்சுக்கிட்டு கூடவே இருக்கேன்... அதான் பார்க்கிறியே... சமையல் கூட பண்றது உண்டு... எல்லாம் பிரியம் தான். இயலாமையை புரிஞ்சு நடந்துக்கிறது கூட... ஏன்...?"

பேசப் பேச அவர் முகத்தில் தோன்றும் மாறுதல்களையும், அந்தரங்கத்தில் கொந்தளிக்கும் உணர்வுகள் வார்த்தைகளில் அமைய முடியாமல் சிதறுவதையும் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார் தில்லைநாயகம். ●

## அனைத்தும் அடங்கிய ஒரே தீர்வு...




## ... பலவித பணத் தேவைகளுக்காக.

# பீமா நிவேஷ்

ஓர் இணையற்ற, குறுகியகால, பல்வித-ஆதாயங்கள் கொண்ட காப்பீட்டுத் திட்டம்.

**சிறப்பம்சங்கள்:**

- ரூ. 25,000 முதல் ரூ. 5,00,000 (ரூ. 5,000ன் மடங்குகளில்) வரையிலான உத்தரவாதம் அளிக்கப்படும் தொகைக்கு ஒரே முறை பிரீமியம் செலுத்தினால் போதும்.
- திட்டத்தின் காலவரை: 5 வருடங்கள் மற்றும் 10 வருடங்கள்.
- பிரிவு 88ன் கீழ் வரிச்சலுகைகள் கிடைக்கின்றன.
- விசுவாசத்தொகை எனப்படும் கூடுதல் தொகைகளுக்கான வாய்ப்பு.
- இத்திட்டத்தின் காலவரையில் ஆயுள் காப்பீட்டு வசதியும் உண்டு.
- உத்தரவாதமான கூடுதல் தொகைகளுக்கு வரியில்லை. ஆண்டுக்கு ஆயிரத்துக்கு ரூ. 85/-, முதல் 5 ஆண்டுகளுக்கு மற்றும் அதன்பின்பு ஆண்டுக்கு ஆயிரத்துக்கு ரூ. 90/- (கூட்டு வட்டி முறை)
- சேரும் தகுதி: 35 வயது முதல் 70 வயது வரையிலான தனி நபர்கள். தாங்கள் ஆரோக்கியமாக இருப்பதாக ஒரு எளிய உறுதிப் படிவம் அவசியம்.

**பீமா நிவேஷ்** - விவேகமான தீர்வு.

விபரங்களுக்கு உங்கள் எல்ஐசி முகவர் அல்லது அருகிலுள்ள கிளை அலுவலகத்துடன் தொடர்பு கொள்க.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

மக்களின் மகத்தான சேவையில்

Please visit us at www.licindia.com

**13**

**பிரபஞ்சன்**

தியாகி வேதக்கண்ணு, வைத்ய நாதனைப் பார்க்க வந்திருந்தார். வேதக்கண்ணுவைப் பிழைக்கத் தெரியாதவர் என்று ஊர் சொல்லியது. அண்மைக்காலமாக, ஜனங்கள் புதிய புதிய கருத்துக்களுக்கு உள்ளாகியிருந்தார்கள். சுதந்தரப் போராட்டத்தில் அடிபட்டு, சிறைப்பட்டு, நொந்தவர் வேதக்கண்ணு. தம் வாழ்நாளில், சுமார் பத்து ஆண்டுகள் சிறைவாசம். இரண்டு மகன்கள். மனைவி, அவர் அலிப்பூர் சிறையில் இருக்கையில், சகோதரன் வீடு போய்ச் சேர்ந்தாள். சிறையை விட்டு விடுதலை அடைந்த பிறகும், மனைவி அவருடன் வந்து சேர மறுத்தாள். குழந்தைகளும் அவளுடனே இருந்தன. ஜீவனோபாயத்துக்கு, சுதேசமித்திரன், தினமணி என்று பத்திரிகைகள் தருவித்து விற்றுப் பிழைத்தார். அவ்வப்போது மகாத்மா காந்தி அறிவிக்கும் போராட்டங்களில் கலந்து கொண்டு சிறைக்குப் போனார். சுதந்தரம் வந்தது. அவருக்குக் கீழே பணியாற்றியவர்கள், எந்தப் போராட்டத்திலும் கலந்து கொள்ளாதவர்கள். சில வேளைகளில் எதிராகச் செயல்பட்டவர்கள் பதவிக்கு வந்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாக வேதக்கண்ணுவின் பெயர், தேவைப்படாததாக மாறியிருந்தது.



அரசியல் முகம் மாறி, அதிகாரத்துக்கு ஆசைப்படுகிற வேலைத் திட்டம் ஏற்படத் தொடங்கியது. வேதக்கண்ணு தடுமாறிப் போனார். நிர்மாணத் திட்டம் என்று சொல்லப்பட்டதில், தம்மை எங்கு பொருத்திக் கொள்வது என்பதை அவர் அறிய முடியாமல் தவித்தார். தியாகிகளுக்குப் பென்ஷன் பணம் வந்தது. மனைவியும் பிள்ளைகளும் அவருடன் வந்து சேர்ந்தார்கள். தெரு மக்கள், அவரை அவர் முகத்தருகே, 'பிழைக்கத் தெரியாதவர்' என்றார்கள்.

''பிழைக்கத் தெரிதல் என்றால் என்ன?'' என்று, பல சமயம், அவர் தமக்குத்தாமே கேட்டுக் கொண்டார். பதவிகளுக்கும், பர்மிட், லைசென்ஸ், கோட்டா ஆகியவைகளுக்கும் நடக்கிற யுத்தங்களை நேரில் கண்டார். கதரும், காந்தியும், கட்சியும் சுக சௌகர்யங்களை உத்திரவாதம் செய்யும், 'வேலை வாய்ப்பு நிறுவனமாக'



மாறிப் போயிருக்கும் விந்தையைக் கண்டு மனம் நொந்தார். அவர் சகாக்களைப் போல, அவராகக் கொஞ்சமும், மற்றவர்களால் அதிகமுமாக ஒதுக்கப்பட்டார். தோன்றும் போது, நண்பரைப் பார்க்க வருவார்.

வைத்தியநாதன், விச்ராந்தியாகச் சாய்வு நாற்காலியில் இருந்தார். நண்பரைக் கண்டு, "வர வேண்டும், வரவேண்டும்" என்றார். எதிரில் இருந்த நாற்காலியில் அமர்ந்தார் வேதக்கண்ணு.

"பாரதி இல்லையாண்ணா?"

"வெளியே போயிருக்கா... குழந்தையையும் அழைச்சுக்கிட்டு வந்துடுவா?"

"க்ஷேமலாபம் எல்லாம் எப்படி?"

"க்ஷேமம் உள்ளது; லாபம் இல்லை."

தியாகி சிரித்தார்.

"லாபம், நம் போன்றவர்களுக்கு எதிலும் வராது, வைத்தி."

"அது ஏன் அப்படி?"

"அது அப்படித்தான். திரு வேறு. தெள்ளியர் ஆதல் வேறு. அதாவது பணக்காரராக இருக்கிறது வேறு. தெளிந்த அறிவும், பண்பும் கொண்டவனா இருக்கிறது வேறு."

"பெரும்பாலும் ஒன்றுக்கொன்று விரோதமாவே இருக்கு. இரண்டும் சேர்ந்திருக்கிறது, பெரிய விஷயம். சேரச் சேர சமூகம் ஆரோக்யமா இருக்கிறதா அர்த்தம்."

தொட்டிப் படியில் வெயில் விழுந்தது. வாசலில், சிட்டுக்குருவிகள், இரை மேய்ந்து கொண்டிருந்தன.

"எனக்கு ரொம்ப நாளா இருக்கிற சந்தேகம்தான் வைத்தி. பிழைத்தல்னா என்ன? பிழைக்கத் தெரியாதது என்றால் என்ன? எனக்கு விளங்கலை."

வைத்தி சொன்னார்.

"தப்புக்குப் பிழைன்னு சொல்வாங்க. தப்பா வாழறது, பிழைத்தல்னு பேர். பிழையான வழியில காலம் தள்ளறது பிழைக்கிறதுன்னு பேர். அதை நாம் செய்யக் கூடாது. உண்மையான காரியம் உழைப்பு. உழைப்போடு, திருப்தியா வாழறது, வாழ்க்கைன்னு பேரு. நமக்குத்தான் பிழைப்பு இல்லை. அதை நினைச்சு நீ கர்வப்படணும். அரசியல், இன்னைக்குச் சொத்து சுகம் தேடற பிழைப்பா போச்சு. அரசியலை, நீ உண்மையா செஞ்சே. அதுதான் உனக்கு மதிப்பு. நீ உண்மையாவே மனுஷன்னு இருக்கே..."

"ஆனா, ஜனங்கள் என்னமோ நாம தப்புப் பண்ணதா சொல்றாங்களே?"

"அது நம் வீழ்ச்சியைக் காட்டறது. நம் சமூக வீழ்ச்சி. தலைவர்கள் மட்டும் இல்லை. மக்கள் கெட்டுப் போயிட்டாங்கன்னு காட்டற உதாரணம், இதுதான். 'அடடா இவர் நல்லவர்னு' உன்னைப் பாராட்டணும் ஜனங்க. இல்லேன்னா, சகல நல்ல விஷயங்கள் மேலும் மக்களுக்கு மரியாதை போயிட்டதுன்னு அர்த்தம். பல வருஷம் மந்திரியா இருந்தவர் கக்கன். அவர், மந்திரி பதவியை விட்டு வெளியேறியதும், பஸ்சுக்கு

---



## சிரிப்பையே பதிலாக்கிய தாத்தா!

இந்தத் தாத்தா வித்யாசமானவர். உயர்ந்தவர். பெரிய எழுத்தாளர் என்று எல்லோராலும் அடையாளம் காட்டப்பட்டவர். நான் எழுத்துகளை வாசிக்க ஆரம்பித்த பின், இலக்கியங்களை சுவாசிக்க ஆரம்பித்தபோது முதலில் அவரது படைப்புகளையே படித்தேன். முதலில் புரியவில்லை. பல கதைகளில் முடிவு இல்லை என நான் குழம்பிய குழந்தைப் பருவம் அது. அகம் பற்றிய கதைகளை படித்து விட்டு, ஏன் தாத்தா அசிங்கமா எழுதுகிறார் என்று கூட எண்ணியுள்ளேன். அவரது புத்தக அறையில் தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருத வேத புத்தகங்கள், சுதேசமித்திரன், மணிக்கொடி போன்ற பல்வேறு வகையான புத்தகங்களை பிரமிப்போடு தூசி தட்டி, அடுக்கிக் கொண்டே அவரிடம் அதைப் பற்றி கேட்பேன். என் கேள்விகளுக்கு சிரிப்பையே பதிலாக்கினார்.

பல வருடங்கள் கழித்து, அதே கதைகளை மீண்டும் படித்தபோதுதான் புரிய ஆரம்பித்தது. கதையில் அவர் என்ன கருத்தைச் சொல்ல வந்தார் என்று புரிந்தது. அக் கருத்தை, சொல்லிய பின்னரே அவர் கதையை முடித்திருக்கிறார் என்றும் உணர்ந்தேன். என் புதிய புரிதல்களையும் பாராட்டுகளையும் அவரிடம் கூறினேன். அப்பொழுதும் அவர் சிரிப்பையே பதிலாக்கினார். அவருடைய கதைகள் மிக முதிர்ச்சியானவை. படிக்கவே பக்குவம் தேவைப்படும் எழுத்துக்கள்.

**– அண்மையில் மறைந்த எழுத்தாளர் எம்.வி. வெங்கட்ராம் பற்றி அவரது பேத்தி டாக்டர் ஏ.ஆர். சாந்தி எம்.பி.பி.எஸ்., 'எம்.வி. வெங்கட்ராம் கதைகள்' (கண்மணி வெளியீடு, 92, டி.எஸ்.வி. கோயில் தெரு, சென்னை – 600 004) எனும் நூலில் எழுதிய முன்னுரையிலிருந்து... (இந்நூல் தமிழ் வளர்ச்சித் துறையின் பரிசு பெற்றிருக்கிறது. அதை வாங்கிக் கொள்ளத்தான் எம்.வி.வி. உயிரோடு இல்லை.)**

நின்னார். ஜனங்க அதைப் பாராட்டலை. இப்போ, அதன் பயனை அனுபவிக்கிறாங்க. எனக்கொரு நிகழ்ச்சி நினைவுக்கு வருது. தலைவர் ஜீவா, எம்.எல்.ஏ.வாக இருந்த காலம். அவர் தொகுதியில, பள்ளிக்கூட திறப்பு விழாவுக்குக் காமராஜர் வர்றார். ஜீவா வீட்டுக்கு முன்னால, வண்டியை நிறுத்தி, 'வாங்க விழாவுக்குப் போகலாம்'கிறார். 'எனக்கு அழைப்பு வரல்லையே'ன்னு ஜீவா சொல்கிறார். 'பரவயில்லை. நான் அழைக்கிறேன். வாங்க'ன்னு சொல்கிறார், காமராஜ். 'இருங்க... வந்துட்டேன்னு' தோட்டத்துக்குப் போறார் ஜீவா. ரொம்ப நாழியா திரும்பலை. என்னன்னு பார்க்க, காமராஜ் தோட்டத்துப் பக்கம் போறார். அங்க, ஜீவா, துவைத்த வேஷ்டியை, ஒரு முனையை மரத்துல கட்டிட்டு, மறு முனையைக் கையிலே வச்சுக்கிட்டு ஆட்டிக்கிட்டு இருக்காரு. பதறிப் போயிட்டார் காமராஜ். வேறு வேஷ்டி இல்லாமே இருக்கிற ஜீவாகிட்ட, நான் வேணும்னா, நாலு வேஷ்டி வாங்கி அனுப்பறேன்னு சொன்னாராம். ஜீவா மறுத்திட்டார். என் கட்சி என் வாழ்க்கைத் தேவையைப் பார்த்துக்குதுன்னு சொல்லி அதை மறுத்திட்டாராம். வேதம்... இதைச் சொன்னா, இந்தக் காலத்துப் பிள்ளைகள் நம்ப மாட்டாங்க. பொய் சொல்றதா சொல்லுவாங்க... என்ன பண்றது... நம் தலைமுறை வேற...''

"இது எங்க போகும், அண்ணா. ரொம்ப மோசமான நிலைமையை உருவாக்கிடுமே...''

"உருவாக்கிடுமே – இல்லை. உருவாக்கிடுச்சு... இன்னைய தேதிக்கு, அரசியல், நாகரிக, நல்ல மனிதர்களோட தொழில் இல்லை."

வெயில். வாசலைக் கடந்து, தூணைத் தாண்டியும் வந்து இருந்தது.

"ஐயோ... இது மாறும்னு தோணலையா, வைத்தி."

''கஷ்டமாத்தான் இருக்கு. ஆனா, தோணலை."

"இதுக்கு விடிவே கிடையாதா?"

வைத்தி, சற்று நேரம் வாசலை, வெயிலை, ஊரும் எறும்பைப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தார்.

"வரும். விடிவு வரும். பாரதி, எல்லாம் பாழ்பட்டுப் போச்சுன்னார். அரசியல், ஆன்மிகம், கல்வி, கலாச்சாரம் எல்லாம். அரசியல், முதல் இல்லாத தொழில். ஆன்மிகம், குறி சொல்ற சமாச்சாரம். கல்வி, பணம் பண்ணுகிற வியாபாரம். கலாச்சாரம், கவர்ச்சிப் பொருள். என்ன பண்றது?''

"வைத்தியண்ணா, யோக்யர்கள் இல்லாம போச்சா?''

"இருக்கிறார்கள். ஒதுங்கியிருக்கிறார்கள். வெக்கப்பட்டுக் கிடக்கிறார்கள். அவர்கள், அரங்குக்கு வரணும்.''

பாரதி, குழந்தையுடன் வந்து சேர்ந்தாள்.

சந்தியா தாத்தாவிடம் சொன்னாள்.

"தாத்தா... நான் வீட்டுப் பாடம் எழுதணும். மனப்பாடம் பண்ணணும்'' என்று சொல்லிவிட்டு அகன்றாள்.

"இதுதான் கல்வி.''



''எதிர்வீட்டு முனுசாமியை பத்திரிகைக்காரங்களும் தனியார் டி.வி.க்காரங்களும் போட்டி போட்டுக்கிட்டு பேட்டி எடுத்துக்கிட்டிருக்காங்களே! என்ன சாதனை பண்ணிட்டாரு அவரு அப்படி?''

''அந்த ஃபைனான்ஸ் கம்பெனியில் போட்ட டெபாசிட் இருபதாயிரத்தை எப்படியோ திரும்ப வாங்கிட்டாறாம்!''

– உ.. ராஜாஜி

பாரதி, அவர்கள் முன் வந்து அமர்ந்தாள்.

"மாமா, ஏதாவது சாப்பிட்டீங்களா?''

"எல்லாம் வீட்டிலேயே ஆச்சு. என்ன சொல்றான் உன் புருஷன்?''

"சினிமாவில் பாடணும்னு சொன்னார் மாமா. முடியாதுன்னு சொல்லிட்டேன்.''

சற்று கனத்து இருந்தது, காலம்.

பாரதி எழுந்து உள்ளே போனாள்.

''ஆண் பெண் வாழ்க்கை இப்படி இருக்கு'' என்றார் வைத்தியநாதன்.

''மனைவியோட யோக்யதையைப் புரிஞ்சுக்க முடியல்லை, ஒரு புருஷனால.''

அப்பா சிரித்தது கேட்டது பாரதிக்கு.

காப்பியைக் கொண்டு வந்து இருவருக்கும் கொடுத்தாள்.

"என்னைப் பற்றித்தான் பேச்சா?"

"உன்னைப் பற்றியது மட்டும் அல்ல. பொதுவாகவும்" என்றார் அப்பா.

"நீ கவலைப்படாதேம்மா" என்றார் வேதக்கண்ணு.

"நான் கவலையேபடுவது இல்லை மாமா. நான் கவலைப்பட்டு என்ன ஆக? கவலைப் பட வேண்டியவர், என் கணவர்."

சற்று நேரத்துக்குப் பிறகு, பாரதி அப் பாவிடம் சொன்னாள்.

"அவர், லலிதாவைப் பார்த்துப் பேசி இருக்காருப்பா."

"என்னவாம்?"



''லஞ்சம் வாங்கற அரசியல் வாதியைப் பற்றி கதை எழுதியிருக் கேன். என்ன பெயர் வைக்கலாம்?''

'' 'கவர் ஸ்டோரி'! ''

– ஏ. செந்தில்குமார்

அவள் தயங்கினாள்.

குறிப்பறிந்து எழுந்து கொண்டார் தியாகி.

"நான் அப்புறமா வர்றேன்" என்று இருவரிடமும் விடைபெற்றுக் கொண்டு போய்ச் சேர்ந்தார்.

"அப்பா... லலிதாகிட்ட, அவர் சொன் னாராம்..."

தயங்கியபடி அவள் நிறுத்தினாள்.

"தைரியமா சொல்லு. என்னவாம்?"

"அவிரந்தனுக்கு, இவ மேல என்ன அக்கறைன்னு கேட்டாராம். அவன் கட்டை பிரம்மச்சாரி... ஏதோ இப்படிச் சொன்னா ராம்."

அவர், மௌனமாக, மூலையில் சாய்த்து வைக்கப்பட்ட, தம்பூராவையே பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தார்.

"இதைப் பற்றியெல்லாம் நீ நினைக்கா தேம்மா."

"இல்லைப்பா. நினைக்கலை. ஆனா, ஒரு மனுசன் மூளை எப்படியெல்லாம் யோசிக்க முடியும்ன்னு வருத்தமா இருக்கு."

"என்ன பண்றது? மனுசனை அளக்கிற 'மானி' ஏதாச்சும் இருந்தா சௌகர்யமா இருக்கும்."

சற்று நேரம் அவர்கள் பேசாமலே இருந் தார்கள்.

"எங்கே உன் சிஷ்யை?"

"இன்னும் வரலை."

"ரொம்ப நல்ல பாத்திரம். கொடு. எதை யாச்சும் போட்டுக்கிட்டே இரு. உன் பெயரைச் சொல்லக்கூடியவள் அந்தப் பெண்."

அஞ்சலை அதே நேரம் வந்து சேர்ந் தாள்.

"காப்பி எடுத்துச் சாப்பிடு" என்று அஞ்சலையிடம் சொன்னாள், பாரதி.

"சரிக்கா" என்றவள், தோட்டத்துக்குச் சென்று முகம் கால், கை அலம்பி, சாமி படத்துக்கு முன் நின்று, நெற்றிக்கு இட்டுக் கொண்டு காப்பி குடித்துத் திரும்பினாள்.

வைத்யநாதன், அவளை மகிழ்ச்சி பொங் கப் பார்த்துக் கொண்டு இருந்தார்.

"உட்காரம்மா"

"நேற்று சொல்லியதைப் பாடு பார்க்க லாம்!" அஞ்சலை உடன் தொடங்கினாள்.

"ஒரு வரம் உன்னிடம் கேட்க ஆசை
தருவாய் நீ தயாபரி...
சிவசிதம்பர பாரி... ஒரு வரம்..."

அஞ்சலை பாடி முடித்து, அக்காவின் முகம் பார்த்தாள்.

"நல்லாவே பாடறே..."

"ராக லட்சணம் வசப்பட்டுதுன்னா, இன்னும் நல்லா வருவா?"

"ஒன்றரை மாசத்துக்கு இது பரவா யில்லை, இல்லையாப்பா"

"எதேஷ்டம்" என்றார் அப்பா.

"அக்கா"

"என்னடி?"

"பாட்டு என்னத்துக்கு உனக்குன்னு சொல்றாங்க."

"யாரு?"

"அப்பா"

"நான் அவரண்டை நாளைக்கே பேசறேன்" என்றாள் பாரதி.

(தொடரும்)

## பி.எம்.ஸியில் போகி

107 வருட சரித்திரத்தில், முதன் முறையாக BMC பற்றி எரிந்தது! அதுவும் முதல் மாடி - கவுன்ஸிலர் லவுஞ்ஜ் - ஃபயர் அலாரமும் கிடையாது. நல்லவேளை, ஃபோனாவது இருந்ததே. தியணைப்புப் படைக்குத் தொலைபேசி, உடனடியாக வரவழைத்ததால், இழப்பு 3 கோடிகளுடன் போனது! முன்னாள் நகரத் தந்தையர்களெல்லாம் சாம்பலாயினர். (ஃபோட்டோவில்தான்!) மூன்று பிரம்மாண்ட அலங்கார கண்ணாடி விளக்குகள் பஸ்மமாயின; ஸ்டீவன்ஸ் நிர்மாணித்த கம்பீர அழகு கரியடித்துக் கொண்டது. புஜ்பல், அரசு தரப்பில் 25 லட்சங்களும் தம் தரப்பில் ஒரு லட்சமும், கட்டட நிவாரண நிதிக்கு அறிவித்து விட்டார். முன்னாள் மேயர்கள் பலரும் இவரைப் போலவே உணர்ச்சி வசப்பட்டுள்ளனர். மற்ற கட்டடங்களின் தரத்தை சோதிப்பவர்களுக்கு, இப்படி ஒரு சோதனை வேண்டாம்தான்! ஹூம்... வேண்டாத கான்ட்ராக்டர்களின் சதி என்றெல்லாம் சின்னத்தனமாக எண்ணக் கூடாது! ஏதோ, நம் கலாசாரத்தை ஒட்டி 'போகி' கொண்டாடியிருக்கிறார்கள் என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளலாம்! பழையனவெல்லாம் கழிந்து, புதியன (சுவர்ச் சித்திரங்கள் உட்பட) புகப் போகின்றதே!

# இன்டர்நெட்டில் நடக்கும் கல்யாணம்!

## நெட்டிங்!

Dating, Wedding எல்லாம் போய் இப்போது Netting வந்து விட்டது! இன்டர்நெட் குரு விஜய்முகி, ஆபீஸ் துணைவி ஸோனல் கொடீசாவை வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொள்ள முடிவெடுத்தாரா... மும்பையின் பிரபல 'நெடிஸன்'னான ஷம்மி கபூருக்கு திடீரென்று ஒரு ஃப்ளாஷ் அடித்தது! 'நாமெல்லோரும் இண்டர்நெட்வாசிகள்! ஏன் இன்டர்நெட்டிலேயே நீங்கள் திருமணம் செய்து கொள்ளக் கூடாது?' என்று கேட்க, உடனே இந்தியாவின் முதல் இன்டர்நெட் கல்யாணத்துக்கு நாள் குறிக்கப்பட்டு விட்டது! இதற்கென ஒரு கான்ஃப்ரன்ஸ் ரூம் இன்டர்நெட்டில் திறக்கப்படுமாம் - அதுதான் கல்யாண மண்டபம்! புரோகிதர் ரோலுக்கு அமெரிக்க நெடிசனான கன்வால் ரேக்கி மாட்டியிருக்கிறார் - அவர்தான் திருமணத்தை நடத்தப் போகிறவர்; கன்னிகாதானம்... ஸாரி... நெட்டிகாதானம் செய்யப் போவது ஷம்மி கபூர்! எல்லா நெடிசன்ஸும், வெப்சைட்டில் வந்து வாழ்த்தலாம்! ஜனவரி 20 நடக்கப் போகும் வைதிக முறைத் திருமணத்தைப் பற்றி விஜய்முகிக்குக் கொஞ்சமும் அக்கறையில்லை. நெட்டில் தாலி கட்டினால்தான் ஆயிற்று என்று எல்லோரையும் நெட்டித் தள்ளுகிறார். நெட் மணம் கமழ விருந்தும் ஸ்க்ரீனிலேயே போட்டுக் காட்டி விடுவார்களோ? (கல்கியில் வெளியான நையாண்டிக் கதை உண்மையாகி விட்டதே!)



• நெட் மாமனார் - மாப்பிள்ளை (ஷம்மி - விஜய்)

## பலூன் வாழ்வு

செய்யும் தொழிலே யமனாக முடியும் கன்றாவிக் கதைகள் மும்பையில் ஏராளம் - லேட்டஸ்ட், கோவண்டி விபத்து: க்யாஸ் பலூன் விற்றுக் கொண்டிருந்த விஜய் இன்காலேவின் மரணத்துக்கு, க்யாஸ் சிலிண்டர் திடீரென்று வெடித்ததே காரணம். நாலு பேர் ஸ்தலத்திலேயே மரிக்க, 32 பேர் ஆஸ்

பத்திரிகளில் போராடிக் கொண்டிருக்கின்றனர்; அதில் 17, சின்னஞ்சிறுசுகள். கொடுமை இத்துடன் முடியவில்லை; சின்னாபின்னமாகிச் சிதறிக் கிடந்த விஜய்யின் உடல் பாகங்களை ஒன்றுதிரட்டி வைத்துக் கொண்டு போலீசார் காத்துக் கிடக்கிறார்கள்; அதை யாரும் எடுத்துச் செல்ல முன் வரவில்லை! விஜய்யின் குடும்பத்தார், தங்களை யாராவது அடித்துப் போட்டு விடுவார்களோ என பயந்து கொண்டு, இடத்தை விட்டே ஓடி விட்டனர்! பாவம், காற்றுப் போன பலூன்கள்....

## அர்த்த பூனேஸ்வரிகள்

பூனேவில் பூனைகள் நடனம் (Safari cats) நடந்தது பொருத்தம்தான்! பார்த்திர்கள்தானே...? ஃபெமினா மிஸ் இண்டியா அழகிப் போட்டியைத்தான்



• ப்ரியங்கா, லாரா, தியா

சொல்கிறோம்; அதுதான் திரும்பிப் பார்த்தால் வந்து விடுகிறதே... யுக்தா முகி பார்க்க வேண்டிய அனாதை இல்லங்கள், ஆஸ்பத்திரிகள், காலேஜுகள், பள்ளிகள் இன்னும் எத்தனை எத்தனையோ.. அதற்குள் அடுத்த செட் அழகிகள் லாரா, ப்ரியங்கா, தியா கிளம்பி விட்டனரே... சரி அதை விடுங்கள்... திரும்பத் திரும்ப நம் கலை, கலாசாரம், பண்பாடு, குடும்பம் என்ற லெக்சர்களை அழகிகள் வாயிலாகக் கேட்டு போரடித்து விட்டது; அந்த திவ்ய நடனத்துக்கு வருவோம். அர்த்த நாரீஸ்வரர் பாணியில் உடலின் ஒரு பாதியை மட்டும், ஒரே பக்கத்தில், வரி வரியான துணியால் (இல்லை பெயிண்டா?) மூடிக் கொண்டு, பின்னால் பெரிய வாலையும் ஒட்டிக்கொண்டு, புலிகள் போல் குதித்துப் பாய்ந்து, ஓடி ஒரு ஆட்டம் ஆடினார்களே... சிலிர்த்து விட்டது! தொடர்ந்த 'ஆக்ரோபாட்ஸ்'ம் அசாத்தியம்! பார்த்தவர்கள் எல்லாம் கான்பூருக்கு ஒரு ட்ரிப் அடிக்கலாம் - லக்ஷ்சண்டி யக்ஞம் நடக்கப் போகிறதே? மக்களின் மனசில் உள்ள மாசுகளைக் களைந்து தூய்மையான எண்ணங்களைப் புகுத்துவதற்கென்று பிரத்யேகமாகச் செய்யப்படும் யக்ஞம் இது!

## நெல்லை மறப்பதில்லை

நெல்லை மணி போல் ஸின்ஸியராக கடிகார மணி கூட இருக்க முடியாது; தமக்கு... ஸாரி... தமிழுக்குச் சேவை செய்த அனைவரையும் தேடிப் பிடித்து கௌரவித்திருக்கிறாரே? ஆன்மிகம், கலை, கல்வி, தொழில், சமூகம், சினிமா, பத்திரிகை.... ஒரு துறையை விட்டு வைக்கவில்லை! டீ.வி. ராமானுஜம் மெமோரியல் அவார்டு, ஆதிலக்ஷ்மணன் மெமோரியல் அவார்டு, கவிஞர் கண்ணதாசன் மெமோரியல் அவார்டு, ஆர்.எஸ். மணி மெமோரியல் அவார்டு என, சிவஸ்வாமி ஆடிட்டோரியத்தில் ஒரே அவார்டு மழையாகப் பொழிந்து தள்ளி விட்டார். பஜன சமாஜத்து கணேச வாத்யாரிலிருந்து, முலுண்டு ஃபைன் ஆர்ட்ஸ் கணபதி வரை... சண்முகானந்தா சேஷாத்ரியிலிருந்து வாணி வித்யாலயா அருணாசலம் வரை... கிட்டத்தட்ட முப்பத்திரண்டு தமிழன்பர்களை கௌரவித்து, தாயுள்ளத்துடன் கனிந்துருகியிருக்கிறார். (Divine Mother's Society-ம் இணைந்திருக்கிறார்களே!) யார் சொன்னார்கள் நன்றியுணர்ச்சி குறைந்து விட்டதாக?

— ஜெயஸ்ரீ ராஜ்

• நாகையில் விநாயகருக்கு நாகாபரணப் பிள்ளையார் என்று பெயர்

# ஆனந்தக்கடல் விடங்கர்

கருத்தமன் என்ற ஒரு முனிவர் அவருடைய புதல்வன் புண்டரீகன். தந்தை மகனுக்கு ஆற்றும் உதவியாக "நீ சிவபெருமானை ஆகமவிதிப்படி வழிபட்டு பிறந்த பயனை அடைய முயற்சி செய்" என்று உபதேசித்தார். தந்தையின் சொல்லை அப்படியே ஏற்ற புண்டரீகன் முதலில் தவம் செய்வோர் நாடும் கங்கைக் கரையை அடைந்து நீராடி எத்தனையோ ஆண்டுகள் ஆறு காலம் சிவபெருமானை தரிசித்தும் அன்னபூரணியை வழிபட்டும் ஐம்புலன்களை அடக்கித் தவம் செய்தான். மனித உடலோடு முக்தியடைய வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் தவம் செய்து மகரிஷியாகி விட்டான். ஆனால் பகவான் காட்சி தரவில்லை.

பிறகு தென்னாட்டில் புகழ்பெற்றிருந்த தலமான காஞ்சியில் வந்து காமாட்சி அம்மனையும் கச்சிக் காரோணரையும் பூஜித்து வந்தார் புண்டரீகர். அங்கும் ஈசன் காட்சி தரவில்லை. புண்டரீகமுனிவர் மிகவும் வருந்திக் கொண்டிருந்தபோது அசரீரி ஒலித்தது. "கும்பகோணம் சென்று பூஜை செய்" என்று!

உடனே கிளம்பி விட்டார் முனிவர். எத்தனையோ ஆண்டுகள் கும்பகோணத்தில் மங்களநாயகி சமேத கும்பேசரையும் இன்னும் பல சிவமூர்த்தங்களையும் பூஜித்தும் இறைவன் மனமிரங்கவில்லை. அங்கு வந்த கண்வமுனிவர், "கீழ்கடற்கரையில் உள்ள சிவராஜதானி என்று பெயருடைய தலத்துக்குப் போய் தவம் செய்" என்று கூறினார்.

உடனே புண்டரீகமுனிவர் சிவராஜதானி என்று அந்தக் காலத்தில் பெயர் பெற்றிருந்த நாகப்பட்டினத்துக்கு வந்து சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பற்பல ஆண்டுகள் பகவானைத் தொழுது பூஜித்து வந்தார்.

– இந்தக் கதை சனற்குமார முனிவருக்கு திருநந்தி தேவர் சொன்னதாக அமைந்திருக்கிறது. இதை திருநாகைக்காரோணப் புராணமாகப் பதிவுசெய்த பெருமை திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளைக்கு உரியது. (உ.வே.சாவின் குரு) புண்டரீக மகரிஷி நாகையில் சிவபெருமானைப் பூஜித்த விமரிசையை அவர் பாடியிருக்கிறார் பாருங்கள்! அவர் கூறியுள்ள புஷ்பவகைகளைப் பார்த்தாலே பிரமிப்பாக இருக்கிறது.

நந்தியாவட்டம், மாதுளை, சந்தனம், கூதாளி, ஞாழல் பாதிரி, கோங்கு, நாரத்தை, நெல்லி, ஆத்தி, விஷ்ணுக்ராந்தம், மகிழம்பூ, வெண்ணொச்சி, ஓரிதழ்க்கமலம்... இன்னும்

எத்தனையோ மலர்களால் மாலை, இண்டை, தொடை, கண்ணி, தார் என்று பலவகை மாலைகளைக் கட்டிப் பூஜித்தாராம்.

இப்படி எல்லாம் முறைப்படி சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணி பூஜித்து வந்ததால் ஈசுவரன் மனம் நெகிழ்ந்து அப்படியே புண்டரீக முனிவரைத் தழுவிக் கொண்டு தம்முள்ளேயே ஐக்கியம் செய்து கொண்டு விட்டார். ஆனி மாதம் - ஆயில்ய நக்ஷத்திரம்.

சரீரத்தோடு புண்டரீகமுனிவரைத் தம் மீது ஆரோகணம் செய்து கொண்டபடியால் இந்த ஊரில் பரமேச்வரனுக்குக் காயா ரோஹணர் என்ற பெயர் வந்தது.

திருநாகைக் காரோணம் என்று சொல்லப்படுகிற நாகப் பட்டினத்துக்குப் போகிறோம் - விடங்க ஸ்தலங்களுள் ஐந்தாவதாக். அதற்கு முன் நான்காவது ஸ்தலமான திருநள்ளாறு பற்றிச் சொல்லி விடுகிறேன். முன்பே அங்கு சென்று, நகர விடங்கரை தரிசித்துக் கொண்டு, தர்ப் பாரண்யேச்வரரையும் போக மார்த்த பூண்முலை அம்மை யையும், சனீச்வர பகவானை யும் தரிசித்துக் கொண்டு விட் டோமே. திருநள்ளாற்றின் நக விடங்கர் என்ற பெயரைப் புத்தகத்தில் படித்தேன். தியாகராஜசுவாமி திருநள் ளாறில் ஆடுவது உன்மத்த நடனம். பித்தம் தலைக்கேறியது போலக் குதித்து ஆடிக் கொண்டே சுவாமி வீதி வலம் வருவாராம்! "பித்தா பிறை சூடி!" என்று சுந்தரர் பாடினா ரல்லவா? அடியார்களுக்குத்தான் பகவானி டம் என்ன சுதந்திரம்! எவ்வளவு சுவாதீனம்!

திருநள்ளாற்றிலிருந்து நாகப்பட்டினம் வரும்போது காரைக்கால் நகரத்தை அடை கிறோம். காரைக்காலம்மையாரைப் பற்றி எல்லோருக்கும் தெரியுமே. அதனால் அவரை மனத்தால் வணங்கி மேலே போவோம்.

காரைக்காலில் நித்தீச்வரம் என்ற இடத் தில் ஒரு விநாயகர் கோவில் இருக்கிறது. நேர மிருந்தால் இந்த விநாயகப் பெருமானைத் தரி சித்து மகிழலாம். கோபுர அமைப்பே புது விதமாக இருக்கிறது. பதினாறு கணபதி களோடு (ஷோடசகணபதி) நடுநாயகமாக வீற்றிருக்கும் கணபதியைச் சேர்த்துப் பதி னேழு விநாயகர் தோற்றங்களைக் கோபுரத்தி லேயே பார்க்கலாம். சுந்தரமான வடிவ முடைய கணபதி இவர். அடியார்க்கு எளியர். ஆகம முறைப்படி ஹோமங்களும், பூஜை களும் சிறப்பாகச் செய்யப்பட்டு வருகின்ற கோவில்.

நாகைக்கு வந்து விட்டோம். கோபுர வாசலிலிருந்து தொடங்கலாம்.

கோபுரம் தாண்டி உள்ளே போன உடனே காட்சி தருவது நாகாபரண விநாயகர். நாகப் பட்டினமாயிற்றே. நாகத்துக்கு முக்கியத்து வம் இருப்பது என்ன ஆச்சரியம்?

பொன்னியின் செல்வனைப் படித்தவர் களுக்கு நாகைப்பட்டினம் பரிச்சயமான நகரம். கடற்கரைப் பட்டினம் என்பதும், ஒருகாலத்தில் சூடாமணி விஹாரம் இருந் ததும் அதில் புத்தபிக்ஷுக்கள் வாழ்ந்ததும் தெரிந்திருக்கும்.



• நித்தீச்வரம் விநாயகர் கோயில்

பல்லவ அரசர்களின் குலம் தழைக்கச் செய்த தொண்டைமான் இளந்திரையன் நாகர் உலகிலிருந்து வந்து கரையேறிய இடம் தான் நாகப்பட்டினம் என்று ஒரு வரலாறு.

இன்னொரு புராணக் கதை : ஆதி சேஷனுடைய மகள்சாலீசுகன் என்ற அர சனிடம் காதல் கொண்டு விடுகிறாள். இந்த நாககன்னியை முன்னிட்டு ஆதிசேஷன் கடற்கரையில் ஒரு நகரம் நிர்மானித்தார்.

இதுதான் நாகப்பட்டினம் என்று பெயர் பெற்றது.

நந்தி தேவரைத் தாண்டி சோழன் கோபுரம் வழியாகப் போனால் ராஜதானி மண்டபம். நேரமிருந்தால் இந்த மண்டபத்தில் உள்ள ஒவ்வொரு தெய்வ வடிவையும் தரிசித்து மகிழலாம்.

எத்தனையோ ரிஷிகளும், நாகங்களும், தேவர்களும் பூஜித்த காயாரோஹணர் சந்நிதி. புண்டரீக மகரிஷிக்குக் கூண்டோடு கைலாஸ பதவி அளித்த மூர்த்தி. பயபக்தியுடன் தரிசனம் செய்கிறோம். மூலவருக்குப் பின்னால் ரிஷபத்தின் மீது தேவியும் பரமனும் காட்சி தருகிறார்கள். ஸப்த ரிஷிகளுக்கும் திருமணக் கோலத்தில் காட்சியளித்ததாக ஐதீகம். நன்றாகத் தீபாராதனை காட்டி நம்மைத் தரிசனம் செய்ய வைக்கிறார் குருக்கள்.

நாம் ஆர்வத்தோடு தரிசனம் செய்ய



• கோயிலினுள்ளே...

வந்திருப்பது தியாகராஜஸ்வாமியை அல்லவா? இவர் மார்கழி மாதம் திருவாதிரையில் திருநடனம் செய்வார்.

நாகையில் வைகாசி விசாகத்தில் பிரும்மோத்ஸவம் நடைபெறுகிறது. ஆடி மாதம் ஒன்பதாவது நாள் வஸந்தன். மத்தளம் வாசித்துக் கொண்டே தியாகர் புறப்படுவார். முன்னும் பின்னும் மேலும் கீழும் இருபக்கமும் ஆடுவாராம். ஏகப்பட்ட மாலைகளையும் அணிபணிகளையும் அணிந்திருப்பார் தியாகர். ஆனால் ஒரு பூக்கூடச் சிதறாதாம். "தியாகர் பவனியைக் காணக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்" என்று கூறினார் கோவில் குருக்கள். மத்தளம் கொட்ட சுந்தர விடங்கர் பவனி வருவார். பராவார தரங்க நடனம் ஆடுவார். அலைகள் எழுந்து விழுவது போல மேலும் கீழுமாக அலைந்தாடுவாராம். பாத தரிசனம் செய்யலாம்.

"இளங்கதிரின் மணிமுடியும்
எதிர்ப்படுகண் கவர்முகமும்
களங்கமில் பொற்குழைக்காதும்
கருணைபொழி திருவிழியும்
வளங்குலவு செவ்வாயும்..."

கண்டு மகிழ்கிறோம்.

தியாகருக்கு எதிரே உள்ள சுந்தரருக்கும் ஒரே சமயத்தில் நைவேத்யம் தீபாராதனை செய்வார்கள்.

பல ஆண்டுகளுக்கு முன்னால் நாகப்பட்டினம் வந்த போது கோமேதகத்தினால் ஆன விடங்கரைத் தரிசித்திருக்கிறேன். மீண்டும் தரிசிக்க வேண்டுமென்ற ஆவலைத் தெரிவித்தேன். சற்று நேரம் பேசிக் கொண்டார்கள். பிறகு சாவி கொண்டு வந்து பெட்டியைத் திறந்து விடங்கரை எடுத்துப் பீடத்தின் மீது வைத்தார்கள். இவர் நான் தரிசித்த கோமேதகலிங்கம் இல்லை. சிறிய ஸ்படிக லிங்கம். விசாரித்தபோது, "சில காலத்துக்கு முன்னால் திருட்டுப் போய் விட்டது" என்றார்கள். பகீரென்றது. "இப்படிக் கூட நடக்குமா? சிவசொத்து குலநாசம் என்பார்களே. சிவனையே கடத்திக் கொண்டு போய் விட்டார்களே"ன்று ரொம்ப வருத்தமாக இருந்தது. "ஈசனே இந்தக் குற்றங்களை எப்படிப் பொறுத்துக் கொள்கிறீர்?" என்று துயரத்துடன் கேட்டு விட்டு உலகம் ஈன்ற தாயான கருந்தடங்கண்ணியின் சந்நிதியை அடைந்தேன்.

கருந்தடங்கண்ணி சன்னிதி வெறிச்சோடி இருந்தது. ஏகாந்த தரிசனம் இன்று வாய்த்திருக்கிறது.

"மறையெனுமோர் பெருங் கூட்டில்
வாழுமிளம் பசுங்கிளியை
நிறை தவத்தோர் உளப்புலத்து
நேர்முளைத்த சுவைக் கரும்பைக்
கறை துடிக்கும் கருந்தடக்கண்
கருங்குயிலைக் கண்டு"

தொழுகிறோம். நீலாய தாட்சி அம்மை என்பது வடமொழிப் பெயர். ஒரு சாதாரணமான மஞ்சள் புடைவையில், மூக்குத்தி பளிச்சென்று இலங்க, மல்லிகை மலர் கிரீடத்தில் சூடிக் கொண்டு இரக்கமான பார்வையுடன் தயாமூர்த்தியாய், அருள்சுரக்கப் பார்க்கிறாள்.

அம்பாள் சந்நிதியில் உள்ள நந்திகேசுவரரைக் காட்டுகிறார் குருக்கள். காலை மடித்து அவசரமாக எழுந்திருக்கும் பாவனையில்

நீலாயதாட்சியையும், காயாரோஹணரையும் ஒரே சமயத்தில் தரிசித்துக் கொண்டிருக் கிறார்.

நீலாயதாக்ஷி அம்மனுக்கு ஆடிப் பூரத்தில் பத்து நாட்கள் உற்சவம் நடக்கும். அற்புதமாக நடக்கும். வெள்ளை சாத்துவது என்று வெள்ளைப் புடைவை உடுத்தி அலங்காரம் செய்வது வழக்கம். பூரம் கழிப்பது என்று ஒரு சடங்கு. அம்மனுக்கு ஏற்றி இறக்குவது முதற்கொண்டு செய்து கொண்டாடுவார்கள். பத்து கும்பம் வைத்து ஒன்பது சிறுமிகளுக்கு சீப்பு கண்ணாடி வளையல் எல்லாம் தருவது வழக்கம். நவராத்திரி விழாவும் சிறப்பாக நடக்கும்.

'நீலாய தாக்ஷி' என்று பரசு ராகத்தில் சியாமா சாஸ்த்திரியும், "அம்பா நீலாய தாக்ஷி" என்று நீலாம்பரி ராகத்தில் தீக்ஷிதரும் "கர்மமே பலவந்தமாய" என்று சாவேரியில் தியாகப்ரும்மமும் பாடிய அன்னை.

வியாழக்கிழமையில் செஞ்சந்தனம் சாத்தி அர்ச்சனை செய்தால் பிறவிப் பெருந்துன் பத்தை நீக்கி விடுவாள் நீலாயதாக்ஷி.

அகில ஜகத்துக்கும் சாக்ஷியாக இருக்கின்ற அம்பிகை நீலாயதாக்ஷியைத் திருவாரூர்த்திரு மூர்த்திகள் பாடியிருக்கிறார்கள் என்றால் சமயக் குரவர் மூவரும் காயாரோஹணரைப் பாடியிருக்கிறார்கள். சுந்தரர் தமக்கு வழக்க மான உரிமையுடன் "பரவையாருக்கும் சங்கிலியாருக்கும் எனக்கும் நீர்தான் பற்றுக் கோடு. வேறு யார் எனக்கு இருக்கிறார்கள்? என்னுடைய குறைகளையெல்லாம் தீர்க்க வேண்டும். ஒளி வீசும் முத்துக்கள், அணிந்து கொள்ள ஆபரணங்கள், பட்டு, புஷ்பங்கள், கஸ்தூரி சாந்து எல்லாம் வேண்டும்" என்று நயந்து கேட்கிறார்! தேவாரத்தைப் படித்தால் வேடிக்கையாக இருக்கிறது.

அதிபத்த நாயனார் இந்த ஊரில் வாழ்ந்த மீனவர் குலத்தைச் சேர்ந்த பக்தர். கடலில் வலை வீசுவாராம். அதில் அகப்படும் முதல் மீனைத் தம் இஷ்ட தெய்வமான நாகநாதருக்கே என்று அர்ப்பணித்துத் திரும் பக் கடலில் விட்டு விடுவாராம். ஒரு சமயம் பளபளப்பான நவமணி மீன் ஒன்று முதலில் கிடைத்தது. அருகில் இருந்த மற்ற மீனவர்கள் அதை விற்றால் எவ்வளவு செல்வம் கிடைக் கும் என்று கணக்குப் போட்டார்கள். திரும் பக் கடலில் விடக்கூடாது என்று தடுத்தார் கள். ஆனாலும் அதிபத்தர் தம் விரதத்தி லிருந்து பிறழவில்லை. மீனைக் கடலில் எறிந்து விட்டார்.

வறுமையில் வாடியபோதும், பல நாட்கள் உணவில்லாமல் வருந்தியபோதும் தன் உறுதியிலிருந்து தளராமல் ஈசனுக்கு அர்ப் பணித்து வந்ததால் அதிபத்தரின் அன்புன் னத்தையும் பக்தியையும் ஏற்றுக் கொண்டார் ஈசன். ரிஷபத்தின் மீது கருந்தடங்கண்ணி யோடு காட்சியளித்து அதிபத்தருடைய வழித் தோன்றல்களும் மேன்மையுற வாழ்வார்கள் என்று வரம் கொடுத்து பக்தருக்கும் முக்தி யளித்தார்.

குருக்கள் சொன்ன இந்தக் கதைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த போது மழை கொட்டிக் கொண்டிருந்தது. சோவென்ற மழையின் ஓசையும், பிராகாரத் தில் தண்ணீர் ஓடும் ஓசையும் மழைக்கால இருட்டும் ஒரு கனவுலகத்தில் சஞ்சரிப்பது போல இருந்தது.



• காயாரோஹணர் ஆலயம்

நாகையின் முக்கியமான சிறப்பு என்ன வென்றால் பிரளய காலத்தில் எல்லா மூர்த்தி களும் இங்கு வந்து தங்கினார்கள் என்பது தான். அப்போது சிவபெருமான் அனைத்து உயிர்களையும் தம்முள் அடக்கிக் கொண் டாராம்.

புண்டரீக மகரிஷி காஞ்சிபுரத்திலும் கும்பகோணத்திலும் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வழிபட்டும் ஈசன் காட்சியளிக்க வில்லை. பிரளய காலத்தில் எல்லா உயிர் களையும் தமக்குள் சேர்த்துக் கொள்கிற பெருமான் நாகையில் அவரைத் தம்முள் அடக்கிக் கொண்டார் என்பது வியப்பில்லை தானே! அந்த காயாரோஹணரின் தலையில் நம் மனமும் அடங்கிக் குவிகிறது.

படங்கள் : **யோகா**

✉ மதச் சார்பின்மையென்ற போர்வையில் பசுத்தோல் போர்த்த புலியாக இரட்டை வேடம் போட்டு மக்களை ஏமாற்றிக் கொண்டிருக்கும் பி.ஜே.பி.யின் பித்தலாட்டத்தைக் கண்டித்து குஜராத் மாநில அரசு ஊழியர்களை ஆர்.எஸ். எஸ்ஸின் ஏஜெண்டுகளாக்குவதை அம்பலப்படுத்தும் தங்கள் தலையங்கம், தேசிய முக்கியத்வம் வாய்ந்தது!

இனாம் மணியாச்சி, ச.ஆ. கேசவன்.

✉ 'உணவு ஸ்பெஷல்' என்ற பெயரில் வாசகர்களுக்கு உணவுக் கட்டுப்பாடு, மருத்துவம் போன்றவற்றையும் தெரிவித்திருக்கிறீர்கள். உடல் நலம் விரும்புவோருக்குப் பயனுள்ள இதழ்.

சிதம்பரம், எஸ். சாந்தி.




✉ மாட்டுப் பால் குறித்து டாக்டர் நீல் பர்னார்ட் சொன்ன விஷயங்கள் அதிசயமாகவும் சிந்திக்கத் தூண்டும் விதமாகவும் இருந்தன.

சாத்தியாகுளம், க. பாக்யமலர்.

# இனிப்பு நெய்ப் பொங்கல்!




✉ சூப்பர் கற்பனையாய், இலங்கையை வெடிகுண்டுபோல் கார்ட்டூனாக்கிக் காட்டியமைக்கும் அறுசுவைக் கதைகள் ஆறின் அருமைக்கும் ஒரு கட்டுக் கரும்பு பரிசு தரலாம். 'பொங்கல் சிறப்பிதழ்' இரண்டும் இனிப்பு நெய்ப் பொங்கல்!

திருவண்ணாமலை, எல்.எம். மங்கை.

✉ கொடுமையிலும் கொடுமை 'சேது' திரைப்பட விமர்சனம். தமிழ்நாட்டிலுள்ள எல்லா பத்திரிகைகளும் படத்தையும், இசையையும் பாராட்டி எழுதும்போது தாங்கள் மட்டும் 'அதிமேதாவித்தனமாக' விமர்சனம் எழுதி இருந்தீர்கள்!

தஞ்சாவூர், க. ராஜா.

✉ வாழ்ந்து முடிந்த வள்ளுவரை வாழ்த்துவதைவிட, 'வாழும் கால வள்ளுவரை' வாழ்த்தினால், புகழ்ந்தால் வாழ ஏதேனும் ஒரு வழி வகை ஏற்படுமே? நீங்களே பாருங்கள்! விழாவில் எவ்வளவோ விஷயம் நடந்து இருக்க கலைஞர் புகழ் படலத்தை மட்டும் இரு பக்கங்களுக்கு வெளியிட்டு, நீங்களும் புகழ் பாடி விட்டீர்களே!

சர்க்கார்பதி, பி. ஜெயப்பிரகாஷ்.

✉ ஆங்கிலக் கல்வியால் நமது (தமிழ்ப்) பண்பாடே கெட்டுப் போகும் என்பது மிகை. தமிழ் மொழியே போதிக்கப்பட்டாலும் உருப் போட வேண்டிய வார்த்தைகளை உருப்போட்டுத்தான் ஆக வேண்டும். ழ, ல, ள போன்ற எழுத்துக்களின் உச்சரிப்புக் கோளாறுகளும், எத்தனையோ இடையூறுகளை விளைவிக்கின்றன. சட்டத்தினால் எந்த ஒரு மொழியையும் வளர்த்து விட முடியாது.

தஞ்சாவூர் -2, ஆடுதுறை ஜி. ராமதாஸ்.

✉ ஐந்தாம் வகுப்பு வரை தமிழ் வழிக் கல்வி என்ற சட்டம் தனி மனித உரிமையைப் பாதிக்கவில்லை என நன்னன் கூறுவது விநோதமாக இருக்கிறது. அரசியல் பிரமுகர்கள், எம்.எல்.ஏ, எம்.பி தேர்தலில் நிற்பதற்குத் தகுதியாக இரண்டு குழந்தைகள் மட்டும் இருக்க வேண்டும் எனச் சட்ட முன்மொழிவு பிரதமர் கொண்டு வருவதை அரசியல்வாதிகள் எதிர்க்கிறார்களே! மேலும், நவீன உலகில் ஆங்கில வழி ஆரம்பக் கல்விக்குத் தடையா! வெளி நாட்டவரான வீரமா முனிவரும் ஜி.யு. போப்பும் படித்து மகிழ்ந்த தமிழை இவர்கள் கட்டாயமாக்கி வளர்க்க வேண்டிய அவசியம் என்ன?

குளித்தலை, ஆர்.எஸ். மூர்த்தி.

✉ விஜயனும் பேராசிரியர் நன்னனும் நிகழ்த்திய உரையாடல் படித்தேன். எந்த ஒரு சட்டமும், மக்களால் அதன் ஆரம்ப நிலையில் ஏற்றுக் கொள்ளப்பட்டதாக வரலாறு இல்லை. சில எதிர்ப்புகளை சந்தித்த பின்னரே அவை ஏற்றுக் கொள்ளப்பட்டன. தமிழ் வழிக் கல்வி குறித்த சட்டமும் ஆரம்பத்தில் எதிர்க்கப்படுகிறது. ஆனால் 5ஆம் வகுப்பு வரை அடிப்படை தமிழ்க் கல்வி கட்டாயம் வேண்டும்!

சென்னை – 2, வ. தமிழ்ச் செல்வன்.

# மனிதநேயம் மிக்க மாமனிதர்!

பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்தில், எம்.ஏ. சிதம்பரம் அவர்கள் டாக்டரேட் பெற்ற அன்று, ஊழியர்கள் சார்பில் ஒருவர் சுமார் 300 ரூபாய் விலையுள்ள மாலையை அவருக்கு அணிவித்தார். மறுநாள் அவர் சென்னை திரும்பியதும் பல ஊழியர்கள் அவருக்கு மாலை அணிவித்து, தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ள இருப்பதையும் தெரிவித்தார். "எதற்கு வீணாக மாலைக்குச் செலவு செய்கிறீர்கள்? இந்த ஒரு மாலையே போதும். போட்டு விட்டீர்கள் அல்லவா? அப்படியே திரும்பக் கொண்டு போய், நாளை அவர்கள் போடலாம். நான் ஏற்றுக் கொள்கிறேன்!" என்றார் அன்புடன்.

● சிதம்பரம் கோயிலில் பூசையும் அர்ச்சனையும் செய்து எம்.ஏ.சி. வீட்டுக்குப் பிரசாதம் கொண்டு வருவார்கள். சில சமயம், அவருடைய தோப்பிலிருந்து தேங்காய்களை லாரியில் ஏற்றிக் கொண்டு டிரைவர் வருவார். இப்படி யார் வந்தாலும், இரவில் எந்த நேரத்தில் வந்தாலும் பொறுப்பான ஒருவரிடம் சொல்லி, அவர்கள் வந்தவுடன் முதலில் சாப்பிடச் செய்து, பால் குடித்து விட்டு, சௌகரியமாகப் படுத்துத் தூங்க வசதி செய்து கொடுக்கச் சொல்லுவார். அவர்களுக்கு எல்லாம் கிடைத்ததா என்று மறுநாள் விசாரித்துத் தெரிந்து கொள்ளுவார்.

● வீட்டு விசேஷங்களின்போதும் சரி, கம்பெனி விழாக்களின்போதும் சரி, தமது மற்ற விருந்தினர்களுக்கு என்ன உணவு வழங்கப்படுகிறதோ, அவை தமது காரோட்டிகளுக்கும், தமது அலுவலக அதிகாரிகளின் டிரைவர்களுக்கும் கிடைக்க வேண்டும் என்று மிகுந்த அக்கறை காட்டுவார்.

● எந்த ஊழியரின் வீட்டுத் திருமணத்துக்கும் அவர் போகாமல் இருந்ததே கிடையாது.

● செல்ஃபோன் அறிமுகமானபோது, அவருக்கு ஒன்று கொடுத்தார்கள். கால் சார்ஜ் எத்தனை என்று கேட்டுக் கொண்டார். 'டெலிபோனில் ஒரு ரூபாய்தானே ஆகிறது? எதற்கு அனாவசியமாக எட்டு ரூபாய் செலவழிக்கணும்?' என்று மறுத்து விட்டார். பின்னர் அவருக்குக் கார் பயணங்களின் போது உதவக் கூடும் என்று வற்புறுத்திய பிறகே, தயக்கத்துடன் சம்மதித்தார். இப்போதும், முக்கியமான மூன்று - நான்கு அதிகாரிகளுக்கு மட்டுமே செல்ஃபோன்!

● ஸ்பிக் காலண்டர்களில் தெய்வீக உருவங்களைத்தான் இத்தனை வருடங்களாகப் போட்டு வருகிறோம். அதை எந்த வருடமும் மாற்றக் கூடாது என்று பிடிவாதமாக இருப்பார்.

● கான்டீனில் ஊழியர்களுக்குக் கொடுக்கப்படும் காப்பி கப்பின் அளவைப் பார்த்து விட்டு, 'இது எப்படிப் போதும்? கப்பை பெரிய சைசுக்கு மாற்றுங்கள்!' என்று சொல்லி விட்டார். அதே போல், கான்டீனில் மதிய உணவின் போது வழங்கப்படும் கறி-கூட்டு முதலியவற்றையும், 'ஏன் லிமிடெட்டா கொடுக்கணும்? தனியே இவற்றை பக்கெட்டுகளில் வைத்து, கரண்டியும் போட்டு விடுங்கள்.



அவர்களுக்குத் தேவையான அளவு போட்டுக் கொள்ளட்டும்!' என்று சொல்லி விட்டார்.

● காரில் வீடு திரும்பும்போது, ஊழியர்களைக் கவனித்து விடுவார். ஒரு தடவை, 'ராமய்யா முகம் என்னவோ மாதிரி இருந்துதே? நேத்து நல்லாத்தானே இருந்தான்? வீட்டுல யாருக்காவும் உடம்பு சரியில்லையாமா? விசாரி. நான் கேட்டால் சொல்ல மாட்டான். யார் மூலமாவது போனில் கூப்பிட்டு பையனை விசாரிக்கச் சொல்லு!' என்றார். அருகில் இருக்கும் அதிகாரி விசாரித்து, 'ஆமாம். அவன் மனைவிக்கு உடம்பு சரியில்லையாம். ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கானாம். இரண்டாயிரம் ரூபாய் செலவு ஆகுமாம்!' என்று தெரிவித்தார். 'பையன் வருகிறானா, அம்மாவைக் கவனித்துக் கொள்கிறானா என்று கேள். இதோ, இரண்டாயிரம் ரூபாய். அவனிடம் கொடுத்து விடு!' என்றார். ஓர் ஊழியர் வாய் விட்டுக் கேட்கக் காத்திராமல் இப்படி உதவும் போது, முதலாளியை அவ்வூழியர் மனிதனாக நினைப்பாரா, தெய்வமாக நினைப்பாரா?

- அண்மையில் காலமான எம்.ஏ. சிதம்பரம் பற்றி ஸ்பிக் நிறுவன அதிகாரிகள் எம். சங்கர், எம். ராஜாமணி, கே. மகாதேவன் ஆகியோர் கூறிய தகவல்கள்

தொகுப்பு : **எஸ்.வி.என்.**

# நடக்கும் என்பார்; நடக்கும்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

முக்கியமான சில திட்டங்கள் நிறைவேற சந்தர்ப்பம் கூடி வருது. நீங்க செய்ய வேண்டியதெல்லாம் தீவிரமான பொறுமையைக் கடைப்பிடிக்கறதுதான். தப்பித் தவறி உங்க ரகசிய திட்டங்களை வெளில விட்டுடாதீங்க. எதிர்ப்புகள் எழுந்தாலும் சைலன்டா இருந்துடுங்க. இந்த வாரம் அளவுக்கதிகமான சங்கடங்களும் குழப்பங்களும் வந்தாலும் நீங்க கடைப்பிடிக்கிற பொறுமைக்கேற்ப நற்பலன்கள் உருவாகும். வெளியூர்ப் பயணம் ஏதும் இப்ப வேணாம்.



**ரிஷபம்** : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

உங்க டேக் ஆஃப் இப்ப ஆரம்பிக்குது. திட்டங்கள் பிரமாதமா செயல்படத் தொடங்கும். ஆனா உங்க மாஸ்டர் பிளான் பத்தி வெளில மூச்சு விடாதீங்க. வீட்டுலயும் ஆபீஸ்லேயும் இதுவரை இருந்து வந்த பிரச்னைகள் இப்ப விலகிடும். அமைதியும் நிம்மதியும் கூடும். எதிரிகளும் நண்பர்களாக மாறும் சூழ்நிலை ஏற்படும். கடுமையா உழைச்சா, இப்ப நல்ல பலன் உண்டு. பண விஷயத்துல பிரச்னை இருக்காது.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)*

பொருளாதார முன்னேற்றமும் வாழ்க்கை வசதிப் பெருக்கமும் இப்ப ஏற்படும். அதேசமயம், ஆழம் தெரியாம காலை விட்டு அவஸ்தைப் படற மாதிரி ஏதாவது சம்பவம் நடக்கலாம். வீட்டுல சிறு பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். மின்சாரம், எலக்ட்ரானிக்ஸ் சம்பந்தப்பட்ட துறைல இருக்கறவங்க சிறு விபத்துகளை எதிர்பார்த்து, எச்சரிக்கையா இயங்க வேண்டியது அவசியம். பெண்களுக்கு உத்தியோக உயர்வோ, பரிசுகளோ - ஏதாவது கிடைக்கும்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உங்க திறமை முழுசா வெளிப்படற வாரம் இது. செயற்கரிய சாதனைகள் ஏதாவது செய்து, மேலதிகாரிகள் வியப்படையற மாதிரி நடந்துக்குவீங்க. கலைஞர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் ரொம்ப உற்சாகமான நேரமா இருக்கும். பதவி உயர்வு எதிர்பார்ப்பவர்களுக்கு இப்ப காலம் கனியும். பெண்களுக்குத் திருமண யோகம் இருக்கு. அதேசமயம் உறவுக்காரங்களோட சிறு மனஸ்தாபங்கள் ஏற்பட்டு, வீட்லே கொஞ்சம் கஷ்டம் உருவாகலாம். பணப் பிரச்னை இருக்காது. இரவுப் பயணங்களைத் தவிர்க்கறது ரொம்ப நல்லது.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

அரசியல்ல இருக்கறவங்களுக்கு இது முக்கியமான வாரம். சூரியனோட பரிபூரண ஆசி இருக்கறதால உங்க பராக்கிரமம் வெளிப்பட்டு, அமோகமான ஆதரவு - மக்களிடமும் கட்சிக்காரர்களிடமும் உண்டாகும். எதிரிகள் காணாம போயிடுவாங்க. வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். அதே சமயம், எடுத்தெறிஞ்சி பேசற குணத்தால பலர் அற்புதமான நண்பர்களையோ, அரிய வாய்ப்புகளையோ இழப்பாங்க. பெண்களுக்கு இது 'ஓஹோ' டைம்! ஆனா, சிறு விபத்துகளுக்கும் பண இழப்புக்கும் வாய்ப்பு அதிகம்.

**கடக ராசிக்காரரான எஸ்.வி. சேகரின் திறமை முழுசா வெளிப்படுகிற வாரமாம் இது!**



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

சிக்கனமா இருக்க வேண்டியது ரொம்ப முக்கியம். பணம் கண்ணுக்குத் தெரியாம கரைகிற நேரம் இது. சுப காரியங்களுக்குச் செய்யற செலவு ஒரு பக்கம்னா, ரேஸ் - லாட்டரின்னு இழக்கறதையாவது தவிர்க்கலாமில்லையா? இப்ப உங்க நல்ல திட்டங்கள் வெற்றி அடையற நேரம் வந்திருக்கு. வங்கிக் கடனோ, நண்பர்கள் உதவியோ, கேட்டதும் கிடைக்கும். பெண்கள் மட்டும் கொஞ்சம் எச்சரிக்கையா இருக்கணும்.

## அக்னிசர்மா பக்கம்





**துலாம் :** (சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)

வெளிநாடு போகிற வாய்ப்பு கூடி வரும். குறிப்பா கம்ப்யூட்டர் துறையினருக்கு இந்த அதிர்ஷ்டம் அதிகமா இருக்கும். வங்கிப் பணியாளர்கள், பிற அரசு அலுவலர்களுக்குச் சில சங்கடங்கள் நேரும். கணக்கு வழக்கு பார்க்கிறவங்க, எச்சரிக்கையா இருங்க. பெண்களால் சில சங்கடங்கள் உண்டாகலாம். அதேசமயம் நீங்க பேச்சுல கவனமா இருக்க வேண்டியதும் அவசியம். வியாபாரிகளுக்கு இது நல்ல பலன்கள் சேரும் நேரம். ஆனா, வீண் அலைச்சலையோ, பண விரயத்தையோ தவிர்க்க முடியாது.



**விருச்சிகம் :** (விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)

சுக்கிரன், புதன், கேது - மூணுமே சாதகமா இருக்கறது ரொம்ப விசேஷம். உங்க எண்ணங்கள் சுலபமா ஈடேறும். பேச்சாற்றல் கூடி பல காரியங்களை சுலபமா சாதிப்பீங்க. பண நடமாட்டம் தாராளமா இருக்கும். சிலருக்கு திடீர் அதிர்ஷ்டமும் அடிக்கலாம். வியாபாரிகளுக்கு லாபம் கூடக் கிடைக்கும். கணிதம், எழுத்துத் துறையினருக்குப் புகழ் கூடும். மனைவி வழில சில பூர்வீக சொத்துக்கள் கிடைக்கவும் வாய்ப்பிருக்கு.



**தனுசு :** (மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)

செல்வாக்கும் மதிப்பும் குப்புனு உயரப் போவுது. பல முக்கியமான காரியங்கள், நீண்ட நாள் திட்டங்கள் இப்ப நிறைவேறும் - நண்பர்களும் உறவினர்களும் தக்க சமயத்துல உதவுவாங்க. வியாபாரிகளுக்குப் புதிய ஒப்பந்தங்கள் ஏற்படும். விவசாயிகளுக்கு இது பொற்காலம்னே சொல்லலாம். ஆனா, வெளியூர்ப் பயணங்களால லாபம் இருக்காது. நிறைய அலைச்சலும் குறைவான பலனும்தான் ஏற்படும். மருத்துவர்கள், கல்வியாளர்கள் போன்றோர் புகழும் செல்வமும் கூடப் பெறுவார்கள். பெண்களுக்குச் சில உடல் நலக் கோளாறுகள் ஏற்படும் வாய்ப்பிருக்கு.



**மகரம் :** (உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)

சங்கடமான நேரம். எதிலும் அகலக் கால் வெக்காதீங்க. தடைகளும் குறுக்கீடுகளும் எந்தப் பக்கத்துலேருந்து வரும்னே சொல்ல முடியாது. நண்பர்களை நம்பி முக்கிய பொறுப்புகளை விடாதீங்க. எந்தக் காரியத்தையும் ஒருமுறைக்கு ரெண்டு மூன்று முறை தீர யோசிச்சே செய்யுங்க. வீட்டுல சில சண்டைகள் மூளலாம். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க. பெரியவங்களை எதிர்த்துப் பேசாதீங்க. வழக்குகளுக்கு மரியாதையா இப்ப வாய்தா வாங்கிடறது நல்லது.



**கும்பம் :** (அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)

நண்பர்களால சில எதிர்பாராத உதவிகள் தக்க நேரத்துல கிடைக்கும். அநேகமா அது பொருளுதவியா இருக்கும். புதிய தொழில் தொடங்க யோசிக்கிறவங்களுக்கு இது ஆதாயமான நேரம். அதே சமயம் குடும்ப உறவுகள்ல கொஞ்சம் சிக்கல் வர வாய்ப்பிருக்கு. யாரையும் புண்படுத்தற மாதிரி பேசாதீங்க. அக்கம் பக்கத்துக்காரங்களோட சண்டை போட்டுப் பேரைக் கெடுத்துக்காதீங்க. வீடு, மனை வாங்க/விற்க இது சரியான நேரமில்லை. வெளியூர்ப் பயணங்கள் சிலருக்கு இருக்கும். ஆனா உணவு விஷயத்துல எச்சரிக்கையா இருங்க.



**மீனம் :** (பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

சாமர்த்தியமா காரியங்களை சாதிச்சிக்கறதுல கில்லாடி நீங்க. இந்த வாரம் பல பழைய கடன் பாக்கிகளை வசூல் பண்ணிடுவீங்க. சிலர் லீவ் போட்டுட்டு வெளியூர் உலா போகவும் வாய்ப்பிருக்கு. ஆன்மிகத் துறையினருக்கு இது ஆதாயமான காலகட்டம். பெண்களால் சிலருக்கு ஆதாயம் ஏற்படும். வீடு வாங்கற யோகம் உண்டாகும். ஆனா, வாகனப் பயணத்துல எச்சரிக்கை அவசியம். பிக்பாக்கெட்ல பொருள் இழக்கவும் வாய்ப்பிருக்கு. ●

**ஜனவரி 26 முதல் பிப்ரவரி 1 வரை**

# இன்டர்வ்யூ



இன்டர்வியூவுக்கு மொத்தம் ஐந்து பேர் வந்திருந்தார்கள். பி.ஆர்.ஓ. வேலை. பெரிய இன்டர்நேஷனல் கம்பெனி. அதில் இரண்டு பேர் பெண்கள். மாடலிங் தொழிலுக்கு வந்தவர்கள் போன்ற கெட்-அப்பில் அமர்ந்திருந்தார்கள்.

பாஸ்கரனும் அந்த ஐந்து பேரில் ஒருவனாய் அமர்ந்திருந்தான். என்னென்ன கேள்வி கேட்பார்களோ என்று எம்.டி. அறையையே கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.



பாஸ்கரனுக்கு பெரிய அனுபவம் ஒன்றும் இல்லை. இரண்டு வருடங்கள் ஒரு மருந்துக் கம்பெனியில் ரிசப்ஷனிஸ்டாக வேலை பார்த்திருக்கிறான். எனினும் புதிதாய் ஏதேனும் கேட்டு விட்டால் என்ன பண்ணுவது என்று பொது அறிவு மற்றும் கம்ப்யூட்டர் சம்பந்தப்பட்ட விஷயங்கள் ஓரளவுக்குப் பார்த்து வைத்திருந்தான்.

முதலில் ஒரு பெண் அழைக்கப்பட்டாள்.

"மிஸ் ஸ்வாதி."

ஸ்வாதி எழுந்து சென்றாள். அழகிப் போட்டியின் போது ஒரு 'கேட் வாக்' நடந்து காட்டுவார்களே அப்படியொரு நடை. உள்ளே எத்தனை பேர் சொக்கி விழப் போகிறார்களோ தெரியவில்லை. பாஸ்கரனுக்கு அவளது அழகு வசீகரமாக இருந்தாலும் உள்ளே யாரும் சபலநாதர்கள் இருந்து விடக்கூடாது என்று கவலையாக இருந்தது.

உள்ளே சென்ற ஸ்வாதி ஐந்து நிமிடத்திற்கெல்லாம் சிரித்த முகத்துடன் வெளியே வந்தாள். அடென்டர் அவளை இன்னொரு பக்கமாய் இருந்த ஓர் அறைக்குள் அமரச் சொன்னான். அவள் அசால்டாய் வெளியே வந்த விதத்தைப் பார்த்த எல்லோருக்கும் ஏமாற்றம். ஏறக்குறைய தேர்வு முடிந்து விட்டது போல் நினைத்தார்கள். அடுத்து ரவீந்திரன் என்ற பெயர் அழைக்கப்பட்டது. அவனும் சரியாக ஐந்து

நிமிடத்தில் வெளியே வந்தான். ஆனால் அவன் முகத்தில் திருப்தியின் அறிகுறி கடுகளவும் இல்லை. அவனும் ஸ்வாதி இருந்த அறைக்குச் சென்று அமர்ந்தான்.

அடுத்து மாலினி, பூபேஷ்.

கடைசியாக பாஸ்கரன் அழைக்கப்பட்டான். உள்ளே மூன்று பேர் அமர்ந்திருந்தார்கள். நடுவே முன் வழுக்கையுடன் அமர்ந்திருந்தவர் டைரக்டராக இருக்க வேண்டும். மற்றவர்கள் துணை இயக்குநர்களாகவோ மானேஜர்களாகவோ இருக்கலாம். கேள்விகள் ஒன்றும் பெரிதாகக் கேட்கப்படவில்லை. சாதாரணமானவை. இன்டர்வியூ என்ற பயமே வராதபடிக்கு சிநேகமாய்ப் பேசினார்கள்.



சர்டிபிகேட் எல்லாம் பார்த்து முடிந்ததும் திருப்பித் தந்து விட்டார்கள்.

"ஓகே. ஒரு கால் மணி நேரம் வெளியே காத்திருங்கள். பிறகு தெரிவிக்கிறோம்" என்றார் டைரக்டர்.

பாஸ்கரனும் வெளியே வந்து மற்ற நால்வரும் அமர்ந்திருந்த அறைக்கு வந்து அமர்ந்தான். அவன் அங்கு சென்று அமர்ந்த போது எல்லோரும் இன்டர்வியூ பற்றித் தத்தம் அபிப்ராயங்களை பரிமாறிக் கொண்டிருந்தார்கள்.

"இப்படியா இன்டர்வியூ இருக்கும்? இது ஜஸ்ட் ஐ வாஷ்" என்றான் பூபேஷ்.

"அப்படி இருக்காது. இது ஒரு ப்ரிலிமினரி ஸ்க்ரீனிங்னு நினைக்கிறேன். ஃபைனல் இன்டர்வியூக்கு மறுபடியும் கூப்பிடுவாங்கன்னு நினைக்கிறேன்" - இது மாலினி.

''ஏற்கெனவே முடிவாயிடுச்சு பாஸ். சும்மா டைம் பாஸுக்காக கூப்பிட்டிருக்காங்க. ஹெட் ஆபீஸுக்கு ரிப்போர்ட் அனுப்பணும் இல்லையா? அதான் ஒரு சின்ன நாடகம் மாதிரி செட்-அப் பண்ணிட்டானுங்க."

''எனக்கும் நம்பிக்கையில்லை. சரி வெயிட் பண்ணிப் பார்ப்போம்'' என்றான் ரவீந்தரன்.

## மதுமலோ

பாஸ்கரன் எந்த முடிவுக்கும் வர முடியாமல் அனைவரையும் அமைதியாய் பார்த்துக் கொண்டிருக்க, ஸ்வாதி மட்டும் வாய் திறக்காமல் அனைவரையும் கர்வமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளிடம் அங்கலாய்ப்போ எந்தவித பதற்றமோ இல்லை. கையில் பெமினா வைத்து புரட்டிக் கொண்டிருந்தாள்.

கால் மணி நேரம் கழித்து அடென்டர்

வந்தான். யார் பேரை அழைக்கப் போகிறான் என்று அனைவரும் சஸ்பென்ஸாய் பார்க்க,

"நீங்கள் எல்லோரும் போகலாம். தகவல் தபாலில் வரும்" என்றான்.

எல்லோருக்கும் கடுப்பாயிற்று. வீணாய் எதற்காகக் காத்திருக்கச் சொன்னார்கள் என்று முனகிக் கொண்டே வெளியேறினார்கள்.

சரியாகப் பத்து நாட்கள் கழித்து பாஸ்கரனுக்கு அந்த இன்டர்நேஷனல் கம்பெனியிலிருந்து அழைப்பு வந்தது.

'நீங்கள் தாற்காலிகமாக வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்' என்று ஆரம்பித்து ஏழாயிரம் ரூபாய் சம்பளம் மற்றும் அலவன்ஸ் போன்ற விவரங்களுடன் அலுவலகத்திற்கு வரச் சொல்லி ஒரு தேதி குறிப்பிட்டிருந்தது.

பாஸ்கரனுக்கு பெரும் மகிழ்ச்சியாகவும், த்ரில்லாகவும் இருந்தது.

ஸ்வாதி என்ன ஆனாள்? அவளை விட்டு விட்டு ஏன் என்னைத் தேர்ந்தெடுத்தார்கள்? ஒருவேளை அவளும் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பாளோ? என்று பல்வேறு கேள்விகள் மனசில் அலைமோதின. அபாயின்ட்மென்ட் ஆர்டருடன் பாஸ்கரன் அந்தக் கம்பெனி அலுவலகத்தை அடைந்தான். மானேஜர் அவனது கடிதத்தைப் பார்த்ததும் முதலில் வாழ்த்துக்களை தெரிவித்தார்.

"கன்கிராட்ஸ் மிஸ்டர் பாஸ்கரன். இதே வாடையில போனா ரூம் நம்பர் பதினைஞ்சு வரும். அங்கே ஒரு ரிப்போர்ட் ஷீட் தருவாங்க. வாங்கிட்டு டைரக்டரைப் போய்ப் பாருங்க."

"தேங்க்யூ சார்."

அவர் சொன்ன அறை நான்கு அறைகளுக்குத் தள்ளியிருந்தது. கதவில் 'பர்சனல் அனலைஸர்' என்ற எழுத்து பொறிக்கப்பட்டிருந்தது.

கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றவனுக்கு வியப்பு காத்திருந்தது.

உள்ளே ஸ்வாதி!

பரந்த மேஜைக்குப் பின்னே இருந்த ஒரு ஆடம்பர 'அப்ஹோல்ஸ்ட்ரி'யில் அமர்ந்திருந்தாள். முறுவலிப்புடன் அவனை வரவேற்றாள்.

"வெல்டன் மிஸ்டர் பாஸ்கரன். ப்ளீஸ் டேக் யுவர் சீட்."

கண்ணில் பிரமிப்பு அகலாமல் அவளையே பார்த்தபடி அவன் அமர அவள் அதைப் புரிந்து கொண்டவளாய் விளக்க ஆரம்பித்தாள்.

"ரொம்ப சர்ப்ரைஸ் ஆயிட்டீங்க இல்லை? என்ன நம்மோட இன்டர்வியூக்கு வந்த ஸ்வாதி இதுக்குள்ள இங்கே உட்கார்ந்திருக்காளேன்னு. இன்பாக்ட் ஐ'ஆம் நாட் ஸ்வாதி. என் பேர் விசாலி. உங்க எல்லோருடைய அப்ரோச் எப்படியிருக்குன்னு தெரிஞ்சுக்கத்தான் உங்கள்ல ஒருத்தியா இன்டர்வியூக்கு வந்த கேன்டிடேட் மாதிரி ஆக்ட் பண்ணேன். இன்டர்வியூ நடக்கிறதுக்கு முன்னாலயும், நடந்த பின்னாலயும் நீங்க மத்தவங்க மாதிரி நம்பிக்கை இழந்து மனசை அலைய விடலை. அது ஒரு ப்ளஸ் பாயின்ட்."

"நான் ஒரு விஷயம் கேட்கலாமா?"

"தாராளமா."

"இன்டர்வியூல சப்ஜக்ட் சம்பந்தமா எந்தக் கேள்வியும் கேட்கலை. அப்படி இருந்தும் என்னை மட்டும் எப்படி செலக்ட் பண்ணீங்க?"

"விஷயம் இருக்கு."

விசாலி மேஜை மீதிருந்த ஒரு பைலைத் திறந்து அதிலிருந்து ஒரு கம்ப்யூட்டர் ரிப்போர்ட்டை எடுத்துக் காண்பித்தாள்.

"மிஸ்டர் பாஸ்கரன். இன்டர்வியூல சப்ஜக்ட் விஷயமா கேள்வி கேட்கும் போது தயாரா படிச்சுக்கிட்டு வந்ததை அப்படியே கொட்டிடுவாங்க. ஆனா இந்தக் கம்பெனிய பொறுத்தவரை படிப்பறிவை விட பகுத்தறிவுதான் முக்கியம். ஸோ உங்க பொது வாழ்க்கையில நீங்க எப்படிச் செயல்படறீங்கன்னு கண்காணிக்க டிடக்டிவ் ஏஜென்ஸி மூலமா எல்லா 'கேன்டிடேட்'களுக்கும் ஆளை அனுப்பி வைச்ச மாதிரி உங்க விலாசத்துக்கும் ஒரு ஆளை அனுப்பி வைச்சேன். மூணு நாள் அவர் உங்களுக்குத் தெரியாம கண்காணிச்சு அனுப்பி வைச்ச ரிப்போர்ட் தான் இது. நீங்க பொறுமையானவர். லேசுல கோபப்படாதவர், முயற்சி செய்கிற மனவலிமையும், சுயமா எதையும் கேட்டுத் தெரிஞ்சுக்கிற ஆர்வமும் உள்ளவர்னு... இப்படி நிறைய அனலைஸ் பண்ணியிருக்கோம். நீங்க எல்லாத்திலேயும் 'அபவ் ஆவரேஜா' இருக்கீங்க. கன்கிராட்ஸ்! நீங்க இப்ப எம்.டி.யை பார்க்கலாம்!"

பாஸ்கரன் எழுந்து கொண்டான். அவன் முகத்தில் பிரமிப்பு மட்டும் இன்னும் அப்படியே இருந்தது.




இது வரை கண்டிராத மாயா ஜால தந்திரக் காட்சிகள் நிறைந்த ஜாலியான தொடர்.

சித்தர் மலையில் 2000 ஆண்டுகளாக வாழும் ஜிங்கலன் என்ற சித்தர் கர்ணனின் கவசத்தையும், ஆயுதங்களையும் தகுந்த ஒருவரிடம் ஒப்படைப்பதற்காக பாதுகாத்து வருகிறார். மூன்று குள்ளர்களும் அந்த மலையில் வசிக்கிறனர். அருகில் உள்ள மிதிலாபுரத்தில் மாரகன் என்ற மந்திரவாதி தனது மந்திர சக்தியினால் மக்களை துன்புறுத்தி வருகிறான். அவனிடம் பிடிபடும் ஒரு குள்ளன் உயிருக்குப் பயந்து சித்தரிடம் உள்ள கவசத்தைப் பற்றி அவனிடம் கூறிவிடுகிறான். அதைக் கைப்பற்ற வரும் மாரகனுக்கும், சித்தருக்கும் நடைபெறும் மந்திர தந்திரப் போரில், சித்தர் அருகில் உள்ள பாண்டவபுரத்தை சேர்ந்த அப்பாவி சுயம்புவால் காப்பாற்றப்படுகிறார். சுயம்புவின் நல்ல உள்ளத்தை அறிந்த சித்தர், அவனுக்கு மந்திர தந்திரங்கள் கற்றுக் கொடுப்பதுடன், கவசத்தையும் அளிக்கிறார். சுயம்பு கவசம் அணிந்த உடன் மறையும் 'மாயா' என்ற வீரனாகி அநீதியை எதிர்த்து தனது போராட்டத்தை தொடர்கிறான்.

சித்தர் மலைக்கு மூலிகைகள் பற்றி எழுத வந்த பத்திரிகை நிருபர் நிவேதிதா சுயம்புவின் அப்பாவித்தனத்தால் ஈர்க்கப்படுகிறாள். ஆனால் சுயம்புதான் மாயா என்று அறியாமல் மாயாவை நேசிக்கிறாள். நிவேதிதாவை நேசிக்கும் சுயம்பு தனது காதலை வெளிப்படுத்த முடியாமல் தவிக்கிறான். விடை சின்னத்திரையில்.

*நடிப்பு :* நாகேந்திர பிரசாத் (பிரபு தேவாவின் தம்பி) ஸ்வர்ணா, காந்திமதி.

*இயக்கம் :* பி.ஆர். விஜயலக்ஷ்மி




**விஜய் டி.வியில் அக். 27 முதல் ஒவ்வொரு புதன்கிழமையும் இரவு 8.00 மணிக்கு**

- ADVT -

**பி**ரணவத்தைச் சொன்னால் அந்த பகவான் விஷ்ணுவைச் சொன்னதாகிறது. பிரணவம் ஜபிக்க சில நியமங்கள் இருக்கின்றன. ஆனால் வால்மீகி ராமாயணத்திலே ஆரண்ய காண்டத்திலே வருகிற இந்த சுலோகத்தைச் சொன்னால் பிரணவத்தைச் சொன்ன பலன்! (அக்ரத: ப்ரயயௌவ் ராம : என்ற சுலோகம்)

இந்த சுலோகத்தை எப்போது வேண்டுமானாலும் எத்தனை நாழி வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டேயிருக்கலாம். அப்படி வால்மீகி நம் மீதுள்ள காருண்யத்தினாலே ஏற்படுத்தியிருக்கிறார்.

'நடந்து செல்லக்கூடிய கற்பக விருக்ஷமாய், வேண்டியதையெல்லாம் தரக்கூடிய அந்த எம்பெருமான் பிரணவத்திலே உட்கார்ந்து கொண்டு சஞ்சாரம் பண்ணுகிறானே! அவன் அழகைப் பாருங்கள்' என்கிறது ரகுவீர கத்யம்.

ஆகையால் அப்படிப்பட்ட எம்பெருமானிடத்தில், பிரணவ ரூபியாய் இருக்கும்படியான எம்பெருமான் திருவடியில் ஆத்ம சமர்ப்பணம் நீ செய்! என்று ஆக்ஞாபிக்கிறது.

---

**பகவானுக்கு எவ்வளவு காருண்யம் பாருங்கள்! இவ்வளவு உக்கிரமாகத் தோன்றியவனுக்கே இத்தனை காருண்யம் என்றால், சாந்தமாகத் தோன்றுகிறவனிடத்திலே எவ்வளவு காருண்யத்தை நாம் பார்க்கலாம்!**

---

**வே**தத்துக்கு ஓம் - பிரணவம்தான் ஆரம்பம். முடிகிறபோதும் ஓம்காரம்தான். இவ்வாறு பிரணவத்தைச் சொல்லாமல் வேதத்தைப் பாராயணம் பண்ணினால் பலனே கிடையாது.

எவனொருவன் அந்தப் பிரணவத்திலே இருக்கிறானோ, அவன்தான் சர்வத்துக்கும் மூலகாரணம்.

'தோன்றுசோதி மூன்றுமாய், துளக்கம் இல் விளக்கமாய்' என்று திருமழிசையாழ்வார் திருச்சந்த விருத்தத்திலே கூறுகிறார். மூன்றிலே தோன்றும் சோதி அவன் என்று அன்வயம் பண்ணிக் கொள்ள வேண்டும் - அ உ ம என்ற மூன்றில்!

சோதி என்றால் பிரகாசம் அல்லவா! வேதம் அவனை ஓரே பிரகாசமாக வர்ணிக்கிறது.

வித்யாரண்யர் அதற்கு பாஷ்யம் எழுதுகிறார் :

பிருஹத் ஜோதி யார்? பெரிதாய் இருக்கக்கூடிய ஒளிப்பிழம்பு யார் என்றால் அவன்தான் - விஷ்ணு - நரசிம்ஹன்.

அப்படிப்பட்ட பிருஹத் ஜோதியான பரமாத்மா பிரணவத்திலே பிரகாசிக்கிறான். நரம் கலந்த சிங்கமான அவன்தான் பிரணவத்திலும் ஜொலிப்பவன்; காயத்ரியிலே பிரகாசிக்கக்கூடியவன்.

அதர்வண வேதம் ரொம்ப அழகாகச் சொல்கிறது - நரசிம்ஹ அவதாரத்தை 'எலக்ட்ரிசிடி' என்கிறது. அது ஒரு கரன்ட்! வித்யுத் சக்தி. கரன்டைத் தொட்டோமானால் கெட்டியாகப் பிடித்துக்

கொண்டுவிடும் நம்மை! நரசிம்ஹனுக்கும் அடித்த கை பிடித்த பெருமான் என்று பெயர்!

தன்னை அடித்த ஹிரண்யனின் கையை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு விட்டான் எம்பெருமான். மற்றொரு கையால் சிரஸை – சிகையைக் – கெட்டியாகப் பிடித்துக் கொண்டானாம்.

ஏன் அவ்வாறு கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் என்று கேட்டால், அந்தப் பிடி மூலமாகவே தன் பலத்தைக் காட்டினானாம் பரமாத்மா. 'இந்த முட்டாள் நம்மோடு சண்டை போடுகிறானே! இந்த ஒரு பிடியே ம்ருத்யு பிடியாக இருக்கிறதே என்று விழுந்து சரணாகதி பண்ணுகிறானா பார்ப்போம்' என்ற எண்ணத்துடன் ஹிரண்ய கசிபுவின் சிரஸைப் பிடித்தானாம். சரணாகதி பண்ணினால் இவனை மன்னித்து விட்டு விடுவோம்' என்று நினைத்தானாம்.

பகவானுக்கு எவ்வளவு காருண்யம் பாருங்கள்! இவ்வளவு உக்கிரமாகத் தோன்றியவனுக்கே இத்தனை காருண்யம் என்றால், சாந்தமாகத் தோன்றுகிறவனிடத்திலே எவ்வளவு காருண்யத்தை நாம் பார்க்கலாம்!

அவ்வளவு உக்ரமாக வருகிறான் பரமாத்மா! அவன் வரக் கூடிய வேகத்தைச் சொல்லும்போது, 'மேகம் எப்படிப் போகிறதோ அப்படி வேகமாகச் செயல்



முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

பட்டான்' என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

அப்படி வேகமாகப் பாய்ந்து வந்தவன் ஹிரண்யனை ஒரு பிடி பிடித்து விட்டான். அப்போதாவது வழிக்கு வருகிறானா என்று பார்ப்பதற்கு. அப்புறம்தான் அவனை முடித்தான்.

அளந்து இட்ட தூணை அவன்தட்ட, ஆங்கே
வளர்ந்திட்டு வாள் உகிர்ச் சிங்க உருவாய்
உளந்தொட்டு, இரணியன் ஒண்மார்வு அகலம்
பிளந்திட்ட கைகளால் சப்பாணி
பேய் முலை உண்டானே சப்பாணி

என்கிறார் பெரியாழ்வார்.

அளந்திட்ட தூண்! அவனே – ஹிரண்யனே – அளந்து இட்ட தூணாம் அது. வேறு இடத்தைச் சொன்னால், ஏற்கெனவே வந்து புகுந்து கொண்டு உட்கார்ந்திருப்பான் என்று, தானே பக்கத்திலிருந்து தேர்ந்தெடுத்தானாம் தூணை. தானே கட்டிய தூணைத் தேர்ந்தெடுத்தானாம்!

எப்பேர்ப்பட்ட தூண் அது...? தங்கச் செங்கல் வைத்துக் கட்டிய தூண். அந்தத் தூணைத் தட்டியதும் தோன்றினான் நரசிம்ஹன். ஹிரணியனோடு சண்டை போட்டான். பலத்தைக் காட்டினான். அப்புறம் மடியிலே படுக்க வைத்துக் கொண்டு அவனை உளந் தொட்டான்!

– அதாவது ஹ்ருதயத்தையும் தொட்டுப் பார்த்தான் பரமாத்மா! இத்தனை நாள் நம்மோடு சண்டை போட்டது, நம்மை வைத்து, நம்மைத் தூற்றியதெல்லாம் ஹ்ருதயத்தளவிலா இல்லாவிட்டால் வாயளவிலா? வாயளவிலானால் விட்டு விடுவோம். ஹ்ருதயத்தளவில் இருந்தால் அவனைக் காப்போம். அப்போதும் பரீட்சை பண்ணிப் பார்க்கிறான் பகவான்.

ஹ்ருதயத்தளவில் எதிர்ப்பு இருந்ததால் தான் ஹிரணியனை அவன் முடித்தான்.

எத்தனை காருண்யம் அவனுக்கு! இறுதி வரைக்கும் அவனிடத்தில் சரணாகதி பண்ண நமக்குச் சந்தர்ப்பம் தருகிறான்.

அந்தச் சரணாகதியையும் ரொம்ப சுலபமாக்கித் தந்திருக்கிறான்.

**வா**ஜபேய மகா யக்ஞம் என்று உண்டு. அதைச் செய்பவர்கள் வந்தனத்துக்கு உரியவர்கள். வாஜபேய யக்ஞ ஸ்வரூபனாகவே விஷ்ணு இருக்கிறான என்று வேதம் கொண்டாடுகிறது.

இந்த யக்ஞத்தில் அவன் ஹோமகுண்டத்தில் உயர்ந்த ரதத்தில் காட்சியளிப்பான். அர்ஜுனனின் தேர்த் தட்டிலே எப்படி அமர்ந்திருக்கிறானோ அப்படி ரதத்திலே ஏறி வருவான் பரமாத்மா. மற்ற எந்த இடத்திலும் அவன் இவ்வாறு ரதத்தில் ஏறி வருவதில்லை. வாஜபேய யக்ஞத்திலே மட்டும் அப்படி ரதத்திலே அழகாக வருகிறான். குதிரையைத் தட்டிக் கொடுத்துக் கொண்டு வருகிறானாம்.

அப்படிப்பட்ட எம்பெருமான் பெருமையை வாஜபேய யக்ஞம் பண்ணியவர்கள் எத்தனையோ பேர் உணர்ந்திருக்கிறார்கள். பாரத நாடெங்கும் அவர்கள் பரவியிருந்தார்கள்.

இப்போது அந்த யக்ஞம் பண்ணக்கூடிய

**அருள்வாக்கு**

**எ**னக்கு முன்னால் வாழைப்பழச் சீப்பு வைத்திருக்கிறது. "இதைப் பார், இது மஞ்சளாக இருக்கிறது" என்று நான் சொன்னால் இது மஞ்சளாகத்தான் இருக்கிறது என்று காண்கிறீர்கள். அதற்கு மேல் மனசில் அதைப் பற்றி எந்தப் பிரதி சிந்தனையும் (Reaction) எழுவதில்லை. மாறாக, இதே வாழைப்பழத்தைக் காட்டி, "இதோ பார், இது சிவப்பாக இருக்கிறது" என்று நான் சொல்லியிருந்தால்? உடனே உங்கள் மனசில் ஓர் ஆட்சேப உணர்ச்சி எழுந்திருக்கும். இது மஞ்சள் என்றோ, சிவப்பு என்றோ நான் சொல்லாமல், "இந்த வாழைப்பழம் சிவப்பாக இருப்பதாக நினைத்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னால் அப்போது உங்கள் மனசில் ஒருவிதமான பிரதி உணர்ச்சி உண்டாகிறது. மஞ்சள் பழத்தையே சிவப்பாக இருப்பது போல் உங்கள் மனசினால் கற்பனை செய்து பார்க்கிறீர்கள். மனசை ஒருமுகப்படுத்தினால் அப்படிப் பாவிக்கவும் முடிகிறது.



உபாசனை என்பது இப்படிப்பட்டதுதான். பரம்பொருள் இப்படி இப்படி இருப்பதாக பாவியுங்கள் என்று பலவிதமான குணங்களைக் கொண்ட பல மூர்த்திகளைக் காட்டிக் கொடுக்கிறது உபாசனா மார்க்கம். வாழைப்பழம் உண்மையில் மஞ்சள் நிறம் என்பது போல் பரமாத்மாவின் உண்மைக் குணம் என்ன? அது குணம் கடந்தது என்பதே. பரமாத்மா எல்லா குணமும் கடந்த வஸ்து என்று சொல்லிவிட்டால், அப்புறம் ஜனங்களின் மனசு அதில் மேற்கொண்டு நிற்பதற்கு இடமே இல்லை. இது நமக்குப் புரிபடாத வஸ்து என்று விட்டு விடுவார்கள். வாழைப்பழத்தைச் சிவப்பு என்று சொன்னதை மனசு ஆட்சேபித்தது போல், ஒரு சிலையைக் காட்டி இதுதான் பரமாத்மா என்றால் அதை எவராலும் ஏற்க முடியாது. 'இது ஒரு கல் பொம்மை அல்லவா? இது எப்படி உலகத்தை நடத்துகிற பரமாத்மா சக்தி ஆகும்?' என்று தோன்றும். ஆனால் ஒரு சிலையைக் காட்டி, "இதைப் பரமாத்மா என்று பாவியுங்கள்" என்றால் அப்படிப் பாவிக்க முடிவதாகத் தோன்றும் – வாழைப் பழத்தைச் சிவப்பாகக் கற்பனை செய்வதுபோல். ஆனால் சிவப்பு என்றால் என்னவென்று மனசுக்குத் தெரிவதுபோல் பரமாத்ம லட்சணம் தெரியாதே! அதனால் விக்கிரகத்தை 'ஏதோ பெரிய வஸ்து' என்று சிறிது எண்ணிப் பார்க்கலாமே தவிர அதிலேயே ஆழ ஊன்றி நிற்க முடியாது. தெரிந்த விஷயங்களில்தான் மனசு பிடிமானத்தோடு நிற்கும். எனவே ஒரே காருண்யமும் சௌந்தரியமும் வழிகிற மாதிரி ஸ்திரீ ரூபத்தில் விக்கிரகம் செய்து, "இதில் பரமாத்மா தாயாராக வந்திருக்கிறார் என்று பாவனை பண்ணு" என்றால் மனசு அதை நன்றாகக் கிரகித்துக் கொண்டு அப்படியே ஆழ்ந்து ஈடுபட முடிகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

அதிகாரிகளே குறைந்து வருகிறார்கள். அதைப் பண்ணக் காண்பதே அரிதாக இருக்கிறது.

அப்படிப்பட்ட வாஜபேய மகாயக்ஞத்தைப் பண்ணினால் என்ன பலனை நாம் அடைவோமோ அதே பலனை ஓம் விஷ்ணவே நம: என்று சொல்வதனாலே அடைகிறோம்.

அந்த யக்ஞத்தை மறந்து விடு; ஸஹஸ்ர நாமத்தைச் சொல்லு. அங்கேயும் ஆராதிக்கப்படுகிறவன் விஷ்ணு. அவனேதான் இங்கேயும் உட்கார்ந்திருக்கிறான். அது ஒரு கர்மாவைப் பற்றி அவனைப் பற்றுதல். இது நேரடியாகவே அவனைப் பற்றுதல். இதுவல்லவா இன்னும் விசேஷம்; இன்னும் சுலபமான மார்க்கம்!

பகவானே கீதையில் சொன்னான். மற்றது எல்லாவற்றையும் விட்டுவிடு என்றான். உன்னால் பண்ண முடியாத காரியங்களையெல்லாம் விட்டு விடு என்றான்.

'அப்படி எல்லாவற்றையும் விட்டு விட்டால் உன்னையே சரணமாகப் பற்றினால், அவைகளையெல்லாம் பண்ணாமல் போனால் தோஷமில்லையா?' என்று நாம் கேட்கலாம்.

பகவான் பதில் சொல்கிறான் :

"தோஷமேயில்லை! அவற்றையெல்லாம் நீ பண்ணினாயானால் என்ன திருப்தி ஏற்படுமோ அதே திருப்தி என்னைப் பற்றுவதனால் ஏற்படுகிறது" என்கிறான்.

ஆகையினால் ஏழை, எளியவர்கள் எல்லோருக்குமே சுலபமான விஷயம் ஸஹஸ்ரநாம அனுசந்தானம். விஷ்ணு என்ற சப்த மகிமை அது.

(தொடரும்)

**தமிழ் நாட்டில் இப்போது லேட்டஸ்ட் ஹீரோ திருவள்ளுவர்தான். திருவள்ளுவர் சிலை திறப்பு விழாவை அடுத்து, புதிய தமிழகம் கட்சித் தலைவர் டாக்டர் கிருஷ்ணசாமி வேறு ஊர் ஊராக திருக்குறள் நூலகம் ஆரம்பிக்கப் போகிறாராம். ஜெ சும்மா இருப்பாரா?**

# வாழ்க வள்ளுவர்!

**ஜெ**யலலிதா: கருணாநிதி 133 அடி உயரத்துல திருவள்ளுவருக்குச் சிலை வச்சிட்டார், ஏதோ திருவள்ளுவரே தி.மு.கவுக்குத்தான் சொந்தம்கிற மாதிரி. நாம்ப ஏமாந்துட்டோம்!

**காளிமுத்து:** நாம்ப 1330 அடில சிலை பண்ணி, ஊட்டியில தொட்டபெட்டா சிகரத்துல வச்சுப்புடுவோம்!

**ஜெ:** என்ன பேசறீங்க? கன்யா குமாரி மாதிரி, தொட்டபெட்டாவுக்குப் படகுல எல்லாம் போக முடியாது. தெரியுமில்லே?

**காளி:** ஹெலிகாப்டர் சர்வீஸ் வச்சிடலாம். சிஎன்டர்பிரைசஸ் ஒரு விமான சர்வீஸ் ஆரம்பிச்சிட முடியாதா? நீங்கதான் பார்ட்னர்.

**ஜெ:** நான் பார்ட்னரா? பயம்மா இருக்கு.

**காளி:** முதலமைச்சரா இருந்தபோதே பயப்படாத நீங்க, இப்ப பயப்படலாமா?

**மதுசூதனன்:** இந்தத் திருவள்ளுவர் விவகாரமே வேணாம்பேன். சுத்த ராசியில்லாத சமாசாரம்ங்க. வள்ளுவருக்கும் ஆட்சிக் கவிழ்ப்புக்கும் நிறையத் தொடர்பு இருக்கு. கருணாநிதி எப்ப எல்லாம் வள்ளுவர்னு எதையானும் ஆரம்பிச்சாரோ, அப்ப எல்லாம் ஆட்சி அவர் கைய உட்டுப் போய்க்கிட்டே இருந்துதே, தெரியாதா?

**ஜெ:** அப்டியும் ஒரேயடியா போயே போயிடலியே? இடைவேளைல போற மாதிரி போயிட்டு மறுபடி இல்ல திரும்ப வந்துடறாரு? நாம்பளும் திரும்ப வரணும்னா வள்ளுவர் சிலை ரூட்தான் சரியா இருக்கும் போலத் தோணுது.

**காளி:** அதுலயும் 1330 அடி சிலை. நல்ல நெத்தியடி மாதிரி இருக்கும்.

**ஜெ:** 1330 அடி உயரமா? பண்ணி முடிக்கறதுக்கே பல வருஷம் ஆயிடுமே? 2001 தேர்தலுக்கு முன்னால முடியாதே?

**காளி:** 1300 அடிக்கு ஒரு பெரிய பீடம் பண்ணிட்டு, 30 அடிக்கு வள்ளுவர் சிலை வச்சிடலாம். அதான் ஈஸி. எப்டி ஐடியா?

**ஜெ:** ஆகா, பிரமாதம். முதல்ல நம்ப பேர் எல்லாம் வரிசையா போட்டு 1300 அடில ஒரு பீடம் பண்ணிடுவோம்.

**மது:** தொட்டபெட்டால அதை வச்ச உடனே, அது மேல நாம்பளே யாராவது ஏறி நின்னு கையால துழாவினா திருவள்ளுவரேகூட சிக்கினாலும் சிக்கிடுவார். சிலைக்குப் பதிலா அவரையே பீடத்துல நிக்க வச்சுடலாம். சிலை பண்ற செலவும் மிச்சம்! புதுமையாவும் இருக்கும். கருணாநிதியே அசந்துடுவார்.

**காளி:** இண்டலா பண்றீங்க? அவர் பாட்டுக்கு, கால் வலிக்குதுன்னு மறுபடி மேலே போய் மேகத்துல மறைஞ்சிட்டார்னா?

**ஜெ:** மேலே போனாக்கூட பரவால்லியே! கீழே தொட்டபெட்டாலேருந்து 'தொபுகடீர்'னு விழுந்து வச்சார்னா? கொஞ்சமாவது யோசிச்சுப் பாத்தீங்களா? கணபதி ஸ்தபதியைக் கேட்டுப் பார்ப்பம், பீடத்தை முன்னால செஞ்சுடலாமான்னு.

**பி.எச். பாண்டியன்:** ஒரு ஐடியா: பண்ருட்டியார், எஸ்.டி.எஸ்., கே.ஏ.கே. மூணு பேரும் நம்ப கட்சில சேர்ந்தப்புறம் சிலை வைக்கலாமே?

**ஜெ:** அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? அவங்க யாரும் திருவள்ளுவருக்கு உறவா என்ன?

**பாண்டியன்:** இல்லே. அப்படி நாம்ப ஆட்சியப் பிடிக்க முடியலேன்னா இவங்க மூணு பேர்தான் அதுக்குக் காரணம்னு சொல்லிடலாமே? நாம்ப திருவள்ளுவர் சென்டிமென்ட்டுக்குப் பயந்தவங்க இல்லேன்னும் காமிச்சுக்கலாம்.

**ஜெ:** இதை வெளில யார்ட்டயும்

சொல்லிடாதிங்க. அப்றம் மூணு பேரும் கட்சில மறுபடி சேரவே யோசிக்க ஆரம் பிச்சுடுவாங்க!

**தினகரன்:** திருவள்ளுவர் உக்காந்திருக் கணுமா, நின்னுட்டிருக்கணுமா? நிக்கற திருவள்ளுவர் வச்சாத்தான் ஆட்சியும் நிக்கும்.

**ஜெ:** பிரமாதமான லாஜிக். அப்றம், கருணாநிதி 'அய்யன் திருவள்ளுவர்'னு இப்பப் புதுசா சொல்ல ஆரம்பிச்சிருக்கார். நாம்பளும் புதுசா எதுனா வச்சாத்தான் நல்லது. வீரமணி, என்ன ஒண்ணுமே பேசாம இருக்கிங்க?

**வீரமணி:** நமக்கு ஐயான்னு



சொல்லித் தான் வழக்கம். அத னால திருவள்ளுவர் ஐயான்னு சொல்லிடலாம். ஆனா அதுக்கு முன் னாடி சிலை பண்ற வழி பாருங்க.

**ஜெ:** எலெக்ஷனுக்கு முன்னாடி எப்டி யாவது சிலை வச்சிடணும். எப்படின்னு தான் புரியலே.

**மதுசூதனன்:** ஏங்க, 1300 அடிக்கு மேல சிலை வைச்சா, எவனுக்கு மூஞ்சி-முகம் எல் லாம் தெரியப் போவுது? வள்ளுவர் மாதிரி ரெடிமேடா இருக்கற சாமியார் சிலை எதுனா கிடைச்சா பீடத்துல வச்சுட்டு அக்க டான்னு நாம்பளும் உக்காந்துரலாம்.

**வீரமணி:** ப்ளேன்ல போறவங்க ஜன்னல் வழியாப் பார்த்து, கண்டுபிடிச்சிட்டாங் கன்னா? பெரிய விவகாரமாப் போயிடுமே? அப்படியே வேற சிலை வைக்கிறதுன்னா பெரியார் சிலையே வச்சிடலாமே?

**ஜெ:** ஜெயா டீ.வில ஒரு சேனல் தரோமே, அது போதாதா?... இப்பப் பேச்சு வள்ளு வர் சிலைதான். பெரியார் சிலை இல்லே. பெரியார் சிலைக்கு வேணும்னா தனியா அஞ்சு லட்ச ரூபாய் கொடுத்துட றேன்.

**வீரமணி:** ஆகா, பெரிய மனசுன்னா இது தான்! நாளைக்கி செக் வாங்கிக்கிடவா?

**ஜெ:** (கண்டுகொள்ளாத மாதிரி) இப்ப, ரெடிமேட் வள்ளுவர் சிலைக்கு வழி என்ன? அதைச் சொல்ல மாட்டேங்கறீங்களே?

**பாண்டியன்:** வள்ளுவர் சிலையினால பாதகம்தான் வரும்னு தெரிஞ்சும் ஏங்க வைக்கணும்? நல்லா யோசிங்க.

**காளி:** இதுல யோசிக்கறதுக்கு என்ன இருக்கு? அம்மா சொல்லிட்டா செஞ்சுட வேண்டியதுதானே! திருவள்ளுவர் சிலை



"'அதெல்லாம் கல்யாணம் முடிவான பிறகுதான்னு' என் காதலி தீர்மானமா சொல்லிட்டா!"

"அப்படி என்ன கேட்டே?"

"அட்வான்ஸ் வரதட்சணை!"

– ஞா. ஞானமுத்து



**"தூங்கிக்கிட்டு இருக்கும்போது கட்டில்ல இருந்து கீழே தள்ளி விடறா, கால் இடறி விழ வைக்குறான்னு உன்னைப் பத்தி எங்க அம்மா புகார் சொல்றாங்களே, உண்மையா?"**

**"உங்க அம்மாவை பேசி ஜெயிக்க முடியலே! அதான் 'கொரில்லா போர்' நடத்தறேன்!"**

– நெல்லையப்பபுரம் செல்வன்



"சொந்தக்காரங்களுக்கு எல்லாம் சொல்லி அனுப்பிடுங்க..."

"என்னாச்சு, சிஸ்டர்?"

"ஆபரேஷன் பண்ணியே தீருவேன்னு டாக்டர் அடம்பிடிக்கிறார்!"

– எஸ்.எஸ். பூங்கதிர்

திறப்பு விழான்னு இப்ப கருணாநிதி அமர்க்களப் படுத்திட்டாரே!

**பாண்டியன்:** குறளோவியம்னு பெரிசா எழுதிட்டாராம். அதுனாலயே வள்ளுவர் கோட்டத்துல 133 பெரிய சைஸ் ஓவியங்கள் வைக்கப் போறாராம். அவருக்கு வேண்டப்பட்ட ஆட்களுக்கு கான்ட்ராக்ட் கொடுக்க இது ஒரு வழி. பீட்டர் அல்ஃபோன்ஸ் தூங்கிட்டிருக்காரான்னு தெரியலே... அம்மா, நீங்க திருக்குறளுக்குப் பதவுரை, பொழிப்புரை ஏதும் எழுதலியா?

**காளி:** அம்மாக்கு ஏதுங்க நேரம்? ரெடிமேடா ஏதானும் புத்தகம் எழுதி, அம்மா பேரு போட்டுடலாம். அடுத்ததா சிலை வச்சிடலாம்.

**ஜெ:** ஐயோ, நாம்ப புஸ்தகம் எழுதி, சிலை பண்ணிட்டு உக்காந்திருந்தா கருணாநிதி ஈஸியா மறுபடி பதவிக்கு வந்துருவார். நான் முடிவு பண்ணிட்டேன். திருவள்ளுவருக்குச் சிலை ஏதும் இப்ப வைக்க வேணாம். தேர்தல்ல ஜெயிச்சப்புறம் பார்த்துக்கலாம்!

*(அவசரமாக செங்கோட்டையன் ஓடி வருகிறார்...)*

**செங்கோட்டையன்:** போச்சு! மோசம் போய்ட்டோம். இதுக்குத்தான் அப்பவே சொன்னேன்...

**ஜெ:** பதறாம விஷயத்துக்கு வாங்க.

**செங்:** எங்களை மூப்பனார் வீட்டுக்கு அனுப்பிட்டு நீங்கள்ளாம் இங்கே டான்ஸி நிலத்துல திருவள்ளுவர் சிலை டிஸ்கஷன் பண்றதைப்பாத்து சதி நடந்திருக்கு...

**பாண்டியன்:** என்ன சொல்றீங்க...

**செங்:** போயஸ் தோட்டத்துல யாரோ ரெடிமேடா வள்ளுவர் சிலையைக் கொண்டு வைச்சிருக்காங்க...

**ஜெ:** இது ஆளுங்கட்சியோட சதி!

**பாண்டியன்:** இருங்க! அறிக்கையை எழுதிக்கிறேன்...

**ஜெ:** தேர்தல் களத்தில் நான் ஜெயித்து விடுவேன் என்று பயந்து, நான் ஆட்சி அமைக்கும் முன்னரே அதைக் கவிழ்க்க வள்ளுவர் சென்டிமென்ட் என்கிற துராயுதத்தைப் பயன்படுத்தும் கோழை கருணாநிதி...

**காளி:** சீக்கிரம் ஃபேக்ஸ் மிஷினை ஆன் பண்ணுங்க. பத்திரிகைங்களுக்கு அனுப்பிடலாம்.

**வீரமணி:** கருணாநிதி ஒழிக! வள்ளுவர் வாழ்க! அம்மா அதனினும் நீடூழி வாழ்க!

கற்பனை: **சாருகேசி**



'**தா**ய்க்குலமே'ன்னு அன்பா கூப்பிட்டு, 'உன் மெடிக்கல் படிப்பை முடிச்சிட்டியா?'ன்னு அக்கறையா கேட்டிருக்கார் மும்பை ஸ்ரீனிவாசன்.

ஏன் சார் பழைய, கெட்ட கனவுகளைக் கிளர்றீங்க? வுட்ருங்க. நான் இப்ப ஃபுல் டைம் காலம்னிஸ்ட். விஷயத்துக்கு வருவோம்.

என் அறுவை ஜோக்குகளை ஏன் பப்ளிஷ் பண்ணலைன்னு சார் சண்டைக்கு வர்றார். நான் என்னிக்காவது அறுவை ஜோக் தந்திருக்கேனா? படிச்சதும் குபீர்னு சிரிக்க வெக்காத ஜோக் ஒண்ணாவது கொடுத்திருப்பேனா? ஜோக் வறட்சிக் காலங்கள்ல, ஜோக்கே தராம இருப்பேனேயொழிய, நோ அறுவை பிஸினஸ்.



பை த வே, ஒரு (அறுக்காத) ஜோக், பை ராணி குருநாதன் :

தன் மனைவிக்காக ஒருவன் கார் கதவைத் திறந்து விட்டால் அதற்கு இரண்டு காரணங்கள்தான் இருக்க முடியும்.

1. கார் புதுசு. (அல்லது)
2. மனைவி புதுசு.

# தாய்க்குலமே படிப்பை முடிச்சியா?

* * *

**பெ**ங்களூர்ல பொங்கல் கொண்டாடினேன்- போகி புகை கிடையாது; ரோட்ல காணும்பொங்கல் கும்பல் கிடையாது; ஆட்டோக்காரங்க அடாவடி; பிதுங்கற பஸ்கள்னு அடையாளம் எதுவுமில்லாத பொங்கல். டெக்கான் ஹெரால்ட் பர்ஸ்ட் பேஜ்ல மட்டும் 'சங்க்ராந்தி அட் ஹோம்'னு வீட்டுல சில பெண்கள் டிராயிங் ரூம்ல உட்கார்ந்து பேசிட்டிருக்கற கலர் போட்டோ போட்டிருந்தாங்க! காவிரி தண்ணி தவிர எதுக்காவும் அவசரப்படாத பதற்றப்படாத ஊரு பெங்களூர்னு நினைச்சுட்டு சாயங்காலம் இஸ்கான் கோயில் போனா... திருப்பதி மாதிரி கும்பல். கோயில் கம்மா பளபளன்னு ரஜினி படத்துக்கு செட் போட்டாப்பல இருக்கு. சதா நேரமும் 'ஹரே ராமா ஹரே கிருஷ்ணா' லவுட் ஸ்பீக்கர்ல ஒலிக்குது. சன்னிதின்றது ஒரு சினிமா ஹால் அளவுக்குப் பெரிசு. எந்த இடத்துல நின்னு பார்த்தாலும் ராதா சமேத கிருஷ்ணர் போஸ் குடுக்கறது அட்டகாசமா தெரியுது! மைக் முன்னால நின்னுக்கிட்டு ஹரே ராம ஹரே கிருஷ்ணான்னு வெள்ளைக்காரங்க மாதிரியே பாடற குழு! மேவார் ராணாவுக்கு மீரா பேர்ல ஏன் கோபம் கோபமா வந்ததுன்னு அப்பத்தான் புரிஞ்சுது.

இன்னொரு பெரிய ஹால்ல வட்ட வட்டமான டேபிள்கள்ல யுவர் பிலஸாபிகல் கொஸ்டியன்ஸ் வில் பி ஆன்ஸர்ட்னு போர்டு எழுதி வைச்சுக்கிட்டு இளம் இஸ்கான்காரங்க சந்தனப் பொட்டும் துளசி மாலையுமா உட்கார்ந்திருக்காங்க. அவங்களைச் சுத்தி மொய்க்கற கும்பல்ல 'வீடு பேறு' முதல் 'வீடு வேறு' வரை தேடுற கண்கள்...

செருப்பு விடற இடம், ஷாப்பிங் சென்டர், பட்சணக் கடைன்னு எல்லா இடத்துலயும் ஜனங்க பவ்யமா கியூவுல வரதப் பார்த்தா இது இந்தியாவான்னு இருக்கு!

ஷாப்பிங் சென்டர்ல நான் என்ன வாங்கினேன் தெரியுமா...? சீக்கிரமா காதை மூடிக்குங்க. டுவென்டி ஃபைவ் ருபீஸுக்கு ஒரு புல்லாங்குழல்.

* * *

**நா**ரதகான சபால துக்ளக் ஆண்டு விழா நடந்ததை வாசல்ல இருந்து கொஞ்ச நேரம் ஸ்கிரீன்ல பார்த்து ரசிச்சேன். (என்ன கூட்டம்ங்கறீங்க?)

துக்ளக்ல வர்ற கேள்வி பதில் பேஜஓட விஷுவல் வர்ஷன் அது! "நீங்க ஏன் வாஜ்பாய்க்கு பதிலா பிஎம். ஆகக் கூடாது?" 'டான்ஸி வழக்கு பற்றி உங்க அபிப்ராயம் என்ன?' 'சுரண்ட் பில்லை இப்படி அநியாயத்துக்கு ஏத்திட்டாங்களே?' அப்படி இப்படின்னு ரீடர்ஸ் மைக்குக்கு வந்து கேட்க, இன்னொரு மைக்ல, சோ தமாஷா பதில் சொல்றார். பிலீவ் இட் – ஆண்டு விழால இதைத் தவிர வேற எதுவும் கிடையாது! ஒரு வரவேற்புரை? ஒரு தலைவர் உரை? ஒரு வாழ்த்துரை? ஒரு மாலை? பொன்னாடை...?

ம்ஹூம்! இட்'ஸ் டிஃபரன்ட்!

— சுமி



• விருது பெறும் கோபுலு...

# ஜெயலலிதாவை மறந்த தமிழ்க்குடிமகன்!

"ஒரு ஜமீன்தாரின் சபையில் பாட வந்தார் இசைக் கலைஞர் ஒருவர். அவை கூடியது. முதலில் தோடி ராகத்தில் ஒரு சாகித்தியத்தைப் பாடினார். அசந்தார் ஜமீன்தார். குஷியில், 'தங்கக் காசு எடுத்து வா' என்று உதவியாளருக்கு உத்தரவிட்டார். தொடர்ந்து, கல்யாணி, காம்போதி, மற்றும் பைரவியில் வெளுத்துக் கட்டினார் பாடகர். ஒவ்வொரு முறை பாடி முடித்ததும் ஜமீன்தார் 'யாரங்கே வெள்ளித் தட்டு கொண்டு வா. வைர மோதிரம் கொண்டு வா; பட்டு பீதாம்பரம் எங்கே...' என்று உதவியாளருக்கு உத்தரவு போட்டுக் கொண்டிருந்தார். ஜமீன்தாரின் பரிசு மழையைக் கண்ட பாடகர், உற்சாகமாக, உயிரைக் கொடுத்துப் பாடி முடித்தார். பின்னர் விடைபெற்றுப் போக ஜமீன்தார் முன்னால் வந்தார்.

"சபாஷ்... நன்றாகப் பாடினீர்; போய் வாரும்" என்றார் ஜமீன்தார். தயங்கினார் பாடகர். 'என்ன?' என்று கண்களாலேயே கேள்வி கேட்டார் ஜமீன்தார். 'ஐயா... தங்கக் காசு, வைர மோதிரம், வெள்ளித் தட்டு பரிசாகச் சொன்னீர்களே' என்று தயங்கிச் சொன்னார் பாடகர். 'ஓ அதுவா!' என்று கேட்ட ஜமீன்தார் கலகலவெனச் சிரித்தார். பின்பு சொன்னார். "ஐயா... பாடகரே! நீர் என் காதுகளுக்கு இனிமையாகப் பாடினீர். நானும் உம்மை உற்சாகப்படுத்தும் வகையில் உமது காதுகளுக்கு இனிமையாக தங்கக் காசு, வைர மோதிரம் என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தேன்; அவ்வளவுதான்." வெறுப்பின் உச்சியில் வெறுங்கையுடன் திரும்பினார் பாடகர்." - 'முரசொலி' அறக்கட்டளையின் கலைஞர் விருது வழங்கும் விழாவில் எழுத்தாளர் சாவி சொன்ன கதை.

விருது பெற்ற தமிழறிஞர் வ. அய். சுப்பிரமணியம், டைரக்டர் ஸ்ரீதர், ஓவியர் கோபுலு ஆகியோரின் சாதனைகள், சிறப்பம்சங்கள் பற்றி 'சைடேஷன்' படித்தார்கள். ஸ்ரீதரைப் பற்றிச் சொல்லும்போது அவர் அறிமுகப்படுத்திய நடிக, நடிகையரைப் பற்றியும் குறிப்பிட்டார்கள். 'ஜெயலலிதா' பெயர் அந்தப் பட்டியலில் இல்லை. சைடேஷனைப் படித்த மாறன், "இதை எழுதிய தமிழ்க்குடிமகன் ஜெயலலிதாவை விட்டு விட்டார்!" என்று சொல்லி அவரது பெயரையும் சேர்த்துப் படித்தார். அரங்கம் கலகலத்தது.

— ஆர்.எஸ்.

படம் : பி.கே.எம்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

